# உண்மை விளக்கம்

## முன்னுரை

சைவ சித்தாந்தம் என்றும் அழியா உண்மைப் பொருள்களாக மூன்று பொருள்களைக் கொள்ளும். அம்முப்பொருள்களை மேற்பொருள், இடைப்பொருள், கீழ்ப்பொருள் என்று குறிப்பிடலாம். மேற்பொருளாய் இருப்பது இறை. இடைப்பொருளாய் இருப்பவை உயிர்கள். கீழ்ப்பொருளாய் உள்ளவை உயிர்களைப் பற்றியுள்ள மலங்கள்.

## மேற்பொருள்

இறைவன் எல்லாப் பொருள்களையும் தன்னுள் அடக்கிக் கொண்டு நிற்கின்ற பெரும் பொருளாக உள்ளான். அவனது பெரு நிறைவை எவ்வாறு உணர்ந்து கொள்வது? ஓர் எடுத்துக்காட்டின் மூலம் அதனை ஒருவாறு விளங்கிக் கொள்ளலாம்.

நமக்குத் தெரிந்த பொருள்களிலே மிகவும் பெரியது வானமே. வானம்தான் எல்லாப் பொருள்களுக்கும் இடம் தந்து நிற்கிறது. நிலம், நீர், தீ, காற்று முலியவற்றைத் தன்னகப்படுத்தி நிற்கிறது. எண்ணற்ற கோள்களையும், விண்மீன்களையும் தன்னுள்ளே தாங்கி நிற்கிறது. அந்த வானைப் போல இறைவன் எல்லாவற்றையும் தன்னுள்ளே அடக்கிக் கொண்டு நிற்கின்றான். எல்லாவற்றிற்கும் தானே ஆதாரமாக நிற்கின்றான். எல்லாவற்றையும் அவனே செயற்படுத்துகின்றான். இதனால், அவனே மேற்பொருள் என்பது விளங்கும்.

## இடைப்பொருள்

உயிரை வடமொழியில் ஆன்மா என்றும், சீவன் என்றும், சீவான்மா என்றும் வழங்குவர். உயிர்கள் எண்ணற்றவை. உயிர்கள் இறைவனிடத்தில் அடங்கியிருப்பவை. இறைவனது பெருநிறைவு, வியாபகம் எனப்படும். அதனுள் அடங்கி நிற்கும் நிலை வியாப்பியம் எனப்படும்.

அம்முறையில் இறைவன் வியாபகம்; உயிர்கள் இறைவனிடத்தில் வியாப்பியம். உயிர் தனக்குக் கீழ்ப்பட்ட பொருள்களாகிய மலங்களின் தொடர்பினால் அறிவு மயங்கித் துன்புறும்; பின் அவற்றின் பிடியிலிருந்து

விடுபட்டு மேற்பொருளாகிய இறைவனைச் சார்ந்து இன்புறும். இவ்வாறு மேற்பொருள்; கீழ்ப்பொருள் ஆகிய இரண்டின் வசப்படுவதாய், அவ்விரண்டிற்கும் இடைப்பட்டதாய் நிற்பதால் உயிர் இடைப் பொருள் ஆயிற்று.

## கீழ்ப்பொருள்

மேற்பொருளாகிய கடவுளும், இடைப்பொருளாகிய உயிரும் அறிவுடைப் பொருள்கள். அவை சித்து எனப்படும். கிழ்ப்பொருளாகிய மலம் ஆணவம், மாயை, கன்மம் என மூவகைப்படும். இவை அறிவற்றவை. இவை சடம் எனப்படும். இம் மூன்றும் உயிரைத் தம் வயப்படுத்தி உயிரின் தூய்மையைக் கெடுத்து நிற்றலாலும் பின்னர் அகற்றப்படுதலாலும் மலம் எனப்பட்டன. மலம் என்பதற்கு அழுக்கு என்று பொருள்.

## கடவுளும் உயிரும்

கடவுளும் உயிரும் சித்து என்ற வகையில் ஓரினம் என்றாலும் அறிவு நிலையில் தம்முள் வேறுபட்டனவாகும். கடவுளது அறிவு பேரறிவு. உயிரினது அறிவு சிற்றறிவு. கடவுளது அறிவு தானே அறிவது, உயிரினது அறிவு அறிவிக்கவே அறிவது. கடவுளது அறிவு எல்லாவற்றையும் ஒருங்கே அறிந்து நிற்பது. உயிரினது அறிவு ஒவ்வொன்றாகவே அறிந்து வருவது. கடவுளது அறிவு எதிலும் தோயாமல் தனித்து நின்று அறிவது. உயிரினது அறிவு அறியப்படும் பொருளில் தோய்ந்து, அதிலே அழுந்தி அதன் வண்ணம் ஆவது. இத்தகைய தனித்தன்மைகளால் கடவுளும் உயிரும் ஒரு நிகரன அல்ல என்பது விளங்கும்.

## உயிரும் மலங்களும்

கடவுட் பொருள் மிக நுண்ணியதாய் இருத்தலின் ஆணவம் முதலிய மலங்களால் பற்றப்படுதல் இன்றி, என்றும் தூயதாய் நிற்பது. கடவுளை நோக்க உயிர் பருமையானது ஆகலின் அம்மலங்களால் பற்றப்படுதற்கு உரியதாயிற்று. இதற்கு ஓர் எடுத்துக்காட்டுக் கூறலாம்.

கடலாகிய இடத்தில் நீர் நிரம்பியிருக்கிறது. அந்நீர் முழுதையும் உப்புப் பற்றியிருக்கிறது. கடல் இடம் என்பது நுண்ணியது ஆகலின் பருமையான உப்பு நுண்ணிய கடல் வெளியைப் பற்ற மாட்டாமல், பருமையான நீரையே பற்றுவதாயிற்று. அந்த உப்பைப் போன்றவை மலங்கள். கடல் நீரைப்

போன்றவை உயிர்கள். கடல் வெளியைப் போன்றவன் இறைவன். மலங்கள் இறைவனைப் பற்ற மாட்டாமல் உயிரையே பற்றியிருப்பதற்கான காரணத்தை இவ்வுவமையிலிருந்து ஒருவாறு தெரிந்து கொள்ளலாம்.

## ஆணவம்

இறைவன் இல்லாத இடம் எதுவும் இல்லை. பார்க்குமிடம் எங்கும் நீக்கமற்ற நிறைகின்ற பரிபூரணப் பொருள் அவன். அவன் எங்கும் இருக்கிறான் என்ற எண்ணம் நமக்கு இருப்பதில்லை. அந்த எண்ணம் இருந்தால் நாம் தவறு செய்வோமா? தீமை செய்வோமா?

**எங்குள் உளன் ஒருவன் காணுங் கொல் என்றஞ்சி**

**அங்கம் குலைவது அறிவு (நீதி நெறி விளக்கம், 94)**

என்றார் குமர குருபர அடிகள். இந்த எண்ணம் எழவொட்டாதபாடி ஆன்மாவினது அறிவைத் தடுத்து நிற்பதாகிய பொருள் ஒன்று உண்டு. அதுவே ஆணவ மலம் எனப்படுகிறது.

எல்லா உயிர்களும் முதலிலிருந்தே ஆணவ மலத்தை உடையவாயின. ஆணவம் நீரை மூடும் பாசி போலவும், கண்ணை மறைக்கும் இருள் போலவும் உயிர்களின் அறிவை மறைத்து நிற்பது. கடவுளுக்கு அடுத்த படியாகப் பெரும் பொருளாய் நிற்கும் உயிரைத் தனது சத்தியால் சிறுமைப்படுத்தி நிற்பது ஆணவ மலமேயாகும். உயிர் அடையும் எல்லாப் பெருங்கேட்டிற்கும் இது மூலம் ஆதலின் மூலமலம் எனப்படும். உயிர் என்று உண்டோ அன்றே அதனோடு இயற்கையாய்க் கலந்து நிற்றலின் சகச மலம் எனப்படும். கண்ணை மறைக்கும் புற இருள் போல இஃது அறிவை மறைக்கும் அகவிருள் ஆகும். அது பற்றி இருள் மலம் எனப்படும். மலம் என்று சொன்னாலே அஃது ஆணவ மலத்தையே குறிப்பதாகும்.

## மாயை

ஆணவ மலமாகிய இருளை நீக்கும் விளக்குப் போன்றது மாயை. மாயையே உயிருக்கு உடம்பாகவும் உடம்பில் உள்ள கருவிகளாகவும் அமைந்து. ஆணவ இருளைச் சிறிது நீக்கி அறிவை விளக்குகிறது. மாயையின் சேர்க்கையால் ஆணவத்தின் சத்தி சிறிது மடங்கிய போது ஆன்மா நுண்ணறிவைப் பெறாது பருமையான அறிவையே பெறுகிறது. அகநோக்கு இன்றிப் புறநோக்கையே உடையதாகிறது. அஃதாவது உள் நோக்கித் தன்னையும் தன்னுள்ளேயிருக்கும் தலைவனாகிய இறைவனையும் உணரமாட்டாமல், புறத்தே உள்ள உலகப் பொருள்களையே நோக்கி நிற்கிறது.

## கன்மம்

இந்நிலையில் ஆணவ மலம் திரிபுணர்வைத் தருகிறது. திரிபுணர்வு எனினும், விபரீத அறிவு எனினும், மயக்கவுணர்வு எனினும் ஒன்றே, இத்திரிபுணர்வால் ஆன்மா தன்னையே எல்லாவற்றிற்கும் வினைமுதலாகக் கருதி நான் நான் என்று முனைத்து எழுகிறது. அம் முனைப்போடு செய்யும் செயலே வினை அல்லது கன்மம் எனப்படும்.

## மும்மலக் கட்டு

மாயை உடம்பாயும் உலகப் பொருள்களாயும் நின்று உயிரைக் கவர்ந்து மயக்குகிறது. கன்மம் அவ்வுலகப் பொருள்களை உயிரோடு கூட்டி இன்பத் துன்பங்களைத் தந்து மயக்குகிறது. ஆணவம் யான் எனது என்னும் பற்றினை உண்டாக்கி உலக நுகர்ச்சியில் ஈடுபடுத்தி மயக்குகிறது. இவ்வாறு இவை மூன்றும் உயிரறிவை உலகத்தோடு பிணிக்கின்றன. இது பற்றியே இவை பாசம் (கட்டு) என்றும், தளை என்றும் கூறப்படுகின்றன.

இம் மூன்றனுள் ஆணவம் என்பது உயிருக்குப் பகையாகிய கட்டு, மாயையும் கன்மமும் அப்படியல்ல. அவை ஆணவமாகிய கட்டினை நீக்கி உதவ வந்த கட்டுக்கள், இதனைப் பின்வரும் எடுத்துக் காட்டினால் விளங்கிக் கொள்ளலாம். அவிழ்க்க முடியாத ஒரு கட்டினை எப்படி அவிழ்ப்பது? அதற்கு ஒரு வழி உண்டு. அதனோடு வேறு சில கட்டுக்களை இட்டு இறுக்கினால் அம் முதற்கட்டு நெகிழ்ந்துவிடும். அதுபோல, உயிரைப்

பிணித்துள்ள ஆணவ மலமாகிய வலிய கட்டினை நெகிழ்விப்பதற்காகவே இறைவன் மாயை, கன்மங்கள் என்று வேறு இரண்டு கட்டுக்களை உயிரோடு சேர்ப்பிக்கின்றான். எனவே ஆணவம் உயிருக்கு முற்கட்டும், மாயை கன்மங்கள் பிற்கட்டும் ஆகின்றன.

## பதி, பசு, பாசம் என்னும் பெயர் வழக்கு

ஆணவம், கன்மம், மாயை ஆகியவை பாசம் என்னும் பெயரைப் பெற, அவற்றால் கட்டுண்டு கிடக்கின்ற உயிர் பசு என்னும் பெயரைப் பெறுகின்றது. இருள் வடிவான ஆணவமும், பிறவித் துன்பத்தைத் தரும் கன்மமும், மயக்கத்தைத் தரும் மாயையும் ஆகிய இம்மும் மலக் கட்டினின்றும் பசுக்களாகிய உயிர்களை விடுவித்துக் காப்பவனாகிய இறைவன் பதி எனப்படுகின்றான்.

மேற்பொருள் என்றும், இடைப்பொருள் என்றும், கீழ்ப்பொருள் என்றும் மேலே நாம் விளக்கிய முப்பொருள்களே பதி, பசு, பாசம் என்னும் இப்பெயர்களால் நூல்களில் குறிப்பிடப் பெறுகின்றன.

## இந்நூலின் பெயர் விளக்கம்

முப்பொருள்களை விளக்கிக் கூறும் சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கு ஆகும். அவற்றுள் ஒன்று உண்மை விளக்கம் என்னும் இந்நூல். இது சித்தாந்த உண்மைகள் அனைத்தையும் மிகச் சுருக்கமாகவும் தெளிவாகவும் எடுத்துக் கூறுவதாய், சித்தாந்தத்தினை அறிய விரும்புவோர் தொடக்கத்தில் கற்பதற்கு ஏற்றவகையில் அமைந்துள்ளது.

எப்பொருளையும் இருவகையாக அறியலாம். ஒன்று, அதன் பொதுமையை மட்டும் உணர்வது மற்றொன்று, அதன் உண்மையை உணர்வது. உண்மையை உணர்வதே மேலானது என்பதைச் சொல்லவும் வேண்டுமோ? உண்மை என்பதை வடமொழியில் தத்துவம் என்று குறிப்பிடுவர். பொருள்களது உண்மையை உணர்விப்பவை தத்துவ சாத்திரங்கள், அத்தகைய தத்துவ சாத்திரமாகிய இந்நூல் முப்பொருள்களது உண்மையை நன்கு விளக்குவது ஆகலின் உண்மை விளக்கம் என்னும் பெயர் பெற்றது.

## நூலின் ஆசிரியர்

இதனைச் செய்த ஆசிரியர் மணவாசகங் கடந்தார் என்பவர். அவர் சந்தான முதற்குரவராகிய மெய்கண்ட தேவரின் மாணாக்கருள் ஒருவர். மற்றொரு மாணாக்கர் அருணந்தி சிவனார். எனவே மனவாசகங் கடந்தார் அவருக்கு ஒருசாலை மாணாக்கர் ஆவார்.

மனவாசகங் கடந்தார் பற்றிய வரலாறு ஒன்றும் நமக்குத் தெரியவரவில்லை. அவர் திருவதிகை(தென்னார்க்காடு மாவட்டத்திலுள்ள பண்ணுருட்டி) என்னும் ஊரினர் என்ற குறிப்பு மட்டும் கிடைக்கிறது. இவரது காலம் மெய் கண்டார் வாழ்ந்த காலமாகிய கி.பி 13 ஆம் நூற்றாண்டு என்பது சொல்லாமலே விளங்கும்.

## நூலை அமைத்துக் கொண்ட முறை

இந்நூல் வெண்பாயாப்பினால் ஆனது. காப்புச் செய்யுள் உட்பட 54 வெண்பாக்கள் உள்ளன.

மனவாசகங் கடந்தார் தாம் வினவிய வினாக்களுக்குத் தம் ஆசிரியர் அருளிய விடையாகவே இந்நூலில் உள்ள பொருள்கள் அனைத்தையும் அமைத்துள்ளார். இவ்வாறு சீடர் ஆசிரியரிடையே நிகழும் உரையாடல் முறையில் வைத்து நம்மனோர் எளிதில் விளங்கிக் கொள்ளும்படியாக உண்மைகளை உணர்த்தியுள்ள ஆசிரியரது திறன் போற்றுதற்குரியது.

முப்பொருள்களை வரிசைப்படுத்தி அமைத்துக் கூறும் முறையில் நூலாசிரியர்கள் வேறுபடுகின்றனர். முதலாசிரியராகிய மெய்கண்ட தேவர் தமது சிவஞான போத நூலில் முப்பொருள்களைப் பதி, பாசம், பசு என முதலில் நிறுத்திப்பின் எதிர்வரிசையில் பசு, பாசம், பதி என வைத்து விளக்கிக் கூறினார்.

அவர்தம் தலை மாணாக்கராகிய அருணந்தி சிவனார் சிவஞான போதத்திற்கு வழி நூலாகத் தாம் செய்த சிவஞான சித்தியாரில் தமது ஞானாசிரியர் மேற்கொண்ட முறையையே தாமும் பின்பற்றி அப்படியே அமைத்துக் கொண்டார்.

இவர்களுக்குப் பின்னர் வந்த உமாபதி சிவனார் தாம் இயற்றிய சிவப்பிரகாசம், திருவருட் பயன் ஆகிய இரு நூல்களிலும் பதி, பசு, பாசம் என்ற வரிசை முறையினையே மேற்கொண்டார்.

இவ்வாறு இவர்கள் பதியை முதலில் வைத்துக் கூறிச்செல்ல, நமது மனவாசகங் கடந்தார் பாசத்தை முன் வைத்துப் பாசம், பசு, பதி என்ற முறையில் வரிசைப்படுத்தி விளக்கிச் சொல்வது புதியதொரு போக்காகும்.

முப்பொருள்களைப் பதி முதலாக எடுத்துச் சொல்வது மேலிருந்து கீழ் நோக்கிச் செல்லும் முறையாகும். பாசத்திலிருந்து எடுத்துச் சொல்வது கீழிருந்து மேல் நோக்கிச் செல்லும் முறையாகும்.

கீழ் உள்ள பொருள்கள் மேல் உள்ள பொருளை விடப் பருமையானவை; ஆதலால் எளிதில் விளங்கக் கூடியவை. மேல் உள்ள பொருள்கள் நுண்மையானவை. ஆதலால் விளங்கிக் கொள்வதற்கு அரியவை.

முப்பொருள்களில் கீழ் உள்ள பாசம் மேல் உள்ளவற்றை விட நமக்கு ஓரளவு தெரிந்த பொருள் ஆகிறது. தெரிந்த பொருளை முதலிற் சொல்லிப் பின் தெரியாததை விளக்குதல் என்பது கல்வி முறையில் பின்பற்ற வேண்டிய ஒன்றாகும். முதலிலேயே தெரியாததை உணர்த்தினால் மாணவர் அதனைப் பற்ற மாட்டாது இடர்ப்படுவர். இதனைக் கருதியே நம் ஆசிரியர் மனவாசகங்கடந்தார் எளிதில் விளங்கக் கூடிய பாசத்தின் இயல்பை முதலில் விளக்கிப் பின் மற்றவைகளின் இயல்பை விளக்கிக் காட்டுகின்றார்.

## இந்நூலின் தனிச் சிறப்பு

முப்பொருளின் இயல்புகளை ஏனைய சாத்திரங்களும் விளக்குகின்றன. அவற்றையே உண்மை விளக்கமும் விளக்குகிறது. அவ்வாறாயின், இந்நூலுக்கென்று வேறு தனிச் சிறப்பு ஏதும் இல்லையோ? என்று கேட்கலாம். ஏனைய சாத்திரங்களில் விளக்கப்படாத ஒரு பேருண்மையை உண்மை விளக்கம் விளக்கிக் காட்டுகிறது. அஃது அம்பலவாணர் ஆடும் அருட்கூத்தின் உண்மையாகும். நடராச தத்துவத்தை இந்நூல் போல இனிது விளக்கிக் காட்டுகிற நூல் வேறொன்று இல்லை. இஃது இந்நூலின் தனிச் சிறப்பாகும்.

## காப்பு

### விநாயக வணக்கம்

எடுத்துக் கொண்ட இந்நூல் இடையூறு இன்றி இனிது முடிதற் பொருட்டு முதலில் விநாயகப் பெருமானை வணங்கி நூலைத் தொடங்குகிறார் ஆசிரியர்.

**ஐங்கரனை உள்ளத்தில் வைப்போம்**

**வண்மை தரும் ஆகமநூல் வைத்த பொருள்வழுவா**

**உண்மை விளக்கம் உரை செய்யத் - திண்மதஞ்சேர்**

**அந்திநிறத் தந்திமுகத் தொந்திவயிற்று ஐங்கரனைப்**

**பந்தமறப் புந்திள் வைப்பாம்**

**பதவுரை**

**வண்மை** - உபநிடதங்களின் தெளிபொருள் ஆகிய வளத்தை

**தரும் -** விளக்கிச் சொல்லுகின்ற

**ஆகம நூல் -** சிவாகம நூல்களில்

**வைத்த -** உணர்த்தப்பட்ட

**பொருள்** - பதி, பசு, பாசம் என்னும் முப்பொருள்களின் உண்மையியல்புகளை

**வழுவா -** அவ்வாகமங்களின் கருத்திற்குச் சிறிதும் மாறுபடாத வகையில் விளக்கிக் கூறுகின்ற

**உண்மை விளக்கம்** - உண்மை விளக்கம் என்னும் பெயரை உடைய இச் சாத்திர நூலை

**உரை செய்ய** - யாம் உரைத்தற்கு

**திண் மதம் சேர்** - அழுத்தமான மதநீர் ஒழுகும் கன்னங்களையும்

**அந்தி நிற** - செவ்வானம் போன்ற சிவந்த ஒளியையும் கொண்ட

**தந்தி முக** - யானை திருவயிறும்

**ஐங்கரனை** - ஐந்த திருக் கைகளும் உடையவராகிய விநாயகக் கடவுளை

**பந்தம் அற** - எமது அறிவில் உள்ள அஞ்ஞானம் ஆகிய தடை நீங்கும்படி

**புந்தியுள் வைப்பாம்** - உள்ளத்துள் வைத்துத் தியானிப்போம்

## பொழிப்புரை

உபநிடதங்களின் தெளிபொருளை விளக்குவன சிவாகமங்கள், அச் சிவாகம நூல்களில் உணர்த்தப்படும் பொருள்கள் பதி, பசு, பாசம் என்பன. அம்முப்பொருள்களின் இயல்புகளை அவ்வாகமங்கள் கூறுகின்றபடியே வழுவாமல் உரைக்கப் புகுவது உண்மை விளக்கம் என்னும் இந்நூலாகும். இந்நூலை யாம் செய்வதற்கு விநாயகப் பெருமானது அருளை வேண்டி அவரை எம் உள்ளத்திற் கொண்டு வழிபடுவோம்.

அவர் செவ்வானம் போன்ற சிவந்த ஒளியினை உடையவர். மதம் பொழியும் ஆனைமுகம் கொண்டவர். பருத்த திருவயிற்றினை உடையவர். ஐந்து திருக்கைகளோடு விளங்குபவர். இத்தகைய வடிவினராக நினைத்தற்கு உரியவர் அவர்.

## விளக்கம்

### வண்மை தரும் ஆகம நூல்

உபநிடதங்களும் சிவாகமங்களும் முடிவால் வேறல்ல என்று சித்தாந்த சைவம் கொள்ளும். அவை சொல்லும் முறையாமல் வேறுபடுவனவேயன்றிப் பொருளால் வேறுபடுவன அல்ல.

ஆன்மாக்கள் முதலிலேயே பொருள்களின் நுண்ணியல்பை உணர்ந்து கொள்ளும் அறிவு வன்மை உடையன வல்ல. முதலிலேயே உணரமாட்டாது, படிப்படியே அறிவு விளங்கி மேம்பட்டு வந்து முடிவிலேயே முழுவுண்மையை உணரும் தகுதியைப் பெறும். இதற்கு ஓர் எடுத்துக் காட்டுக் கூறுவோம்.

இரவில் வானத்தில் வடதிசையில் ஏழுவிண்மீன்களின் கூட்டம் காணப்படும். அவை ஏழு முனிவர்களின் பெயரால் கட்டப்படும். அவ் விண்மீன்களில் ஒன்று வசிட்டர் என்னும் மீன். அத பெரிதாயிருக்கும். கண்ணுக்கு எளிதிற் புலப்படும். அதன் அருகே இருப்பது அருந்ததி என்னும் மீன். அருந்ததி என்பவள் வசிட்ட முனிவரின் மனைவி. கற்பின் சிறப்புக்கு எடுத்துக்காட்டாகக் கூறப்படுபவள். வசிட்டர் மீனின் அருகிலுள்ள மீனுக்கு அவள் பெயர் வைக்கப்பட்டுள்ளது. அருந்ததி மீன் மிகமிகச் சிறியதாய் இருக்கும்; பார்த்தவுடனேயே புலப்பட்டுவிடாது. கற்பிற் சிறந்த ஒரு பெண்ணின் வடிவம் என்பதால் அம் மீனைப் பலரும் காணு விரும்புதல் இயல்பு.

அருந்ததி மீனை ஒருவர் பார்க்க விரும்புகிறார் என்று கொள்வோம். அவருக்கு அதனைக் காட்ட முற்படுகிறான் மற்றொருவன். அப்பொழுது அவன் ஒரு முறையைக் கையாளுவன். அஃதாவது, அவன் முதலிலேயே இதுதான் அருந்ததி மீன் என்று காட்டமாட்டான். முதலிலேயே காட்டினால் கண்டு கொள்ள இயலாது என்று கருதி, அருந்ததி மீனை ஒட்டினாற் போல உள்ள பெருமீனாகிய வசிட்டர் மீனைச் சுட்டி, அதுதான் அருந்ததி என்று முன்னர்க் காட்டி, அதனை அவர் கண்ட பிறகு, அதுவன்று அருந்ததி மீன், அதற்குப் பக்கத்தில் உற்றுப் பாருங்கள். ஒரு நுண்ணிய மீன் விளங்குகிறது அல்லவா? அதுதான் அருந்ததி மீன் என்று சொல்லி, அவர் அதனை எளிதாகக் கண்டு கொள்ளும்படி செய்வான்.

இம்முறையிலேதான் உபநிடதங்கள் பொருள்களின் உண்மையை முழுதுமாக உணர்த்தாமல், ஓரளவாக உணர்த்துகின்றன. பொருள்களைப் பொதுப்படக் கூறிச் செல்கின்றன. உபநிடதங்கள் பொதுவாகக் கூறுவது, அருந்ததியின் அருகில் உள்ள மீனை அருந்ததி என்று காட்டுதல் போன்றது. உபநிடதங்கள் அங்ஙனம் குறிப்பாய் உணர்த்திய பொருள்களைச் சிவாகமங்கள் தெளிவுபட வெளிப்படையாக இனிது விளக்கிக் கூறுகின்றன. இஃது அருந்ததி மீனையே சுட்டி, அதுவே அருந்ததி எனக் காட்டுதல் போன்றது.

இவ்வாறு உபநிடதங்களின் தெளிபொருளைத் தருவன சிவாகமங்கள் ஆதலின் வண்மை தரும் ஆகம நூல் என்று குறிப்பிட்டார் ஆசிரியர்.

# நூல்

### மாணவர் ஆசிரியரிடம் வேண்டுதல்

**பொய்காட்டிப் பொய்யகற்றிப் போதானந்தப்பொருளாம்**

**மெய்காட்டும் மெய்கண்டாய் விண்ணப்பம் - பொய்காட்டா**

**மெய்யா திருவெண்ணை வித்தகா சுத்தவினா**

**ஐயா நீ தான் கேட்டருள்**

### பதவுரை

**பொய்காட்டி** - (வந்து அடைந்த உயர்ந்த பக்குவமுள்ள மாணவர்க்கு) நிலையில்லாத உணர்வுகளாகிய பாச ஞானமும், பசு ஞானமும் உனக்கு உரியனவல்ல என்பதைப் புலப்படுத்தி

**பொய் அகற்றி** - அவற்றை நீக்கி

**போத ஆனந்தப் பொருளாம் மெய்** - (பதி ஞானத்தை விளங்கச் செய்து) தூய அறிவாயும், பேரின்பமாயும், மெய்ப்பொருளாயும் விளங்கும் சிவத்தை

**காட்டும்** - அவர்க்கு அனுபவப்படுமாறு காட்ட வல்ல

**மெய்கண்டாய்** - மெய் கண்ட நாதரே!

**விண்ணப்பம்** - அடியேன் செய்யும் விண்ணப்பம் ஒன்று உண்டு.

**பொய் காட்டா** - வினை தராத

**மெய்யா** - உடம்பை(அருளுடம்பை) உடையவரே

**திருவெண்ணை வித்தகா** - திருவெண்ணெய் நல்லூரில் எழுந்தருளியுள்ள ஞானதேசிகரே!

**ஐயா** - ஐயனே!

**சுத்த வினா** - திருவருளோடு ஒன்றாய் நிற்பதாகிய சுத்த நிலையைத் தலைப்படுவதற்கு விரும்பி அடியேன் கேட்கும் சில வினாக்களை

**நீதான் கேட்டருள் -** உமது திருச்செவியில் ஏற்றருளி அவற்றிற்கு விடை கூறியருள வேண்டும்.

## பொழிப்புரை

வந்தடைந்த பக்குவ ஆன்மாக்களுக்கு நிலையற்ற உணர்வுகளாகிய பாசஞான, பசு ஞானங்களை நீக்கி, அவற்றின் நீங்கி நிற்கும் அவர்தம் அறிவில் பதிஞானமாகிய திருவருள் ஒளியை விளங்கச் செய்து. அவ்வருளுக்கு முதலாகிய பேரின்ப மயமான மெய்ப் பொருளாகிய சிவத்தை அனுபவமாக உணரவைக்கும் மெய்கண்ட நாதரே! அடியேன் உம்மை வேண்டிக் கொள்கிறேன்.

வினை காரணமாக வராத அருளுருவைக் கொண்ட முதல்வரே! திருவெண்ணெய் நல்லூரை இருப்பிடமாகக் கொண்ட ஞானதேசிகரே! அடியேன் சுத்த நிலையாகிய ஞான வாழ்வினை எய்தும் விருப்பத்தால் கேட்கும் வினாக்களைத் திருச் செவியேற்று அவற்றிற்கு விடை கூறியருள வேண்டும் என்று ஆசிரியரிடம் விண்ணப்பம் செய்கின்றார் மாணவர்.

## விளக்கம்

### பாச ஞானம்

ஆன்மாக்களாகிய நாம் உடம்பையும் ஐம்பொறி முதலிய கருவிகளையும் சார்ந்து நின்று அவற்றால் அறிவு விளங்கப் பெறுகிறோம். அங்ஙனம் கருவி கரணங்களால் உலகப்பொருள்களை அறியுமிடத்து, அவ்வறிவு பாச அறிவு அல்லது பாச ஞானம் எனப்படும்.

அறிதற் கருவிகளாகிய அவையும், அவற்றால் அறியப்படும் பொருள்களும் ஆகிய அனைத்தும் மாயையிலிருந்து தோன்றிய காரியங்களேயாகும். மாயை பாசம் எனப்படும் என்பது நாமறிந்தது. எனவே மாயையின் காரியங்களாகிய உடம்பும், கண் முதலிய புறக்கருவிகளும், மனம் முதலிய அகக் கருவிகளும், அவற்றால் அறியப்படும் உலகப் பொருள்களும் ஆகிய எல்லாம் பாசப் பொருள்கள் என்பது தெளிவு. பாசமாகிய கருவிகளைக் கொண்டு பாசமாகிய உலகத்தை அறியும் பாசஞானம் எனப்படுவதாயிற்று.

ஆன்மா பாசமாகிய கருவிகளையும் பாசமாகிய உலகப் பொருள்களையும் தனக்கு வேறானவை என்று உணராமல், அப்பொருள்களையே தானமாக மயங்கி அறிகிறது. வேறான அவற்றைத் தானாக அறிவதனால் தனது உண்மையியல்பை அறியாது போகிறது.

ஓர் எடுத்துக்காட்டினால் இதனை விளக்கலாம். பொன்னால் செய்த அணிகலனில் உள்ள அழகிய வேலைப்பாடு பொன்னை மறைத்துத் தனது அழகினையே உணரச் செய்து மக்களை மயக்குகிறது. அதுபோல, ஆன்மாவை உடம்பும் ஐம்பொறி முதலிய கருவி கரணங்களும் தம் வயப்படுத்தி ஆன்மா தன்னை அறியாதபடி மறைத்து மயங்கச் செய்து விடுகின்றன. பொன் போல இருப்பது ஆன்மாவின் உண்மையியல்பு. பொன்னைப் பொருந்தி நின்று மயக்கும் அழகிய வேலைப்பாடு போன்றவை ஆன்மாவைப் பொருந்தி நின்று மயக்கும் தனுகரணங்கள்.

நிலையில்லாத இக்கருவிகரணங்கள் ஆன்ம அறிவில் நிலையாத உணர்வுகளை எழுப்புதலால் பொய் எனப்பட்டன. பொய் என்பதற்கு நிலையாதது என்பது பொருள் இல்லாதது என்பது கருத்தன்று.

## பசு ஞானம்

ஞானாசிரியரையடைந்து அவரது உபதேசத்தைப் பெற்ற காலத்திலேதான் ஆன்மா தன்னைச் சார்ந்துள்ள கருவி கரணங்கள் அறிவில்லாத சடப்பொருள்களே என்பதையும், தான் அவற்றின் வேறாகிய சித்துப் பொருள் என்பதையும் உணரும். உணர்ந்து, அக் கருவிகள் நாமல்ல என்று அவற்றினின்றும் நீங்கும். அவற்றினின்றும் நீங்குதலாவது, அவற்றின் வசப்படாமை. அவற்றின் வழியில் நில்லாமை.

ஒவ்வோர் ஆன்மாவும் வியாபகப் பொருளாய் இருப்பது, எங்கும் நிறைந்த பொருளாயிருப்பது. அதனால் வியாபக அறிவே அதற்குரிய இயல்பான அறிவாகும். உடம்பையும் கருவிகளையும் சார்ந்துள்ள கட்டுநிலையில் தனது உண்மையியல்பை உணராமல், அவற்றால் உண்டாகும் சிற்றறிவையே தனக்குரிய அறிவு என்று அது மயங்கி உணரும்.

ஞானாசிரியருடைய அருளுரையைப் பெற்ற முத்தி காலத்தில் அது கருவி கரணங்களினின்றும் நீங்கியவுடன் தனக்கு இயற்கையாகவுள்ள வியாபகவுணர்வு விளங்கப் பெறும். காட்டாக, மேக படலம் மூடியிருந்த

காலத்தில் ஆகாயத்தின் விரிந்த தன்மை புலப்படாது. காற்றால் அடித்துச் செல்லப்பட்டு மேகபடலம் நீங்கியபோது ஆகாயத்தின் அளப்பரிய பரப்பு விழங்கித் தோன்றும். அதுபோல, ஐம்பொறி முதலிய கருவிகளின் நீங்கி, அவற்றால் உண்டான சிற்றறிவும் நீங்கிய காலத்தில் ஆன்மவுணர்வு தன் அளப்பரிய வியாபக இயல்பு விளங்கப் பெறும்.

கருவி கரணங்களால் உயிர்க்கு உண்டாகும் சிற்றறிவே சுட்டறிவு என்றும், கருவியறிவு என்றும், பாசஞானம் என்றும் கூறப்படும். அஃது ஆன்மாவின் பொதுவியல்பு செயற்கையியல்பு வியாபக அறிவே அதன் உண்மையியல்பு.

இவ்வாறு கருவியறிவாகிய பாச ஞானம் நீங்கி வியாபக அறிவைப் பெற்றபோது எல்லாவற்றையும் அறியும் நிலை கைகூடும். அந்நிலையில் ஆன்மா நானே எல்லாவற்றையும் அறிகிறேன். என்றும், என்னால் எல்லாம் செய்தல் கூடும் என்றும், நானே பெரும்பொருள் என்றும் கருதித் தன்னையே பதிப்பொருளாக மயங்கி அறியும். அவ்வறிவு பசு அறிவு அல்லது பசு ஞானம் எனப்படும். பசுவிற்கு மேல் உள்ள பதியாகிய முதற்பொருளை அறியமாட்டாது பசுவாகிய தன்னையே பதியாக அறிந்து நிற்கும் அறிவு பசு அறிவு எனப்படுவதாயிற்று.

அளப்பரிய ஆகாயம் இரவெல்லாம் விளக்கமின்றி இருண்டு கிடக்கிறது. விடிந்தவுடன் அது விளக்கமுற்றுத் தோன்றுகிறது. அவ்வாறு விளங்கித் தோன்றுவதற்குக் காரணம், காலையில் எழுந்த சூரிய வொளி அதன்கண் உடன் கலந்து அதனை விளக்கி நிற்பதேயாகும்.

இவ்வுண்மையை உணர்ந்து கொள்ளாமல், தன்னறிவு வியாபக நிலையை எய்தியதைக் கண்டு தன்னையே பெரிய பொருளாக பதிப்பொருளாக மதிப்பது அறியாமையின் விளைவாகும். அவ்வியாபக நிலையிலும் திருவருள் உடனிருந்து அறிவிக்கத்தான் ஆன்மா அறிகிறதேயன்றித் தானே அறியவில்லை. எந்நிலையிலும் ஆன்மாவின் இயல்பு, அறிவிக்கவே அறிவதாகும்.

## பதிஞானம்

முதல்வனது அருளின் உண்மையை அவ்வான்மா உளங்கொள்ளுமாறு ஆசாரியர் பின்வருமாறு அறிவுறுத்துவார். இத்தனை நாள் வரையில் பிறப்பு இறப்பிற்பட்டு இடர்ப்பாடு உற்று வந்த நீ பதி ஆவாயோ?

பாசத்தோடு கூடிய நீ பசு ஆவாய். உன்னைப் பாசத்தினின்றும் நீக்கி எடுத்து உனது வியாபக அறிவை விளக்கிய முதற் பொருள் தூய அருளேயாகும் என்பதை உணர்வாயாக என்று உணர்த்துவார்.

இங்ஙனம் ஞானாசிரியர் உணர்த்த, அவ்வான்மா அதனைச் சிந்தித்துத் தன்னுள்ளே ஊன்றி நோக்கியபோது, தன்னறிவிற்கு அறிவாய் நிற்கும் பதிப்பொருளினது அறிவாகிய திருவருள் அதற்குப் புலப்படும். அதுவே பதிஞானம் எனப்படுவது அந்தப் பதிஞானமாகிய பேருணர்வில் ஆன்மவுணர்வு அடங்கித் தன் முனைப்பின்றி நிற்பின். அவ்வருளுக்கு முதலாகிய சிவம் பேரின்பப் பொருளாய் அனுபவப்படும்.

மேற்கூறிய மூவகை ஞானங்களில் பாசஞானமும் பசுஞானமும் நிலையில்லாத உணர்வுகளாய்க் கழிவன ஆதலின் பொய் எனப்படும். இறைவனது ஞானமாகிய பதிஞானமே நிலைபெற்ற உணர்வு ஆதலின் மெய்யுணர்வு எனப்படும். இறைவனது ஞானமாகிய பதிஞானமே நிலைபெற்ற உணர்வு ஆதலின் மெய்யுணர்வு எனப்படும். அதுவே மெய்ப் பொருளாகிய சிவத்தைக் காட்ட வல்லது. சேய்மையில் உள்ள சூரியனை அதன்கண் உள்ள ஒளியை நமது கண்ணிற்குக் காட்டி நிற்கும். அது போல, அறியவாராத இறைவனை அவனது அருளொளியாகிய பதிஞானமே காட்டவல்லதாகும். ஏனைய ஞானங்களால் அவனை அறியவொண்ணாது. அத்தகைய பதிஞானத்தை ஆன்மவுணர்வில் விளங்கச் செய்து, பதியாகிய சிவத்தைக் காட்டுபவரே ஞானகுரு ஆவார்.

ஞானநெறியில் நிகழும் இவ் அனுபவப் படிமுறைகளை யெல்லாம் இந்நூலாசிரியர் பொய்காட்டிப் பொய் அகற்றிப் போத ஆனந்தப் பொருளாம் மெய்காட்டும் மெய்கண்டாய் என்ற அடிகளில் சுருங்கச் சொல்லி விளங்க வைத்துள்ளமை காணலாம்.

மெய்யுணர்வை முற்றப் பெற்ற மெய்கண்ட தேவராகிய முதற் குரவர் தம்மையடைந்த பக்குவ மாணாக்கருக்கு மேற்கூறிய படிமுறையிலே ஞானத்தை உணர்த்தி ஆட்கொண்டார் என்பதை அவர்தம் மாணாக்கராகிய மனவாசகங் கடந்தாரின் இவ்வாக்கினால் நாம் நன்கு அறியலாம்.

## போத ஆனந்தப் பொருளாம் மெய்

இறைவனது உண்மையியல்பைப் போதம், ஆனந்தம், மெய் என்ற மூன்று சொற்களால் குறிப்பிட்டார் ஆசிரியர்.

இவற்றுள், மெய் என்பது நிலைத்து நிற்பது. அஃதாவது என்றும் மாறுதல் இன்றி ஒரு தன்மைத்தாய் நிலைத்து நிற்பது. இது வடமொழியில் சத்து எனப்படும். நிலைத்து நிற்பது சத்து ஆதலின், நிலையில்லாதது அசத்து எனப்படும். சத்து என்பது தமிழில் மெய் எனப்படுதலின் அசத்து என்பது பொய் என்று சொல்லப்படும்.

மாற்றம் அல்லது ஒரு நிலையில் நில்லாத தன்மை என்பது பிற பொருளால் வருவது; பிற பொருளின் வசப்படுவதால் வருவது. கட்டாக, ஆன்மா பிறபொருளாகிய உடம்பின் வசப்படுவதால் அது பல மாற்றங்களுக்கு உட்படுகிறது. பசித்தும், நோயுற்றும், மெலிந்தும், மூத்தும் இவ்வாறு பலவிதமான மாற்றங்களை அடைவதற்குக் காரணம், அஃது உடம்பின் வசப்பட்டிருப்பதுதான். ஆன்மா மாறி மாறிப் பிறந்தும் இறந்தும், இன்பத் துன்பங்களை மீள மீள அடைந்தும் பல மாற்றங்களை எய்துவதற்குக் காரணம், பிற பொருள்களாகிய மும்மலங்களோடு கூடி அவற்றின் வசப்பட்டிருப்பதேயாகும்.

இறைவன் எல்லாப் பொருள்களிலும் கலந்திருப்பவனேயாயினும் அவன் அவற்றில் சிறிதும் தோயாது. அவற்றின் வசப்படாது, தனித்தே நிற்பான். அவன் தன் வயம் இன்றிப் பிறபொருளின் வயப்பட்டு, அதற்கேற்ப நடக்க வேண்டியவனாய் இருப்பின், அவன் அனைத்துலகங்களையும் அனைத்துயிர்களையும் எங்ஙனம் ஆளுதல் கூடும்? எனவே அவன் குறைவற்ற தன் வயம் உடையவன் என்பது தெளிவு. அவன் தன்வயம் உடையவன் என்பது பெறப்படவே, பிற பொருளால் வரும் மாற்றம் இல்லாதவன் என்பதும் தானே விளங்கும்.

இவ்வாறு என்றும் ஒரு பெற்றியனாய் நிற்பவன் என்ற பொருளிலேயே இறைவனை மெய்ப் பொருள் என்றும், செம்பொருள் என்றும் நூல்கள் குறிப்பிடுகின்றன.

இனி, இறைவனுக்குரிய மற்றோர் இயல்பாக மன வாசகங்கடந்தார் குறிப்பிடுவது போதம் என்பது. போதம் என்பது அறிவு. இறைவனது அறிவு சிற்றறிவு ஆகாது. பேரறிவாய் நிற்பது. சிற்றறிவு என்பது குறைபாடுடைய அறிவு. ஒரு பொருளை அறியுமிடத்து அப்பொருளில் அழுந்திவிடுதல், அவ்வாறு ஒன்றில் அழுந்தும்போது மற்றொன்றினை அறியமாட்டாது நிற்றல், அதனால் ஒவ்வொன்றாகவே அறிதல், ஒன்றனையும் தொடர்ச்சியாக அறிந்து நில்லாது விட்டுவிட்டு அறிதல், அறிந்ததனை மறத்தல், தானாக அறியாது அறிவிக்கவே அறிதல் என்னும் இக்குறைபாடுகளெல்லாம் உயிர்களின் அறிவுக்கு உண்டு. இப்படிப்பட்ட குறைபாடு ஒன்றும் இல்லாத அறிவு இறைவன் ஒருவனுக்கே உரியது. அவனது அறிவு எல்லாவற்றையும் எப்போதும் தானே அறியும் அறிவாகும். அவ்வாறு அறியும் அறியாமை பற்றமுடியாது. ஆகவே அஃது என்றும் தூய அறிவாகவே இருக்கும். இவ்வாறு உள்ள இறைவனது அறிவையே போதம் எனக் குறிப்பிட்டார் மனவாசகங் கடந்தார்.

இனி, அவர் இறைவனது இயல்பாகச் சொல்லுவது ஆனந்தம் என்பது. அறிவே இன்பத்திற்குக் காரணம். இறைவன் குறைவில்லாத, நிறைந்த பேரறிவை உடையவன். ஆதலால் அவன் குறைவில்லாது நிறைந்த பேரின்பத்தையும் உடையவன் ஆகிறான்.

இறைவனது இயல்புகளாக இதுகாறும் கூறிவந்தவற்றை ஒருசேர நோக்கினால், சத்தாயும் சித்தாயும் ஆனந்தமாயும் நிற்றலே அவனது உண்மையியல்பு என்பது இனிது விளங்கும். சத்து சித்து ஆனந்தம் என்ற மூன்று சொற்களும் சேர்ந்து சச்சிதானந்தம் என்று ஆயின. இத்தொடரையே வேறொரு வகையால் போத ஆனந்தப் பொருளாம் மெய் என்றார். இந்நூலாசிரியர்.

## பொய் காட்டா மெய்யா

முதலடியில் பொய் காட்டி என்று குறிப்பிட்ட ஆசிரியர் இரண்டாம் அடியின் இறுதியில் பொய் காட்டா என்கிறார். முன்னுக்குப் பின் முரணாக உள்ளதே என்று எண்ணும் படியாக இஃது உள்ளது. பொய்காட்டா என்பதன் பொருளை உணர்ந்தால் இம்முரண்பாடு தோன்றாது.

நாமெல்லாம் வினைவயப்பட்டுப் பிறந்தவர்கள். நமது பழவினைக்கு எற்பவே நமக்கு உடம்பு அமைந்துள்ளது. இருவினை தந்த உடம்பு இது, மெய்கண்ட தேவரோ வினையின் நீங்கியவர்; மூவாண்டு நிரம்பாத இளங்குழவிப் பருவத்திலேயே மெய்யுணர்வை முற்றப் பெற்றவர்; சிவபெருமான் தனக்கே உரிய நெற்றிக் கண்ணையும் நீல கண்டத்தையும் மறைத்து மெய்கண்ட தேவர் வடிவில் வந்தருளினார் என்று போற்றித் துதிக்கும் படியான பெருநிலையைப் பெற்றவர். எனவே அவரது வடிவம் அருளுருவேயன்றி நம்மனோர்க்கு உள்ளதுபோல வினை காரணமாக வந்த வடிவம் அன்று. இக்கருத்துப்படவே பொய் காட்டா மெய்யா என்று அழைக்கிறார்.

பொய் என்பது நிலையாதது; நிலை மாற்றம் அடைவதாய் நீங்குவது. இங்கு வினை பொய் எனப்பட்டது. அஃது எதனால் எனின், தோன்றுதல், நுண்ணிய நிலையில் அடங்கியிருத்தல், இன்ப துன்பமாகிய பயனைக் கொடுத்து நீங்குதல் என்ற மூன்று நிலைகள் வினைக்கு உண்டு. இவ்வாறு நிலை மாற்றம் உடையதாதல் பற்றி வினை பொய் எனப்பட்டது. அடுத்துள்ள மெய் என்ற சொல் உடம்பு என்ற பொருளில் வந்தது. எனவே பொய் காட்டா மெய்யா என்ற விளி, வினை தராத உடம்பை (அருளுடம்பை) உடையவரே எனப் பொருள்படுவதாயிற்று.

## சுத்த வினா

## கேவல நிலை

உயிர் அறியாமையில் அழுந்தி நிற்கும் நிலை கேவலம் எனப்படும். நாள்தோறும் நமக்குக் கேவல நிலை உண்டாகிறது. உறக்கம் என்பது ஒன்றும் அறியாத நிலைதானே. உடம்பில் தொழிற்படும் அறிகருவிகளும் செயற்கருவிகளும் சோர்ந்து மடங்கும்போது உறக்கம் நிகழ்கிறது, உறக்கத்தில் அழுந்துதல் எந்த அளவிற்கு உள்ளதோ அந்த அளவிற்கு ஏற்ப அறியாமையும் குறைந்தும் மிகுந்தும் அமையும். எனவே உறக்கம் என்பது கேவல நிலையாகும்.

இனி, இறப்பு என்பதும் உயிர் அறியாமையில் அழுந்துகிற நிலையேயாம். இறப்பு இவ்வகையில் உறக்கத்தைப் போன்றது எனலாம். உறங்குவது

போலும் சாக்காடு என்பது குறள். எனவே இறப்பு என்பதும் கேவல நிலையேயாகிறது.

இன்னொரு கேவல நிலையும் உண்டு. அது நமது விழிப்பு நிலையிலேயே நிகழ்கிறது. நாள்தோறும் பாராயணம் செய்து வருகிற பாடல் கூடத் திடுமென யாராவது கேட்டால் நமது நினைவிற்கு வருவதில்லை. இப்படி விழிப்பு நிலையில் ஏற்படுகிற மறதியும் கேவல நிலை எனப்படுகிறது.

இதுகாறும் கூறியவற்றால், உறக்கம், இறப்பு, மறப்பு என்பவையெல்லாம் அறியாமையில் அழுந்துகிற கேவல நிலை என்பது விளங்கும்.

## சகல நிலை

அறியாமை என்பது இருள் எனில், அவ்விருளைச் சிறிது நீக்குகின்ற ஒளியாய் நிற்பது மாயையாகும். மாயையிலிருந்து தோன்றிய உடம்பும், உடம்பின் அகத்தும் புறத்தும் உள்ள கருவிகளும் அறியாமையிருளைச் சிறிது நீக்கிச் சிற்றறிவை உண்டாக்குகின்றன. இவ்வாறு மாயா கருவிகளைப் பொருந்தி அறிவு விளங்கி உலகப் பொருள்களை நுகர்ந்து வரும் நிலை சகல நிலை எனப்படும். கேவல நிலை என்பது அறியாமையில் அழுந்துதல் என்றால், சகல நிலை என்பது மாயையில் அழுந்துதல் எனச் சொல்லலாம்.

இறப்பு என்பது கேவல நிலை எனப் பார்த்தோம். எனவே பிறப்பு என்பது சகல நிலை என்பது விளங்கும். நாள்தோறும் வரும் உறக்கம் கேவல நிலை என அறிந்தோம். எனவே உறக்கம் நீங்கி எழுகின்ற விழிப்பு சகல நிலை என விளங்கிக் கொள்ளலாம். அவ்வப்போது வருகின்ற மறப்பு கேவல நிலை எனக் கண்டோம். எனவே மறப்பு நீங்கி உண்டாகின்ற நினைப்பு சகலநிலை என்பது வெளிப்படை.

இதுகாறும் கூறியவற்றால், பிறப்பு, விழிப்பு, நினைப்பு ஆகியவையெல்லாம் மாயையில் அழுந்துகிற சகலநிலை என்பது தெளிவாகும்.

இரவு நீங்கினால் பகலும், பகல் நீங்கினால் இரவும் மாறி மாறி வருகின்றன. அதுபோலவே கேவல நிலையாகிய அறியாமையும், சகல நிலையாகிய சிற்றறிவும் மாறி மாறி நிகழ்கின்றன. இறப்புக்குப் பின் பிறப்பும், உறக்கத்திற்குப் பின் விழிப்பும், மறதிக்குப் பின் நினைப்பும்

எனத்தொன்று தொட்டுத் தொடர்ந்து வருகின்றன. உயிர் இறந்தும் பிறந்தும் உறங்கியும் விழித்தும் மறந்தும் நினைந்தும் இவ்வாறு உழன்று வருகிறது.

**சுத்த நிலை**

இத்தடுமாற்றம் தீர்ந்து ஒரு நிலைப்பட்ட தன்மையை எய்த வேண்டுமாயின், உயிர் திருவருளைச் சேர்தல் வேண்டும்.

திருவருள் உயிருக்கு அப்பால் எங்கேயோ உள்ளது என்று எண்ணவேண்டா. உயிரிடத்தேயே எப்போதும் உடனாக உள்ளது. அதனை நாம் தெரிந்து கொள்ளாமலே இருக்கிறோம். உடற்சார்பும் உலகச் சார்பும் ஆகிய பற்றுக்களே நம்மைத் திருவருளை நோக்காதபடி செய்கின்றன. அப்பற்றுக்கள் அறுந்தால் அக்கணமே திருவருளின் இருப்பைத் தெற்றென உணர்ந்து கொள்வோம்.

கயிறுகளால் கட்டப்பெற்ற ஊசலின் மேலிருந்து ஆடிக்கொண்டிருக்கின்ற வரையில் நிலம்தான் ஆதாரமாக இருந்து தாங்கிக் கொண்டிருக்கிறது என்ற உண்மையை நாம் தெரிந்து கொள்வதில்லை. கயிறுகள் அறுந்து கீழே விழும் போதில் நிலம் நம்மைத் தாய் போலத் தாங்கிக் கொள்ளும் போதுதான் அவ்வுண்மையை அனுபவமாக உணர்வோம் அதுபோல, அற்றது பற்றெனில் திருவருளை உற்றவராவோம்.

உயிரறிவில் கலந்திருக்கின்ற இறைவனது அறிவே திருவருள் என்பது அப் பேறறிவே மறைந்து நின்று கருவி கரணங்களின் வழியாக உயிருக்குச் சிற்றறிவே விளக்கி வருகிறது. இது திருவருளை உணர்வதற்கு முந்திய நிலை.

கயிறு அறுந்த ஊசல் போலத் திருவருட் சார்பை உயிர் பெற்றுவிட்டால் அத்திருவருள் ஞானம் தானே முன்நின்று அவ்வுயிருக்கு நேரே உணர்த்தும். அந்நிலையில் மனம் முதலிய கருவி கரணங்கள் உயிருக்குத் தேவையில்லாமற் போகின்றன. ஓர் எடுத்துக் காட்டினால் இதனை எளிதில் விளங்கிக் கொள்ளலாம். இரவு நேரத்தில் விளக்கு எரிந்து தனது சிற்றொளியால் இருளைச் சிறிதே ஓட்டிப் பொருளைக் காட்டுகிறது. விடிந்து சூரியவொளி தோன்றி எல்லாவற்றையும் தெளியக் காணுகிற நிலை வந்த பின்னரும் விளக்கு எரியுமானால் அவ்விளக்கொளி என்ன பயனைச் செய்யும்? ஆகவே விளக்கை நாம் அணைத்து விடுகிறோம்.

தேவையற்ற அதனை எடுத்து அப்புறமாய் வைத்து விடுகிறோம். உடம்பும், அதிலுள்ள கருவி கரணங்களும் இரவில் எரியும் விளக்குப் போன்றவை. அஞ்ஞானத்தை ஓரளவு நீக்கிச் சிற்றறிவைக் கொடுப்பவை. திருவருளாகிய சூரியவொளி வந்து பிறகு, சிற்றறிவும் அதனை விளங்கச் செய்யும் கருவி கரணங்களும் பகல் விளக்குப் போல நீங்குதற்கு உரியவாகி விடுகின்றன. அக்கருவிகளின் துணையில்லாமலே, திருவருள் நேரே அறிவிக்க அதனால் எல்லாவற்றையும் அறிகின்ற விரிந்த அறிவு உண்டாகும்.

கருவிகளைக் கொண்டு அறிவு விளங்குகின்ற நிலையே சகலம் என்று கூறப்படும் ஆகலின், கருவிகளின் துணையின்றி அறிவதாகிய அருள்நிøயில் சகலமாகிய நிலை பகல் விளக்குப் போல ஆகிவிடும். அருள்நிலையில் அறியாமையாகிய இருள் முற்றிலுமாக நீங்கி விடும் ஆதலால், கேவலமாகிய நிலை நிகழ்வதில்லை. இங்ஙனம் சகல கேடலங்கள் நிகழாமல் உயிர் திருவருளில் அழுந்தி நிற்கின்ற நிலையே சுத்த நிலை எனப்படும். இவ்வுலகில் வாழும் போதே இச் சுத்தநிலையை அடையலாம்.

**மாணவர் கேட்கும் வினாக்கள்**

**ஆறாறு தத்துவம்ஏது ஆணவம்ஏது அன்றேதான்**

**மாறா வினைஏது மற்றிவற்றின் - வேறாகா**

**நான்எது நீஏது நாதன்நடம் அஞ்செழுத்துத்**

**தான்ஏது தேசிகனே சாற்று.**

**ஆறு ஆறு தத்துவம் ஏது** - சைவ சமயத்தில் கொள்ளப்படுகிற முப்பத்தாறு தத்துவங்களின் இயல்பு யாது?

**ஆணவம் ஏது** - சைவ தவிரப் பிற மதங்களில் கொள்ளப்படாத ஆணவம் என்னும் பொருளின் இயல்பு யாது?

**அன்றேதான்** - தொன்றுதொட்டே

**மாறா நீங்காமல்** - தொடர்ந்து வருகிற

**வினை ஏது** - கன்மத்தின் இயல்பு யாது?

**மற்று, இவற்றின்** - இத்தத்துவங்கள், ஆணவம், கன்மம் ஆகிய இவற்றிற்கு

**வேறாகா** - வேறாகாமல் அவற்றோடு கூடி அவையேயாக

ஒற்றுமைப்பட்டு வருகின்ற

**நான் ஏது** - என் இயல்பு யாது?

**நீ ஏது** - குருவாக எழுந்தருளி வந்துள்ள நும் இயல்பு யாது?

**நாதன் நடம் ஏது** - முதல்வன் இயற்றும் திருக்கூத்தின் இயல்பு யாது?

**அஞ்செழுத்து ஏது** - திருவைந்தெழுத்தின் இயல்பு யாது?

**தான் ஏது** - முத்தியின் இயல்பு யாது?

**தேசிகனே** - குரு முதல்வரே

**சாற்று** - இவ்வினாக்களுக்கு விடை கூறியருள்க

**பொழிப்புரை**

1. முப்பத்தாறு தத்துவங்களின் இயல்பு யாது?

2. ஆணவத்தின் இயல்பு யாது?

3. தொன்று தொட்டு ஆணவத்தோடு தொடர்ந்து நீங்காமல் வரும் வினையின் இயல்பு யாது?

4. இத்தத்துவங்கள், ஆணவம், வினை ஆகியவற்றிற்கு வேறாகாமல் அவற்றோடு கூடி ஒற்றுமைப் பட்டு வரும் என் இயல்பு யாது?

5. என் அறியாமையை நீக்கி உண்மையை உணர்த்த வந்தருளிய நும் இயல்பு யாது?

6. இறைவன் இயற்றும் நடனத்தின் இயல்பு யாது?

7. திருவைந்தெழுத்தின் இயல்பு யாது?

8. முத்தியின் இயல்பு யாது? குரு முதல்வரே, இவற்றிற்கு விளக்கம் கூறியருள்வீராக என்று மாணவர் ஆசிரியரிடம் வேண்டுகிறார்

## விளக்கம்

## வினாக்களின் வைப்பு முறை

தத்துவங்கள் என்பவை மாயையிலிருந்து தோன்றிய காரியப் பொருள்கள். எனவே முதல் வினா மாயையைப் பற்றியதாகக் கொள்ளலாம். இரண்டாம் வினா ஆணவத்தைப் பற்றியதாகவும், மூன்றாம் வினா கன்மத்தைப் பற்றியதாகவும் அமைதலின், முதல் மூன்று வினாக்களும் பாசம் பற்றியவை என்பது விளங்கும்.

நான்காம் வினாவாகிய நான் ஏது என்பதில் உள்ள நான் என்ற சொல் முதலில் மாணவரைக் குறித்துப் பின் பசுவாகிய உயிரைக் குறிப்பதாயிற்று. அவ்வாறே ஐந்தாம் வினாவாகிய நீ ஏது என்பதில் நீ என்பது ஞானாசிரியரைக் குறிப்பதாலும், ஞானாசிரியர் சிவமே யாதலாலும் அவ்வினா பதியாகிய இறைவனைப் பற்றியதாயிற்று.

இவ்வாறு முதல் ஐந்து வினாக்களும் பாசம், பசு, பதி ஆகிய முப்பொருள்களின் இயல்பு பற்றியன என்பது புலனாகும். பாசம் நமக்குத் தெரிந்த பொருளாதலின் அதனை முன் வைத்தார். இவற்றின் வேறாகா நான் என்றதனால் அப்பாசத்தோடு கூடி அதன் வசப்பட்டிருக்கின்ற பசுவை அடுத்து வைத்தார். குருவாகி வந்து உண்மையை உணர்த்திப் பாசத்தினின்றும் விடுவிக்கின்ற பதியை அதன்பின் வைத்தார் என இவ்வாறு பொருத்தம் காணலாம்.

ஆறாவது வினா நாதன் நடம் பற்றியது. இறைவன் செய்யும் ஐந்தொழிலே நடனம் எனப்படுதலின், அதுவும் பதியின் இயல்பாய் அமைதலின் அதுபற்றிய வினாவை ஐந்தாம் வினாவிற்குப் பின் வைத்தது பொருத்தமேயாகும்.

இவ்வாறு முப்பொருள்களின் இலக்கணத்தைக் கூறி முடித்த பின், சாதனமாகிய திருவைந்தெழுத்தைப் பற்றிய ஏழாம் வினாவை அமைத்துக் கொண்டார்.

சாதனத்திற்குப் பின் பயனைக் கூறுவது முறை. எட்டாவது வினா முத்தியாகிய பயனைப் பற்றியதாகும். முத்தியைக் குறிப்பதாகச் செய்யுளில் என்ன சொல் இருக்கிறது? நான்காம் அடியிலுள்ள தான் ஏது

என்பதில் உள்ள தான் என்பதே முத்தியைக் குறிப்பதாகும். அச் சொல் எவ்வாறு முத்தியைக் குறிக்கும் என்பதைப் பார்ப்போம்.

உயிர் எதனை எதனைச் சார்கிறதோ அதன் அதன் தன்மையையே தன் தன்மையாகக் கொண்டு நிற்பது. இப்பிறப்பு நிலையில் உயிர் உடம்பைச் சார்ந்து உடம்பின் தன்மையையே தன் தன்மையாகக் கொண்டு உடம்பாகவே நிற்கிறது என்பது தெளிவாகத் தெரிகிறது. அவ்வாறே முத்தி நிலையில் உயிர் சிவத்தைச் சார்ந்து சிவத்தின் தன்மையையே தன் தன்மையாகக் கொண்டு சிவமாகவே நிற்கும். சிவம் தன்னையே தந்து உயிரைத் தன் வண்ணம் ஆக்கிவிடும். மாணிக்கத்தைச் சார்ந்த பளிங்கு தன்னிடத்தே மாணிக்கத்தின் நிறத்தை முழுதுமாகப் பெற்று மாணிக்கமே என்று சொல்லும்படியாக நிற்பது போன்றது இது. இதுவே தானாதல் ஆகிய முத்திநிலை. தான் என்பது சிவத்தைக் குறிக்கும். எனவே தானாதல் என்பது சிவமாதல் எனப் பொருள்படும். தானாதல் என்பதே செய்யுளில் தான் என நின்று முத்தியைக் குறிப்பதாயிற்று.

## வினாக்களுக்கு உரிய விடைகள் அமைந்துள்ள செய்யுட்கள்

நூலில் வரும் வினாக்கள் எட்டினுக்கும் உரிய விடைகள் அமைந்துள்ள செய்யுட்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

## வினாக்கள் விடைகள்

முதல் வினா(தத்துவங்கள் பற்றியது) 4 முதல் 21 முடிய உள்ளவை (18 செய்யுட்கள்)

இரண்டாம் வினாவும் மூன்றாம் வினாவும் 22ஆம் செய்யுள் மட்டும்

(ஆணவமும் வினையும் பற்றியவை)

நான்காம் வினா(உயிர் பற்றியது) 24 முதல் 26 முடிய உள்ளவை(3 செய்யுட்கள்)

ஐந்தாம் வினா(இறைவனைப் பற்றியது) 27 முதல் 29 முடிய உள்ளவை(3 செய்யுட்கள்)

ஆறாம் வினா(நாதன் நடம் பற்றியது) 31 முதல் 38 முடிய உள்ளவை(8 செய்யுட்கள்)

ஏழாம் வினா(அஞ்செழுத்துப் பற்றியது) 40 முதல் 44 முடிய உள்ளவை

(5 செய்யுட்கள்)

எட்டாம் வினா(முத்தி நிலை பற்றியது) 45 முதல் 48 முடிய உள்ளவையும், 50 முதல் 52 முடிய உள்ளவையும்(7 செய்யுட்கள்)

விடையாக அமைந்த 45 செய்யுட்களும் ஆசிரியர் கூற்றாதல் வெளிப்படை, அவற்றோடு, 3ஆவது செய்யுள் விடைகூற இசைந்தமையைத் தெரிவிக்கும் ஆசிரியர் கூற்றாக உள்ளது. இனி, 1,2,23,30,39,49,53 ஆகிய ஏழு செய்யுட்கள் மாணாக்கர் கூற்றாக உள்ளன. இவற்றோடு முதலில் உள்ள காப்புச் செய்யளையும் சேர்க்க, இந் நூற்செய்யுட்கள் 54 ஆதல் காணலாம்.

**ஆசிரியர் விடை கூறப் புகுதல்**

**3. உள்ளபடி இத்தை உரைக்கக்கேள் உன்றனக்கு**

**வள்ளல் அரு ளால்அன்று வாய்மலர்ந்த - தெள்ளிய சீர்**

**ஆகமங்கள் சொன்ன அடைவிலே ஆனந்த**

**யோகம் நிகழ் புதல்வா உற்று.**

**பதவுரை**

**ஆனந்த யோகம் -** சிவானந்த நிலையை அடைவிக்க வல்ல யோக நெறியில்

**நிகழ் -** புதல்வா நிற்கின்ற நன் மாணாக்கனே!

**வள்ளல்** - சிவபெருமான்

**அருளால்** - உயிர்கள்மீது கொண்ட கருணையினால்

**அன்று -** முற்காலத்தே

**வாய் -** மலர்ந்த ஆக்கியருளிய

**தெள்ளிய சீர் -** தெளிவும் சிறப்பும் மிக்க

**ஆகமங்கள் -** சிவாகமங்கள்

**சொன்ன -** சொல்லிய

**அடைவிலே -** முறையிலே

**இத்தை -** இதனை(நீ அறிய விரும்பும் ஞானப் பொருளை)

**உன் தனக்கு -** உனக்கு

**உள்ள படி -** உள்ளவாறு

**உரைக்க -** யாம் சொல்ல,

**உற்றுக் கேள் -** நீ மனம் பொருந்திக் கேட்பாயாக

## பொழிப்புரை

சிவானந்த நிலைக்கு இட்டுச் செல்லும் யோக நெறியில் நிற்கின்ற நன்மாணாக்கனே! சிவ பிரான் முற்காலத்தில் ஆன்மாக்களின் மீது கொண்ட அருள் காரணமாக ஆகமங்களை ஆக்கியருளினார். சிறப்பு மிக்க அச்சிவாகமங்கள் உணர்த்தும் ஞானநெறியை அவற்றில் உள்ளபடி யாம் உனக்கு உரைப்போம். உளம்பொருந்திக் கேட்பாயாக என்று ஆசிரியர் கூறத் தொடங்குகிறார்.

## விளக்கம்

### வள்ளல் அன்று வாய்மலர்ந்த ஆகமங்கள்

சிவபெருமானே வேதங்களையும் ஆகமங்களையும் அருளிச் செய்தார் என்பது சைவ சமயத்தின் கொள்கை. அவற்றை அவர் அருளிச் செய்தது, சதாசிவ மூர்த்தி என்னும் நிலையில் இருந்தேயாகும்.

சதாசிவ வடிவம் என்பது ஐந்து முகங்களும் பத்துக் கைகளும் உடையது. கிழக்கு முதலிய நான்கு திசைகளை நோக்கினவாக நான்கு முகங்களும், அவற்றின் மேல் நடுவே வானத்தை நோக்கியதாக ஒரு முகமும் இருக்கும்.

மேல் நோக்கிய உச்சிமுகம் ஈசானம் எனப்படும். கிழக்கு நோக்கிய முகம் தற்புருடம் எனப்படும். தெற்கு நோக்கிய முகம் அகோரம் எனப்படும்.

வடக்கு நோக்கிய முகம் வாமதேவம் எனப்படும். மேற்கு நோக்கிய முகம் சத்தியோ சாதம் எனப்படும்.

மேற்கூறியவாறு சிவபெருமான் சதாசிவ வடிவம் தாங்கி நின்று, கீழ் நின்ற நான்கு முகங்களாலும் நான்கு வேதங்களையும் மேல் நிற்கும் ஈசான முகத்தால் சிவாகமங்களையும் அருளிச் செய்தார்.

உச்சியில் உள்ள ஈசானம் என்னும் ஒரு முகமே கிழக்கு முதலிய திசைகளை முறையே நோக்கித் தற்புருடம் முதலிய நான்கு முகங்களாயும் நிற்கும். அந்த நான்கு முகங்களாலும் முகம் ஒன்றுக்கு ஐந்து ஆகமங்களாக இருபது ஆகமங்களையும், இயல்பான ஈசான நிலையில் நின்ற அம்முகத்தால் எட்டு ஆகமங்களையும் சதாசிவ மூர்த்தி அருளினார் என்பர்.

சத்தியோ சாத முகத்தால் சொல்லப்பட்ட ஐந்து ஆகமங்கள் காமிகம், யோகசம், சிந்தியம், காரணம், அசிதம் என்பன.

வாமதேவ முகத்தால் சொல்லப்பட்ட ஐந்து ஆகமங்கள் தீப்தம், சூக்குமம், சகச்சிரம், அஞ்சுமான், சுப்பிரபேதம் என்பன.

அகோர முகத்தால் சொல்லப்பட்ட ஐந்து ஆகமங்கள் விசயம், நிச்சுவாசம், கவாயம்புவம், ஆக்கினேயம், வீரம் என்பன.

தற்புருட முகத்தால் சொல்லப்பட்ட ஐந்து ஆகமங்கள் இரவுரவம், மகுடம், விமலம், சந்திர ஞானம், முகவிம்பம் என்பன.

ஈசான முகத்தால் சொல்லப்பட்ட எட்டு ஆகமங்கள் புரோற் கீதம், இலளிதம், சித்தம், சந்தானம், சருவோக்தம், பாரமேசுரம், கிரணம், வாதுளம் என்பன.

இந்த இருபத்தெட்டு ஆகமங்களே மூல ஆகமங்கள் எனப்படுகின்றன.

இந்த ஆகம நூல்கள் உபதேச முறையில் வழிவழியாக இடைவிடாது வந்து உயிர்களுக்கு மெய்ந் நெறியைக் காட்டுதல் வேண்டும் எனக் கருதி, அவ்ஆசிரிய வழி முறையை உண்டாக்குதற் பொருட்டுச் சதாசிவப் பெருமான் மூலாகமங்கள் இருபத்தெட்டினையும் இருபத்தெண்மருக்கு உபதேசித்தருளினார்.

அவ்வாறு அவரிடம் ஆகமங்களை நேரே கேட்டவர்கள் சிவர்கள் எனவும், உருத்திரர்கள் எனவும் இருவகைப்படுவர். சிவர் எனப்படுவோர் பத்துப் பேர். அவர்களுள் பிரணவர் என்பவர் முதன்மையானவர். உருத்திரர் எனப்படுவோர் பதினெட்டுப் பேர். அவர்களுள் மகாருத்திரர் முதன்மையானவர்.

பிரணவர் முதலிய பத்துச் சிவர்களுக்குக் காமிகம் முதல் சுப்பிரபேதம் ஈறாக உள்ள பத்துச் சிவாகமங்களை ஒருவருக்கு ஒன்றாக உபதேசித்தருளினார். மகாருத்திரர் முதலிய பதினெட்டு உருத்திரர்களுக்கு எஞ்சியுள்ள விசயம் முதல் வாதுளம் ஈறாக உள்ள பதினெட்டுச் சிவாகமங்களை ஒருவருக்கு ஒன்றாக உணர்த்தியருளினார்.

இனி, வித்தியேசுவரர் என்று சொல்லப் பெறுவோர் எட்டுப் பேர் உள்ளனர். அவர்களுள் முதன்மையானவர் அனந்த தேவர் இந்த ஆனந்த தேவர் வாயிலாகவே சிவபெருமான் அசுத்த மாயையைத் தொழிற்படுத்தவார்.

மேற்கூறியபடி பிரணவர் முதலியோர்க்குத் தனித் தனியே ஒவ்வோர் ஆகமத்தை உபதேசித்த சதாசிவ மூர்த்தி அதன் பிறகு அனந்த தேவருக்கு அவ்விருபத்தெட்டு ஆகமங்களையும் ஒருங்கே தொகுத்து உபதேசித்தார்.

இம்முறையில் எல்லா ஆகமங்களையும் கேட்டுணர்ந்த அனந்த தேவர் தமக்குக் கீழ் உள்ள உருத்திரர்களுள் முதல்வராய் விளங்கும் சீகண்ட ருத்திரருக்கு அவ்வாகமங்களையெல்லாம் உபதேசித்தார்.

சீகண்ட ருத்திரர் கைலாயத்தில் தமது அருகிலே இருக்கும் நந்தி பெருமானுக்கு அவ்விருபத்தெட்டு ஆகமங்களையும் அருளிச் செய்தார். நந்தி பெருமான் அவற்றைத் தேவ இருடிகளுக்கு உணர்த்தினார். அம் முனிவர்கள் அவற்றை நிலவுலகில் உள்ள பக்குவ ஆன்மாக்களுக்கு உணர்த்தினர். இது சிவாகமங்கள் நிலவுலகில் வந்த வரலாறாகும்.

## யோகம் நிகழ் புதல்வா என்ற விளியின் உட்பொருள்

நல்லாசிரியரது உபதேசம் மாணாக்கனது அறிவில் பக்குவம் இருந்தாலே விளங்கும். பக்குவம் என்பது ஆசிரியர் அறிவுறுத்தும் உண்மையை விளக்கமில்லாதும், பொருள் மாறுபடவும் உணராமல், உள்ளவாறு உணரும் நிலையாகும்.

இந்தப் பக்குவம், ஆன்ம அறிவை ஆணவ மலம் பற்றியுள்ள வரையில் உண்டாகாது. அம் மலம் அறிவைத் திசை திருப்பி, இழிந்த உலகப் பொருளையே பெரிதாக மதித்து அதனையே நாடும்படியாகச் செய்யுமேயன்றி, உயர்ந்த ஞானப் பொருளில் நாட்டத்தைச் செல்லவிடாது. எனவே ஆணவ மலத்தின் ஆற்றல் தேய வேண்டும். மலத்தின் ஆற்றல் தேயத் தேய, ஆன்ம அறிவு சிறிது சிறிதாக விளக்கம் பெற்றுப் படிப்படியே பக்குவம் எய்தும்.

ஆணவ மலத்தின் ஆற்றல் எவ்வாறு தேயும் எனில், பதியைத் தொழுதல் ஆகிய தவத்தினாலேயே மல ஆற்றல் தேய்வதாகும். அத்தவம் சரியை, கிரியை, யோகம் என மூன்றாய் நிகழும். அவற்றுள் சரியை என்பது திருக்கோயில் வழிபாடு செய்தல், அடியார்களைச் சிவன் எனவே கருதி வழிபடுதல் முதலியன. இது புற வழிப்பாடு என்பது புலனாகும். கிரியை என்பது தம் தம் இல்லங்களில் சிவலிங்கப் பெருமானை ஆன்மார்த்த மூர்த்தியாக எழுந்தருளுவித்துக் கொண்டு அகத்தும் புறத்தும் வழிபடுதல். இதில் உடலோடு உள்ளமும் ஈடுபடுவதால் புறமும் அகமும் கலந்த வழிபாடாகிறது. யோகம் என்பது மனத்தை அடக்கி ஒருவழியில் நிறுத்தி இறைவனை அகக் காட்சியிற் கண்டு அவனோடு உள்ளம் ஒன்றுபடுதல். இஃது அக வழிபாடு ஆகும்.

சரியை கிரியை யோகம் ஆகிய இவ்வழிபாட்டினை உலகப் பற்றுடன் செய்யாமல், பற்றற்ற நிலையில் செய்தால் அதுவே உண்மைத் தவம் ஆகும். உண்மைத் தவத்தினால் ஆன்மாவினது அறிவு மேலும் மேலும் நுணுகி வரும். அது நுணுகி வர வர, அதனை மறைத்து நின்ற ஆணவ மலமும் அதற்கேற்பத் தேய்ந்து தேய்ந்து வரும். அந்நிலையில் அவ்வான்ம அறிவின் கண் இறைவனது திருவருள் பதிந்து மேம்பட்டு விளங்கி வரும். அதனால் உலக இன்பத்தில் வெறுப்பும், வீட்டின்பத்தில் விருப்பும் வளர்ந்து வரும். ஞான நெறியில் மனம் செல்லும், இப் பக்குவநிலை உடையவரே சீடராதற்கு ஏற்றவர்.

இங்கே, ஆசிரியர் மாணாக்கரை நோக்கி யோகம் நிகழ் புதல்வா என அழைக்கிறார். அம்மாணாக்கர் சரியை கிரியைகளை முற்றச் செய்து, யோக நெறியில் நின்று அதன் பயனாக ஞானத்தைப் பெறுதலில் வேட்கையுற்று இவ்வினாக்களைக் கேட்கின்றார் ஆகலின் தாம் கூறும் விடைகளை

வாங்கிக் கொள்ளும் பக்குவம் அவர்க்கு இருத்தலை நோக்கியே இவ்வாறு அழைக்கின்றார் என்று கொள்ளலாம்.

## பாசம்

## ஆறாறு தத்துவங்கள்

இனி, ஆறாறு தத்துவம் ஏது? என்ற முதல் வினாவுக்கு விடையளிக்கின்றார் ஆசிரியர். அவ்விடைகள் மிகவும் சுருக்கமாகவே உள்ளன. இப்பொழுதே நேராக நாம் செய்யுட்குச் சென்றால் பொருளை விளங்கிக் கொள்வதில் சிக்கலும் சிரமமும் ஏற்படும். ஆதலால் முதலில் தத்துவங்களைப் பற்றி ஓரளவு விரிவாகத் தெரிந்து கொள்வோம். முன்கூட்டியே தத்துவங்கள் தொடர்பான செய்திகளைத் தெரிந்து கொண்டால் பின் செய்யுட்களை விளங்கிக் கொள்ளுதல் எளிதாகும்.

## மாயை என்னும் மூலப் பொருள்

ஒருவனால் செய்யப்படுகின்ற பொருள் காரியப் பொருள் எனப்படும். அவன் பலவாகிய பகுதிகளை இணைத்துச் சேர்த்து அக்காரியப் பொருளை உருவாக்குகிறான். எனவே காரியப் பொருளெல்லாம் பகுதிகளை உடையதாக இருக்கும் என்பது தெளிவு நாம் கையில் அணியும் கடிகாரம், உடம்பில் அணியும் ஆடை, தோளில் அணியும் மாலை, கழுத்தில் அணியும் நகை முதலியவையெல்லாம் பல பகுதிகளை உடைய காரியப் பொருள்களேயாகும். உற்று நோக்கினால் உலகப் பொருள்கள் அனைத்துமே இத்தகைய காரியப் பொருள்கள்தாம் என்பது புலனாகும் நாம் வாழுகின்ற இப்பெரிய நிலவுலகையே எடுத்துக் கொள்ளுங்கள். மண், நீர், தீ, காற்று, வெளி என்னும் ஐம்பூதங்களாகிய பகுதிகளின் சேர்க்கையால் உருவானது தானே இவ்வுலகம். எனவே இவ்வுலகமும் ஒரு காரியப் பொருளே.

முதலாசிரியராகிய மெய்கண்டார் உலகம் காரியப் பொருள் என்பதைப் பின்வருமாறு உணர்த்துவார். உலகில் எண்ணற்ற பொருள்கள் காணப்படுகின்றன. அவையெல்லாம் உலகின் பகுதிகளாக உள்ளன. அப்பகுதிகளெல்லாம் சேர்ந்த காரியப் பொருள் தான் உலகம். உலகின் பகுதிகளாய் அமைந்த சடப்பொருள்கள் அனைத்தையும் இரண்டு வகையுள் அடக்கி விடலாம். பல்வேறு பிறவிகளாகக் காணப்படும் உடம்புகளாகிய சடப் பொருள்கள் எனபன ஒருவகை. உடம்பு அல்லாத பிற சடப் பொருள்கள் எல்லாம் இரண்டாம் வகை. நிலம், நீர் முதலிய பெரும் பொருள்களும் அவற்றினால் ஆக்கப்படும் சிறு பொருள்களும் ஆகிய

எல்லாம் இரண்டாம் வகையில் அடங்கிவிடும். முதல் வகையினவாகிய உடம்புகளையும் கூட ஆண் உடம்பு. பெண் உடம்பு என இருவகைப்படுத்திக் கூறலாம் தானே. எனவே முன்னர்கூறிய இருவகையை இப்படி மூவகைப்படுத்திக் கூறலாம். அஃதாவது ஆண் உடம்பு பெண்ணுடம்பு, அவையல்லாத பிற சடப் பொருள் என வகைப்படுத்தலாம். உலகப் பொருள் அனைத்தும் இம்மூவகையுள் அடங்கி விடும் அன்றோ? மெய்கண்டார் இவ்வாறுதான் வகைப்படுத்துகிறார். ஆணுடம்பை அவன் என்ற சொல்லாலும், பெண்ணுடம்பை அவள் என்ற சொல்லாலும், பிறவற்றை அது என்ற சொல்லாலும் குறிப்பிடுகிறார். இம்மூன்றன் கூட்டம்தான் உலகம் என்பாராய், அவன் அவள் அது எனும் அவை என்று கூறி, உலகம் இவ்வாறு பகுதிகளை உடையதாகக் காணப்படுவதால் அது காரியப் பொருளே என நிறுவுகிறார்.

காரியப் பொருள் எதுவாயினும் அதற்கு ஒரு மூலப்பொருள் வேண்டும். குடம் என்ற காரியப் பொருளுக்குக் களிமண் மூலப் பொருள். நாற்காலிக்கு மரம் மூலப்பொருள். நகைக்குப் பொன் மூலப் பொருள். மூலப் பொருளை முதற் காரணம் என்று குறிப்பிடுவர். மற்றவை யெல்லாம் நிரம்ப இருப்பினும் எந்த ஒன்று இல்லாமல் காரியம் தோன்றாதோ அந்த ஒன்றே முதற் காரணம் எனப்படும். குடம் என்ற செயப்படுபொருள் உருவாவதற்குச் சக்கரம், கழி முதலியவை பயன்படுகின்றன. அவற்றையெல்லாம் குறைவறப் பெற்றிருந்தாலும் களிமண் என்ற ஒன்று இல்லையேல் குடம் தோன்றாது. அது பற்றியே களிமண் முதற்காரணம் எனப்படுகிறது. இவ்வுண்மை பிற காரியப் பொருள்களுக்கும் பொருந்தும்.

உலகம் காரியப் பொருள் எனப் பார்த்தோம் எனவே காரியமாகிய உலகுக்கும் ஒரு முதற் காரணம் இருத்தல் வேண்டுமன்றோ? அம்முதற் காரணமாகிய மூலப் பொருள் எது? அதுவே மாயை என்பது.

## மாயையின் நுண்மையும் விரிவும்

மாயை எப்படியிருக்கும்? அது கண்ணுக்குப் புலப்படாத நுண்மை உடைய அருவப் பொருள் ஆகும். பின்வருமாறு சொன்னால் அதன் நுண்ணிலை ஒருவாறு விளங்கும். மாயையிலிருந்து தான் எல்லாக் காரியப் பொருள்களும் தோன்றுகின்றன. காரியம் காரணத்தை விடப் பருமையாக இருக்கும். பருமை தூலம் எனப்படும். எனவே மாøயிலிருந்து

படிமுறையில் தோன்றும் காரியப் பொருள்கள் ஒன்றைவிட ஒன்று தூலமாக இருக்கும். இறுதியில் தோன்றும் காரியங்கள் முந்திய எல்லாவற்றையும் விடத் தூலமாக இருக்கும். மாயையிலிருந்து இறுதியாகத் தோன்றுகின்ற தூலமான காரியங்களில் ஒன்றாக இருப்பது ஆகாயம். முன்னே தோன்றிய காரியங்களைப் பார்க்கத் தூலமான அந்த ஆகாயமே நமக்குப் புலப்படாத அருவமாக இருக்கிறதே. அவ்வாறாயின் அதற்கு முன்னே தோன்றிய காரியங்கள் அதைவிட எவ்வளவு நுண்ணியவாக இருக்கும்! அக்காரியங்கள் அனைத்திற்கும் மூலமாக இருக்கும் மாயை என்பது எத்துணை எத்துணை நுண்ணியதாக இருக்கும் என்பதைச் சொல்லவும் கூடுமோ?

இத்துணை நுண்ணியதாகிய மாயை எங்கும் விரிந்து நிறைந்திருக்கும். அதன் விரிவைப் பின்வருமாறு சொன்னால் ஓரளவு விளங்கும்\.காலையில் வீட்டு வாசல் வழியாகவோ பலகணி வழியாகவோ நுழையும் சூரியவொளிக் கற்றையில் மிதக்கும் சிறுசிறு துகள்கள்தாம் எத்தனை? அத்தனை அண்ட கோடிகள் விரிந்து கிடக்கின்றன. அவ்வண்ட கோடிகளெல்லாம் விரிந்து தோன்றுவதற்கு இடமாக இருப்பது மாயையென்றால் அம்மாயையின் விரிவை நம்மால் உணரவும் கூடுமோ?

## சுத்த மாயையும் அசுத்த மாயையும்

இத்தகைய மாயை சுத்தமாய் உள்ள பகுதி என்றும், அசுத்தமாய் உள்ள பகுதி என்றும் இரு பகுதியாய் நிற்கும். சுத்தப் பகுதி என்பது ஆணவ மலத்தோடு கலவாதது. அசுத்தப் பகுதி ஆணவ மலத்தோடு கலந்தது எனவே மாயை ஒன்றே இங்ஙனம் சுத்தமும் அசுத்தமும் பற்றிச் சுத்தப் பகுதி சுத்த மாயை எனவும், அசுத்தப் பகுதி அசுத்த மாயை எனவும் இரண்டாக வைத்துக் கூறப்படும். குன்றிமணி ஒன்றே சிவந்ததும் கரியதும் ஆகிய இரு பகுதிப்பட்டதாய் விளங்குதலை இதற்கு உவமை கூறுவர் இன்னொரு உவமையும் கூறலாம். பூமியைச் சூழ்ந்து காற்று மண்டலம் உள்ளது. காற்று மண்டலத்தின் மேற்பகுதி மாசு கலவாமல் தூயதாய் விளங்குவது. கீழே உள்ள பகுதி தூசு, புகை முதலிய மாசுகள் கலந்து விளங்குவது. இக்காற்று மண்டலம் போன்றது மாயை எனலாம். காற்று மண்டலத்தின் தூய பகுதி மேலாய் விரிந்து விளங்க, மாசு படிந்த பகுதி அதற்குள்ளே நிற்கிறது. அதுபோலச் சுத்த மாயை மேலாய் விரிந்து நிற்க,

அசுத்த மாயை அதனுள்ளே அடங்கி நிற்கும். சுத்த மாயை வியாபகமும், அசுத்த மாயை அதில் வியாப்பியமும் ஆகும். வியாபகம் என்பதற்கு விரிவு என்பது பொருள். வியாப்பியம் என்பதற்கு உள்ளடங்கி நிற்றல் என்பது பொருள்.

மாமாயை குடிலை விந்து என்பன சுத்தமாயையைக் குறிக்கும் வேறு பெயர்கள். மோகினி என்பது அசுத்த மாயையின் மறுபெயர். ஆணவத்தோடு கலவாமையால் சுத்த மாயை மயக்கத்தைச் செய்யாது. அசுத்த மாயை ஆணவத்தின் சார்பினால் மயக்கத்தைச் செய்யும். அது பற்றியே அது மோகினி எனப்பட்டது. மோகினி மயக்குவது. மேலும் மாயை என்றாலே அஃது அசுத்த மாயையைத்தான் குறிக்கும்.

## பிரகிருதி மாயை

இனி, இவ்விரண்டு மாயைகளோடு பிரகிருதி மாயை என்பதையும் சேர்த்து மும் மாயைகள் என வழங்குவர். பிரகிருதி மாயை என்பது தனித்த ஒரு மாயையன்று. அஃது அசுத்த மாயையினின்றும் தோன்றிய காரியமேயாகும். அசுத்த மாயை மயக்கத்தைச் செய்யும் எனப் பார்த்தோம். அம் மயக்கம் சிறிதேயாகும். ஆயின் அசுத்த மாயையின் காரியமாகிய பிரகிருதி மாயையோ பெருமயக்கத்தைத் தருவதாகும். அசுத்த மாயை சுத்த மாயையின் உள்ளடங்கி நிற்பது எனப் பார்த்தோம். அவ்வாறே பிரகிருதி மாயை அசுத்த மாயையின் உள்ளாக அடங்கி நிற்பதாகும். எனவே சுத்தம், அசுத்தம், பிரகிருதி ஆகிய மும் மாயைகளையும் முறையே மேலாய் நிற்பது, அதன் உள்ளே நிற்பது. அதற்கும் உள்ளே நிற்பது என உணர்ந்து கொள்ளவேண்டும்.

நம்முடைய உலகம் தோன்றுவது பிரகிருதி மாயையிலிருந்துதான். எனவே பிரகிருதி மாயை நம்மோடு எவ்வாறு தொடர்பு கொள்கிறது என்பதை முதலில் நோக்குவோம்.

பிரகிருதி மாயை முக்குண வடிவாய் இருக்கும். சாத்துவிகம், இராசதம், தாமதம் என்பன அம்முக்குணங்கள். மணத்தினைத் தன்னுள்ளே நுட்பமாய் அடக்கி நிற்கும் அரும்புநிலை போலப் பிரகிருதி மாயை அம்முக்குணங்களையும் சூக்குமமாய் உள்ளடக்கி நிற்கும். எனவே முக்குணங்களும் வெளிப்படாது சூக்குமமாய் அடங்கி நிற்கும் நிலையே

பிரகிருதி மாயை எனலாம். பிரகிருதி என்ற சொல்லுக்குக் காரணம் என்பது பொருள். மேற்கூறிய முக்குணங்களுக்குக் காரணமாதல் பற்றிப் பிரகிருதி எனப்பட்டது. தமிழில் அது மூலப்பகுதி எனப்படும்.

## பிரகிருதி மாயையிலிருந்து தோன்றும்

## ஆன்ம தத்துவங்கள் 24

## அந்தக்கரணங்கள் 4

இத்தகைய பிரகிருதியினின்றும் உயிருக்கு உதவுவனவாகிய அகக் கருவிகள் முதலில் தோன்றும். அகக் கருவிகளை அந்தக் கரணங்கள் என்பர். சித்தம், புத்தி, அகங்காரம், மனம் என்னும் நான்குமே அவ்வகக்கருவிகள். அவை தோன்றும் முறையைப் பார்ப்போம்.

### சித்தம்

முக்குணங்களும் வெளிப்படாத காரண நிலையில் நின்ற பிரகிருதி பின்பு அக்குணங்கள் வெளிப்பட்டுத் தம்முள் சமமாய் நிற்கும் நிலையினதாய் ஆகும். அந்நிலையில் அது குண தத்துவம் எனப்படும். வெளிப்பட்டதனை வியத்தம் என்றும் வெளிப்படாது நிற்பதனை அவ்வியத்தம் என்றும் கூறுவர். பிரகிருதிக்கு அவ்வியத்தம் என்ற மறு பெயரும் உண்டு. அவ்வியத்தமாய் நின்ற பிரகிருதியே முக்குணங்களும் சமமாய் வெளிப்பட்டு வியத்தமாய் நிற்கையில் குணதத்துவம் எனப்படுகிறது. இக்குண தத்துவமே சித்தம் என்னும் அந்தக்கரணமாகும். சித்தம், ஆன்மா யாதொன்றையும் சிந்திப்பதற்குக் கருவியாய் அமையும்.

### புத்தி

முக்குணங்களும் சமமாய் நின்ற இக்குண தத்துவத்தில் புத்தி என்னும் அந்தக்கரணம் தோன்றும். புத்தியில் சாத்துவிக குணம் மிகுதியாகவும் ஏனைய இரு குணங்களும் குறைவாகவும் இருக்கும்.

இங்கே ஒன்றைச் சொல்ல வேண்டும். ஒன்றிலிருந்து மற்றொன்று தோன்றுகிறது என்றால் ஒன்று மற்றொன்றாய்ப் பரிணாமம் அடைகிறது என்பது கருத்தாகும். பரிணாமாவது மாற்றம் இதுபற்றி ஓர் ஐயம் எழக்கூடும். அஃதாவது குண தத்துவத்திலிருந்து புத்தி தோன்றும் எனப் பார்த்தோம். இப்பொழுது கூறியபடி குணதத்துவம் புத்தியாய்ப்

பரிணமிக்கும் என்றால் அவ்வாறு புத்தியாய்ப் பரிணமித்த பின்பு அக்குணதத்துவம் தன்நிலையில் நின்று தனக்குரிய செயலை எப்படிச் செய்யும்? என்பதே அவ்ஐயம் இதற்குரிய விடையைக் காண்போம்.

பரிணாமத்தில் இரண்டு வகையுண்டு. பால் முழுவதும் திரிந்து தயிராகி விடுகிறது. இம்மாற்றம் முழுப் பரிணாமம் எனப்படும். வெண்ணெயைச் சிலநாள் வைத்திருந்தால் அதன் ஒரு பகுதியில் புழுத்தோன்றும், ஒரு பகுதி புழுவாக மாறுவதால் இம்மாற்றம் ஏகதேச பரிணாமம் எனப்படும். பிரகிருதியிலிருந்து காரியங்கள் தோன்றுவது பால் தயிராவது போல முழுப் பரிணாமம் அன்று; வெண்ணெயில் புழுத்தோன்றுவது போல ஏகதேச பரிணாமமே யாகையால் ஒரு தத்துவம் தனது ஒரு பகுதியில் வேறொரு தத்துவமாய்ப் பரிணமிக்கும். அவ்வாறு பரிணமித்த பின்பும் பரிணமியாது நின்ற பகுதி முன்னைத் தத்துவமாகவே நின்று தனக்குரிய செயலைச் செய்யும். அம் முறையில் குணதத்துவம் தனது ஒரு பகுதியில் புத்தியாய்ப் பரிணமித்த பின்பும் தனது நிலையில் நின்று தனக்குரிய செயலைச் செய்வதற்குத் தடைஇல்லை. இது இனிவரும் பிற தத்துவங்களுக்கும் பொருந்தும்.

முக்குணங்களும் அறவே தோன்றாத நிலையைப் பார்த்தோம். அதுவே பிரகிருதி, முக்குணங்களும் சமமாய்த் தோன்றிய நிலையைப் பார்த்தோம். அதுவே குண தத்துவம். அதன்பின், முக்குணங்களுள் சாத்துவிகம் மிகுந்தும் ஏனையவை குறைந்தும் உள்ள நிலையைப் பார்த்தோம். அதுவே புத்தி தத்துவம். இனி வரும் காரியங்களிலெல்லாம் இதுபோல ஒவ்வொரு குணம் மிகுந்திருக்கும். ஏனையவை குறைந்திருக்கும் என்பதை நினைவிற் கொள்ள வேண்டும்.

இக்குணங்களுள் சாத்துவிக குணம் பிரகாசம், மென்மை, அமைதி முதலிய இயல்புகளைத் தோற்றுவிக்கும் இராசத குணம் வன்மை. செயலூக்கம், கொடுமை முதலிய இயல்புகளைத் தோற்றுவிக்கும், தாமத குணம், மந்தம், மூடம், மோகம் முதலிய இயல்புகளை விளைவிக்கும். சாத்துவிக குணம் இன்பத்திற்கும் இராசத குணம் துன்பத்திற்கும், தாமத குணம் மயக்கத்திற்கும் ஏதுவாகும்.

குண தத்துவத்தில் புத்தி தோன்றும் என அறிந்தோம். இவ்வந்தக்கரணமே ஆன்மா யாதொன்றையும் இஃது இன்னது என்று நிச்சயம் செய்வதற்குக்

கருவியாகும். இக் கருவி நிச்சயித்தல் ஆகிய அறிவுத் தொழிலைச் செய்தற்கு ஏற்றவாறு பிரகாசமான சாத்துவிக குணம் மிக்குடைய தாயிருத்தல் நோக்குதற்குரியது.

**அகங்காரம்**

புத்தி தத்துவத்தினின்றும் அகங்காரம் என்னும் அந்தக் கரணம் தோன்றும். இதில் இராசத குணம் மிகுதியாகவும் ஏனை இரு குணங்களும் குறைவாகவும் நிற்கும். யான் இதனை அறிவேன். யான் இதனைச் செய்வேன். யான் இதனை நுகர்வேன் என்றாற் போல எச்செயலிலும் ஆன்மா முனைத்தெழுவதற்கு இவ்வகங்காரமே கருவியாகும். அவ்வாறு எழுச்சியுறுவதற்கு ஏற்றவாறு இக்கருவி இராசத குணம் மிக்குடையதாயிருத்தல் காணலாம். எல்லா வகையான எழுச்சிக்கும் அகங்காரமே காரணமாய் இருத்தலால், இனித்தோன்றும் பல தத்துவங்களுக்கு அது காரணமாய் நிற்கிறது. அஃது எவ்வாறு என்பதைப் பார்ப்போம்.

அகங்காரம் குண இயல்பால் மூன்று கூறாய் நிற்கும். அவை சாத்துவிக குணக் கூறு, இராசத குணக் கூறு, தாமத குணக்கூறு என்பன. சாத்துவிக குணக் கூறு தைசத அகங்காரம் என்றும், இராசத குணக்கூறு வைகாரிக அகங்காரம் என்றும், தாமத குணக்கூறு பூதாதி அகங்காரம் என்றும் பெயர் பெறும்.

**மனம்**

அவற்றுள், சாத்துவிக குணக் கூறாகிய தைசத அகங்காரத்தினின்றும் முதலில் மனம் என்னும் அந்தக்கரணம் தோன்றம். இவ்வந்தக்கரணம் புறத்தேயுள்ள பொருளைச் சென்று பற்றுவதாகும். முன்னே கூறிய சித்தம், புத்தி, அகங்காரம் என்னும் மூன்றனோடு இம்மனமும் சேர, அந்தக்கரணம் நான்காயினவாறு காணலாம். இவை செயற்படும் முறைமையினைச் செய்யுள் 16இல் நாம் விளக்கமாகக் காணவிருக்கிறோம்.

**ஞானேந்திரியங்கள் 5**

அகக் கருவிகளாகிய இவைகளின் பின்னர்ப் புறக்கருவிகளாகிய ஞானேந்திரியங்களும் கன்மேந்திரியங்களும் தோன்றும், அவை தோன்றும் முறையைக் காண்போம்.

தைசத அகங்காரத்தினின்றும் மனம் தோன்றும் என அறிந்தோம். அவ்வகங்காரத்தினின்றே மனத்தின் பின்னர் ஞானேந்திரியங்கள் ஐந்தும் தோன்றும். அவை செவி, தோல், கண், நாக்கு, மூக்கு என்பன. இவை இம்முறையிலே ஒன்றன்பின் ஒன்றாகத் தோன்றும் இவை புறத்தே உள்ள ஓசை, ஊறு, ஒளி, சுவை, மணம் என்னும் புலன்களை ஆன்மா அறிதற்குக் கருவிகளாதலின் ஞானேந்திரியங்கள் எனப்பட்டன. தமிழில் அறிகருவிகள் என்றும், ஐம்பொறிகள் என்றும் கூறப்படும்.

இவ்விடத்தில் ஓர் ஐயம் எழலாம். மனமும் ஞானேந்திரியமும் ஆகிய இவை ஓரிடத்தில் தோன்றும் என்றல் பொருந்துமோ என்பதே அவ் ஐயம். செவி முதலிய ஞானேந்திரியங்களை வாயிலாகக் கொண்டு ஓசை முதலிய புலன்களைச் சென்று பற்றுவ மனமேயாகும். அகக் கருவியாகிய மனம் இவ்வாறு புறத்தேயும் சென்று புறக்கருவிகளாகிய ஞானேந்திரியங்கள் கவர்ந்தø வெளிப்புலன்களை மனமானது பற்றி அகத்தேயுள்ள புத்திக்குத் தருகிறது. இவ்வாறு மனம் ஏனைய அகக் கருவிகளுக்கும் ஞானேந்திரியங்களாகிய புறக் கருவிகளுக்கும் இடையே நின்று அகம் புறம் ஆகிய ஈரிடத்தேயும் விரைந்து செல்வதாய் உள்ளது. இதனால்,, ஏனைய அகக் கருவிகளைப் போலல்லாமல் மனமானது புறக் கருவிகளாகிய ஞானேந்திரியங்களோடும் இயைந்து நிற்கும் என்பது விளங்கும். இவ்வியைபு பற்றி, மனமும் ஞானேந்திரியங்களும் ஆகிய இவையிரண்டும் தைசத அகங்காரமாகிய ஓரிடத்தே தோன்றின என்று கொள்ளுதல் பொருத்தமுடையதேயாகும்.

சாத்துவிக குணம் பிரகாசம் உடையது ஆதலால் குண தத்துவத்தில் சாத்துவிக குணம் மிகுந்து போது நிச்சயித்தல் ஆகிய அறிவுத்தொழிலைச் செய்யும் புத்தி தோன்றிற்று எனப் பார்த்தோம். அது போலவே இங்கும் பிரகாசம் உடைய சாத்துவிகக் கூறிலிருந்து மனமும் ஞானேந்திரியங்களும் தோன்றியுள்ளமை காணலாம்.

ஞானேந்திரியங்களாவன செவி, தோல், கண், நாக்கு, மூக்கு என அறிந்தோம். இப்பெயர்கள் உறுப்புக்களின் பெயர்களாய் இருப்பினும் அவ்வுறுப்புக்கள் ஞானேந்திரியங்கள் அல்ல. அவ்வுறுப்புக்களில் நின்று அவ்வப்புலன்களை அறிவனவாகிய ஆற்றல்களே ஞானேந்திரியங்கள் எனப்படுகின்றன. எனவே செவியாகிய உறுப்பில் நின்று ஓசை என்னும் புலனை அறிகின்ற

ஆற்றலே செவியிந்திரியம் ஆகும். கண் ஆகிய உறுப்பில் நின்று ஒளி என்னும் புலனை அறிகின்ற ஆற்றலே கண்ணிந்திரியம் ஆகும். இவ்வாறே பிற இந்திரியங்களையும் கொள்ள வேண்டும். செவியாகிய உறுப்பு இருந்தும் ஓசையை அறிகின்ற ஆற்றல் அவ்விடத்தே இல்லாத போது கேட்டல் நிகழ்வதில்லை. இவ்வாறே பிற உறுப்புக்களிலும் அந்த அந்த ஆற்றல் இல்லாவிடில் அவ்வவ்வறிவு நிகழாமை கண்கூடு, இதனால் உறுப்பு என்பது வேறு. இந்திரியம் என்பது வேறு என்பதும். இந்திரியம் தங்கி நின்று அறிவதற்கு உறுப்பு இடமாகவுள்ளது என்பதும் தெளிவாகும்.

**கன்மேந்திரியங்கள் 5**

இனி, கன்மேந்திரியங்கள் தோன்றும் முறையைக் காண்போம். தைசத அகங்காரத்தினின்று மனமும், ஞானேந்திரியங்களும் தோன்றிய பின்னர், வைகாரிக அகங்காரத்தினின்றும் கன்மேந்திரியங்கள் ஐந்தும் தோன்றும். அவை வாய், கல், கை, எருவாய், கருவாய் என்பன இவை இம்முறையிலே ஒன்றன்பின் ஒன்றாகத் தோன்றும். இவை பேசுதல், நடத்தல் முதலிய தொழில்களைச் செய்தற்குக் கருவியாகலின் கன்மேந்திரியங்கள் எனப் பெயர் பெற்றன. தமிழில் தொழிற்கருவிகள் எனவும், செயற்பொறிகள் எனவும் கூறலாம். இவற்றால் நிகழும் தொழில்கள் முறையே பேசுதல், நடத்தல், இடுதல் ஏற்றல், கழித்தல், இன்புறல் என்பன.

கை இடுதல் ஏற்றல்களைச் செய்வதாகக் கூறினாலும் உடம்பில் உள்ள எந்த உறுப்பின் இயக்கமும் கையின் செயலாகவே கொள்ளப்படும். அஃதாவது காலை நீட்டுதல், மடக்குதல், தலையை அசைத்தல், புருவத்தை நெரித்தல், கண்களை இமைத்தல், வாயை அசைத்தல் முதலியவையெல்லாம் கையிந்திரியத்தின் தொழில்களாகவே கொள்ள வேண்டும்.

எருவாய் என மலக்கழிவு வாயினையே கூறினாலும் அஃது உடம்பில் உள்ள பிற கழிவு மண்டலம் முழுவதையும் குறிக்கும். எனவே மலசலம் கழித்தல், எச்சில் உமிழ்தல், உண்டதைக் கக்குதல், மூக்கு நீர் சிந்துதல், வியர்வையை வெளிப்படுத்தல் முதலியவையெல்லாம் எருவாயின் தொழில்களாகவே கொள்ளப்படும்.

கருவாயும் கழித்தல் ஆகிய தொழிலைத் தானே செய்கிறது. அதனை எருவாய் என்றதில் அடக்கி விடலாமே. அவ்வாறு செய்யாமல் தனியொரு இந்திரியமாக ஏன் கொள்ள வேண்டும் என வினவலாம். எருவாயின் செயலிலும் கருவாயின் செயலிலும் வேறுபாடு உண்டு. எருவாயின் செயலை அடக்கினால் அஃது உடலுக்குத் தீங்கு பயக்கும். ஆனால் கருவாயின் செயலை அடக்கினால் அஃது உடலை நன்றாக வைக்கும். உயிருக்கும் நலம் தரும். இவ்வேறுபாட்டினால் எருவாயும் கருவாயும் வெவ்வேறு இந்திரியங்களாதல் விளங்கும். மேலும் கருவாயின் செயலால் இனப்பெருக்கம் உண்டாதலாகிய வேறுபாடும் குறிப்பிடத்தக்கது.

ஞானேந்திரியங்களைப் பற்றிக் கூறும்போது உறுப்புக்கள் இந்திரியமல்ல; அவற்றை இடமாகக் கொண்டு நிற்கும் ஆற்றல்களே இந்திரியங்கள் எனக் குறிப்பிட்டோம். கன்மேந்திரியங்களுக்கும் இது பொருந்தும். வாய், கால் முதலிய இடங்களில் நின்று பேசுதல், நடத்தல் முதலிய செயல்களைச் செய்யும் ஆற்றல்களே கன்மேந்திரியங்களாகும்.

கன்மேந்திரியங்கள் தொழில் செய்யும் கருவிகளாதலின், ஊக்கத்தைத் தரும் இராசத குணக் கூறாகிய வைகாரிக அகங்காரத்தினின்றும் அவை தோன்றின என்றது பொருத்தம் உடையதாகும்.

## தன்மாத்திரைகள் - 5

இனி, கன்மேந்திரியங்களுக்குப் பின்னர் மூன்றாவது கூறாகிய பூதாதி அகங்காரத்திலிருந்து முதலில் தன்மாத்திரைகள் தோன்றும். அவை சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் என்பன. சத்த தன்மாத்திரை, பரிச தன்மாத்திரை, ரூப தன்மாத்திரை, ரச தன்மாத்திரை, கந்த தன்மாத்திரை, ஆகிய இவை ஐந்தும் இம் முறையிலே ஒன்றன் பின் ஒன்றாகத் தோன்றும். இவ் வைந்து தன்மாத்திரைகளிலிருந்தே பின்பு ஐம்பூதங்கள் தோன்றும்.

ஐம்பூதங்களுக்கு முதற்காரணமாய் நிற்றல் பற்றியே இவ்வகங்காரம் பூதாதி அகங்காரம் எனப்பட்டது. ஆயின் இதிலிருந்து பூதங்கள் நேரே தோன்றுவதில்லை. முதலில் தன்மாத்திரைகள் தோன்ற, அவற்றிலிருந்தே பூதங்கள் தோன்றும்.

தன்மாத்திரைகள் நுட்பமானவை. அவற்றிலிருந்து தோன்றும் காரியமான பூதங்கள் பருமையானவை. தன்மாத்திரைகளைச் சூக்கும பூதம் எனவும்.

பூதங்களைத் தூல பூதம், மகா பூதம் எனவும் வழங்குவர். பொதுவாகப் பூதம் என்றால் அது தூல பூதத்தையே குறிக்கும்.

தன்மாத்திரைகள் பற்றி மேலும் சிறிது கூற வேண்டும். தன்மாத்திரை என்ற சொல்லுக்கு அதனளவில் நிற்பது என்பது பொருள். அதனளவில் நிற்றல் என்றால் என்ன? பின்வருமாறு அதனை விளக்கலாம். ஓசையை நாம் கேட்கும் பொழுது அது வல்லோசை என்றோ, மெல்லோசை என்றோ, இனிய ஓசை என்றோ, இன்னா ஓசை என்றோ சில வேறுபாடுகளை உடையதாய்ச் சிறப்பு வகையால் நமக்குப் புலனாகுமேயன்றி, அவ்வேறுபாடுகள் இல்லாமல் வெறும் ஓசை என்னும் அளவில் பொதுவாய் அது புலனாகாது. ஊற்றினைத் தோல் மூலமாக உணரும் போது வழுவழுப்பு, சொரசொரப்பு, பிசுபிசுப்பு என்றாற் போலச் சிறப்பு வகையால் உணர்கின்றோமேயன்றி, அவ்வேறுபாடுகள் அற்ற வெறும் ஊற்றினை நாம் உணர்வதில்லை. சுவையும் இவ்வாறே, தித்திப்பு, கைப்பு, புளிப்பு என்றாற் போலச் சிறப்பாகப் புலனாகுமேயன்றி வெறும் சுவை என்னும் நிலையில் பொதுவாய் அது புலனாவதில்லை. ஏனையவையும் இவ்வாறே.

ஓசை முதலிய ஐந்தும் இங்குக் கூறிய சிறப்பு நிலையை எய்தாமல் பொதுவாய் நிற்கும் நிலை உண்டு. அஃதாவது ஓசை வன்மை மென்மை முதலிய பாகுபாடு இன்றி ஓசை என்னும் அளவில் நிற்கும். ஊறு வழுவழுப்பு முதலிய பாகுபாடு இன்றி ஊறு என்னும் அளவில் நிற்கும். சுவை இனிப்பு கசப்பு முதலிய பாகுபாடு இன்றிச் சுவை என்னும் அளவில் நிற்கும் அதனளவில் நிற்றல் என்பதன் பொருள் இதுதான். இவ்வாறு நிற்கும் பொதுநிலையிலே அவை தன் மாத்திரைகள் எனப்படுகின்றன. செவி முதலிய பொறிகளுக்குப் புலனாகாத நுண்ணிய நிலை இது.

## தன்மாத்திரைகளும் புலன்களும்

ஓசை முதலியவை முதலில் தம் நிலையில் தன்மாத்திரைகளாய் நின்று, பின்பு பூதங்களாய்ப் பரிணமிக்கும் அவ்வாறு பரிணமித்த பொழுது இவ்வோசை முதலியவை அப்பூதங்களை விட்டு நீங்காது அவற்றின் குணங்களாய் நிற்கும். அக்குணங்களும் சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் என்னும் பெயர்களையே பெறும். தமிழில் அவை ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் எனப்படும். இந்நிலையில் அவை செவி முதலிய பொறிகளுக்கு

அறியப்படும் பொருளாய் புலன்கள் எனவும் விடயங்கள் எனவும் குறிக்கப்படும்.

தன்மாத்திரைகளும் சத்தம் முலிய பெயர்களைப் பெறும். புலன்களும் அப்பெயர்களையே பெறும். அவற்றிடையே வேறுபாடாவது சூக்குமமாய் நிற்றலும், குணங்களாய் விளங்கி நிற்றலும் ஆகும். தன்மாத்திரைகள், பூதங்களும் முதற்காரணமாகிய தத்துவங்கள், புலன்கள் தத்துவங்கள் அல்ல. பூதங்களின் குணங்களாகிய அவை தாத்துவிகங்கள் எனப்படும்.

## பூதங்கள் (5)

தன்மாத்திரைகளிலிருந்து பூதங்கள் தோன்றும் எனக் குறிப்பிட்டோம். அப்பூதங்கள் தோன்றும் முறையை இனிக் காண்போம்.

சத்தம் முதலிய தன்மாத்திரைகளுள் ஒவ்வொன்றிலிருந்தும் ஒவ்வொரு பூதம் தோன்றும். சத்தத்திலிருந்து ஆகாயம் தோன்றும். பரிசத்திலிருந்து காற்றுத் தோன்றும். ரூபத்திலிருந்து நெருப்புத் தோன்றும். ரசத்திலிருந்து நீர் தோன்றும். கந்தத்திலிருந்து நிலம் தோன்றும்.

## பூதங்களின் குணங்கள்

காரணத்தின் தன்மையே காரியத்திலும் இருக்கும். ஆதலால் எந்தத் தன்மாத்திரையிலிருந்து எந்தப் பூதம் தோன்றிற்றோ அந்தத் தன்மாத்திரையை அந்தப் பூதம் தனது குணமாகக் கொண்டிருக்கும். இம்முறையில் ஓசை ஆகாயத்தின் குணமாய் நிற்கும். ஊறு காற்றின் குணமாய் நிற்கும்; ஒளி நெருப்பின் குணமாய் நிற்கும்; சுவை நீரின் குணமாய் நிற்கும்; நாற்றம் நிலத்தின் குணமாய் நிற்கும்.

தன்மாத்திரைகளைப் பற்றி அறிய வேண்டிய மற்றொரு செய்தி உண்டு. அஃதாவது, சத்த தன்மாத்திரை சத்தம் ஒன்றேயாய் நிற்கும். பரிச தன்மாத்திரை சத்தம்மும் பரிசமும் என்னும் இரண்டையும் உடையதாய் நிற்கும். உருவ தன்மாத்திரை சத்தமும் பரிசமும் ஆகிய இரண்டோடு உருவத்தையும் உடையதாய் நிற்கும். இரச தன்மாத்திரை சத்தம், பரிசம், உருவம் ஆகிய மூன்றோடு இரசத்தையும் உடையதாய் நிற்கும். கந்த தன்மாத்திரை சத்தம், பரிசம், உருவம், இரசம் ஆகிய நான்கோடு கந்தத்தையும் உடையதாய் நிற்கும்.

காரணங்களாகிய தன்மாத்திரைகள் இவ்வாறு ஒன்றும், இரண்டும், மூன்றும், நான்கும், ஐந்தும் உடையனவாம் ஆதலின், அவற்றினின்றும் தோன்றும் ஆகாயம் முதலிய பூதங்களும் முறையே ஒன்று, இரண்டு மூன்று, நான்கு, ஐந்து ஆகிய குணங்களை உடையவாயிருக்கும் அஃதாவது, ஆகாயம் ஓசை என்னும் ஒரு குணமே உடையதாகும். காற்று, ஓசை ஊறு ஆகிய இரு குணங்களை உடையதாகும். நெருப்பு ஓசை, ஊறு ஒளி ஆகிய மூன்று குணங்களை உடையதாகும். நீர் ஓசை ஊறு ஒளி சுவை ஆகிய நான்கு குணங்களை உடையதாகும். நிலம், ஓசை ஊறு ஒளி சுவை மணம் ஆகிய ஐந்தும் குணங்களை உடையதாகும்.

இக் குணங்களுள் இறுதியாய் நிற்பது அவ்வப் பூதத்திற்குரிய சிறப்புக் குணம் எனவும், ஏனையவை பொதுக் குணங்கள் எனவும் அறிதல்வேண்டும்.

**மின்னுருவை விண்ணகத்தில் ஒன்றாய் மிக்கு**

**வீசுங்கால் தன்னகத்தில் இரண்டாய்ச் செந்தீத்**

**தன்னுருவின் மூன்றாய்த் தாழ்புனலின் நான்காய்த்**

**தரணி தலத்து அஞ்சாகி திருமுறை)6: 54: 5) எனவும்**

**மண்ணதனில் ஐந்தை மாநீரில் நரன்கை**

**வயங்கெரியில் மூன்றை மாருதத் திரண்டை**

**விண்ணதனில் ஒன்றை திர)ுமுறை 6: 60: 3)**

எனவும் வரும்திருமுறைப் பகுதிகளில் ஐம்பூதங்களின் குணங்கள் கூறப்பட்டுள்ளமை காணலாம். இக்கருத்தமைந்த,

**பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய் போற்றி**

**நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி**

**தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி**

**வளியிடை யிரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி**

**வெளியிடை ஒன்றாய் விளைந்தாய் போற்றி போற்றித்) திருவகவல்137141)**

என்னும் திருவாசகப் பகுதி பலரும் அறிந்தது.

பூதங்கள் இக்குணங்களையேயன்றி வேறு குணங்களையும் உடையன. பூதம் ஒவ்வொன்றும் ஒவ்வொரு தொழிலையும் உடையது. அவைகளைப் பற்றிச் செய்யுள் 9இல் நாம் பார்க்க விருக்கிறோம்.

பூதங்களிலிருந்து தோன்றிய காரியங்களே நாம் வாழும் உலகமும், உலகத்திற் காணப்படும் பல்வேறு வகையான எண்ணற்ற பொருள்களும், பூதங்களும் பூதகாரியங்களும் ஆகிய இவையெல்லாம் உணர்வற்ற சடப் பொருள்களாயிருத்தல் தெளிவு. இவற்றிற்கெல்லாம் முதற் காரணமாய் நிற்பது பூதாதி அகங்காரம் எனவும், அது தாமதகுணக் கூறு எனவும் பார்த்தோம். தாமத குணம் என்பது மூட வடிவாயும் மோக வடிவாயும் இருப்பது. அதிலிருந்து சடமாகிய உலகம் தோன்றும் என்றது பொருத்தம் உடையதாகும்.



இதுகாறும் கூறியவற்றால் பிரகிருதி மாயையிலிருந்து தோன்றும் காரியங்கள் இவை இவை என்பது புலனாகும். மேற்கண்டவாறு அமைத்துக் காட்டுதல், அவற்றின் தோற்ற முறையை நினைவிற் கொள்ள உதவும்

இங்குக் காட்டிய காரியங்கள் இருபத்து நான்கும் தத்துவங்கள் எனப்படும். பிரகிருதி மாயை முதலில் தத்துவமாய்க் காரியப்பட்டே பின் உலகமாய்க் காரியப்படுவதாகும். வித்திலிருந்து நேரே மரம் தோன்றி விடுவதில்லை. வித்திலிருந்து முன்னர் முளை தோன்றும், அது பின்னர் மரமாகும். அதுபோலப் பிரகிருதியிலிருந்து முதலில் நுண் பொருளாகிய தத்துவங்கள் தோன்றும். பின்னே அவற்றின் காரியமாக உலகம் தோன்றும்.

## தத்துவங்கள் ஆன்மாவிற்குக் கருவியாய் நின்று உதவுதல்

தத்துவம் என்ற சொல்லுக்கு கருவி என்பது பொருள். எவ்வகையாலேனும் ஆன்மாவிற்குக் கருவியாய் நின்று உதவுவதே தத்துவமாகும்.

மேற்கூறிய தத்துவங்களில் அந்தக்கரணங்கள் நான்கும், ஞானேந்திரியங்கள் ஐந்தும், கன்மேந்திரியங்கள் ஐந்தும் ஆகிய பதினான்கும் ஆன்மாவின் அறிவு, தொழில்களுக்குக் கருவியாய் நிற்றல் வெளிப்படை. அவற்றின் பின்னர்த் தோன்றும் தன் மாத்திரைகளும் பூதங்களும் ஆகிய தத்துவங்கள் பத்தும் ஆன்மாவிற்கு எவ்வாறு கருவியாய் நின்று உதவுகின்றன என எண்ணலாம். தன்மாத்திரைகள் ஞானேந்திரியங்களுக்கும் கன்மேந்திரியங்களுக்கும் நிலைக்களமாய் அமைந்து அவை தம்மைப் பற்றி நின்று செயற்படுமாறு உதவும். பூதங்கள் அவ்விரு வகை இந்திரியங்களுக்கும் துணையாய் நின்று அவற்றின் ஆற்றலை மிகுவிக்கும். தன்மாத்திரைகளும் பூதங்களும் இவ்வகையில் ஆன்மாவிற்கு உதவும் தத்துவங்களாய் உள்ளன. இது பற்றிய விரிவான செய்திகளை 11முதல் 15 உள்ள செய்யுட்களில் நாம் காணவிருக்கிறோம்.

## தாத்துவிகங்கள்

இனி தத்துவங்களின் கூறுகளும் காரியங்களும் தாத்துவிகம் எனப்படும். தைசத அகங்காரம், வைகாரிக அகங்காரம், பூதாதி அகங்காரம் ஆகிய மூன்றும் அகங்காரத்தின் கூறுகள் என்பது நாம் அறிந்தது. ஆதலின் அவை தாத்துவிகங்களாம். அதுபற்றியே அவை தத்துவங்களோடு வைத்து எண்ணப் பெறவில்லை. பல்வேறு வகையான உடம்புகளும்,

அவ்வுடம்புகளின் புறத்தும் அகத்தும் உள்ள உறப்புக்களும் தத்துவங்களின் காரியங்களாகும். ஆதலால் அவை தாத்துவிகங்கள் எனப்படும். உடம்பாக அமையும் தாத்துவிகங்கள் அறுபது ஆகும். பின்வரும் அட்டவணையில் அவற்றைக் காணலாம்.

**தாத்துவிகம் 60 Table**

| | | |
|---|---|---|
| பிருதிவியின் கூறு | 5 | எலும்பு, தசை, மயிர், தோல், நரம்பு |
| அப்புவின் கூறு | 5 | சிறுநீர், இரத்தம், சிலேத்துமம், வியர்வை, சுக்கிலம் அல்லது சோணிதம் |
| தேயுவின் கூறு | 5 | இருதயத்தில் வெப்பம், பசித்தீ, கண்ணில் வெப்பம், உடம்பில் வெப்பம், கபால வெப்பம் |
| வாயுவின் கூறு | 10 | உதானன், பிராணன், அபானன், சமானன், வியானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவ தத்தன், தனஞ்சயன் என்னும் வாயுக்கள் |
| ஆகாயத்தின் கூறு | 10 | அத்தி, அலம்புடை, இடை, பிங்கலை, சுழுமுனை, காந்தாரி, குகுதை, சங்கினி, சிகுவை, புருடன் என்னும் நாடிகள் |
| ஞானேந்திரியங்களின் விடயங்கள் | 5 | சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் |
| கன்மேந்திரியங்களின் விடயங்கள் | 5 | வசனம்(பேச்சு), கமனம்(நடை), தானம்(கொடை), விசர்க்கம்(போக்கு), ஆனந்தம்(இன்பம்) |
| அகங்காரத்தின் கூறு | 3 | தைசதம், வைகாரியம், பூதாதி |
| குற்றம் | 5 | காமம், குரோதம், உலோபம், மோகம், மதம்(மாற்சரியம் குரோதத்துள் அடங்கும் |
| குணத்தின் கூறு | 3 | சாத்துவிகம், இராசதம், தாமதம் |
| வாக்கு | 4 | சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி |

## பிரகிருதி தன் முக்குணங்களால் மயக்குதல்

இவ்வாறு பிரகிருதி மாயை இருபத்து நான்கு தத்துவங்களாக விரிந்து ஆன்மாக்களோடு பொருந்தி உலக நுகர்ச்சியைத் தருகிறது. காரணத்தில் உள்ளது காரியத்திலும் இருக்கும் எனப் பார்த்தோம். முதற்காரணமாகிய பிரகிருதி முக்குண வடிவானது. ஆகவே அதன் காரியமாகத் தோன்றும் தனு கரண புவன போகங்களும் முக்குணமயமாயிருக்கும். இவற்றைப் பொருந்துகிற ஆன்மாக்களும் முக்குணவயப்பட்டு இன்ப துன்ப மயக்கவுணர்வுகளை அடையும். பிரகிருதி தனது முக்குண வேறுபாட்டான் உயிர்களது உள்ளத்தைப் பலவாறு மயங்கச் செய்யும். இவ்வகையில் பிரகிருதி மயக்கும் தன்மையுடைய ஒரு பெண் மகளைப் போன்றது. அவள் தன் ஆடை அணிகளாலும் குணங்களாலும் ஆடவனை மயக்குவது போலப் பிரகிருதி தன் காரியமாகிய முக்குணங்களால் ஆன்மாக்களை மயக்குகிறது என்று சொல்லப்படுகிறது.

மேற்கூறிய தத்துவம் இருபத்து நான்கும் ஆன்மாக்களுக்குப் போக சாதனமும், போக்கியமுமாய் அமைகின்றன ஆதலின் அவை **போக்கிய காண்டம்** என்று சொல்லப்படும். **போக்கியம்** - நுகரப்படுவது; **காண்டம்** - தொகுதி..

## ஆன்ம தத்துவம் - பெயர்க் காரணம்

இத்தத்துவங்கள் இருபத்துநான்கும் ஆன்ம தத்துவம் எனப்படுகின்றன இப்பெயருக்கான காரணம் அறிதற்குரியது. ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களாலும் கட்டுண்ட ஆன்மாக்கள் சகலர் எனப்படுவர். சகலராகிய ஆன்மாக்களுக்குத் தலைவர் சீகண்டவுருத்திரர். அவரே இறைவனது ஆணை வழி நின்று பிரகிருதி முதல் நிலம் ஈறாக உள்ள தத்துவங்களைத் தோற்றி ஒடுக்குபவர் ஆவர். ஆன்ம தத்துவம் என்பதில் உள்ள ஆன்மா என்ற சொல் சகலராகிய ஆன்மாக்களை முதலில் குறித்துப் பின்னர் அவர்கட்குத் தலைவராகிய சீகண்டவுருத்திரரைக் குறித்தது அவரால் செயற்படுத்தப் படுதலின் அத்தத்துவங்கள் ஆன்ம தத்துவம் எனப் பெயர் பெற்றன. இது மரபாகச் சொல்லி வரும் விளக்கம். இவ்வாறன்றிச் சகலராகிய ஆன்மாக்களுக்குச் சிறப்பாக உரியனவாய் நிற்றல் பற்றி இத்தத்துவங்கள் ஆன்ம தத்துவம் எனப்பட்டன என்று கூறுதலும் அமையும்.

இதுகாறும் நாம் விரிவாக அறிந்த செய்திகளைப் பின்வருமாறு தொகுத்துக் கூறலாம். உலகுக்கு முதற் காரணம் மாயை. அது சுத்த மாயை, அசுத்த மாயை என் இருபகுதியாய் நிற்கும். அசுத்த மாயையிலிருந்து தோன்றும் காரியமே பிரகிருதி மாயை, நாம் வாழும் உலகுக்கும், நமது உடம்புக்கும் நேரே காரணமாய் இருப்பது இப்பிரகிருதியேயாகும். பிரகிருதியிலிருந்து முதலில் அந்தக்கரணங்களும் பின்னர் ஞானேந்திரியங்களும் கன்மேந்திரியங்களும், அவற்றின் பின்னர் தன்மாத்திரைகளும், அவற்றிலிருந்து ஐம்பூதங்களும் தோன்றும். பூதங்களின் பரிணாமமே இவ்வுலகம்.

## ஆசிரியர் கீழிருந்து விளக்கிச் செல்லுதல்

பிரகிருதியிலிருந்து தொடங்கிப் பூதங்கள் முடியவுள்ள இருபத்துநான்கு தத்துவங்களையும் அவை தோன்றும் முறையிலே வைத்துக்காட்டினோம். இது தோற்ற முறையாகும். ஆயின் ஆசிரியர் மனவாசகம் கடந்தார் இம்முறையினை மேற்கொள்ளவில்லை. அவர் கீழிருந்து தொடங்குகிறார். அஃதாவது பூதங்களை முதலில் விளக்கிப் பின் மேல் மேல் உள்ளவற்றை விளக்கிச் சொல்கிறார். ஆசிரியரது அணுகுமுறை பற்றித் தொடக்கத்திலேயே குறிப்பிட்டோம். தெரிந்ததிலிருந்து தெரியாததற்குச் செல்லுதல் என்பதே அவர் பின்பற்றும் முறையாகும். தத்துவங்கள் அனைத்திலும் தூலமாய் உள்ளவை பூதங்களாகும் அவற்றின் காரியங்களே இவ்வுலகும், இதன்கண் உள்ள அளவற்ற பொருள்களுமாகும். இவ்வாறு பூதங்கள் தூலமாய், காரியப்பாட்டில் புலனாகும் பொருளாய் நிற்றலின், நமக்குத் தெரிந்த பொருளாகிய அவற்றையே முதலில் எடுத்துக் கொண்டு விளக்கப் புகுகின்றார் ஆசிரியர்.

## ஐம்பூதங்களின் வடிவு

**4. நாற்கோணம் பூமி, புனல் நண்ணு மதி யின் பாதி**

**ஏற்கும் அனல் முக்கோணம் எப்போதும் ஆர்க்கும்**

**அறுகோணம் கால் வட்டம் ஆகாயம் ஆன்மா**

**உறுகாயம் ஆம் இவற்றால் உற்று.**

### பதவுரை

**பூமி** மண்

**நாற்கோணம்** நாற்கோண வடிவு உடையது

**புனல்** நீர்

**மதியின் பாதி நண்ணும்** பாதியாய் உள்ள சந்திரனைப் போல அரைவட்ட வடிவினதாய் இருக்கும்

**அனல்** நெருப்பு

**முக்கோணம் ஏற்கும்** முக்கோண வடிவைப் பொருந்தும்

**எப்போதும் ஆர்க்கும் கால்** எப்போதும் இயங்கி ஓசை செய்யும் காற்று

**அறுகோணம்** அறுகோண வடிவினதாகும்

**ஆகாயம் வான்** வட்டம் வட்ட வடிவாய் இருப்பது

**ஆன்மா உறு காயம்** உயிர் வினைக்கு ஈடாகப் பொருந்துகின்ற தூல சரீரம்

**இவற்றால்** இப்பூதங்களின் பரிணாமத்தால்

**உற்று ஆம்** ஏற்பட்டு உயிருக்கு அமைந்ததாகும்

### பொழிப்புரை

ஐம்பூதங்களுள் நிலம் நாற்கோண வடிவாய் இருக்கும்; நீர் பாதி மதி போல அரைவட்ட வடிவாய் இருக்கும்; நெருப்பு முக்கோண வடிவாய் இருக்கும்; காற்று அறுகோண வடிவாய் இருக்கும்; வான் வட்ட வடிவாய் இருக்கும். உயிர் பெறுகின்ற உடம்பு இப்பூதங்களின் சேர்க்கையால் ஆனது.

### விளக்கம்

நிலம் முதலிய ஐம்பூதங்கள் வட மொழியில் பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் எனப்படும். இவற்றுக்குரிய வடிவங்கள் மேற்கூறியவாறு ஆகமங்களில் கூறப்பட்டுள்ளன. நமக்குக் கிடைத்துள்ள பருவுடம்பு பஞ்ச பூதங்களின் கூட்டத்தால் அமைந்தது. உடம்பிலுள்ள என்பு, தசை, மயிர்,

தோல், நரம்பு என்பவை பிருதிவியின் கூறுகளாகும். சிறுநீர், குருதி, வியர்வைவ முதலியவை அப்புவின் கூறுகள், பசித்தீ, உடம்பில் வெப்பம் முதலியவை தேயுவின் கூறுகள், பிராண வாயு முதலியவை வாயுவின் கூறுகள். பத்து வகையான நாடிகள் ஆகாயத்தின் கூறுகளாகும். நமக்குப் புலப்படுகின்ற நிலம், நீர், முதலியவை தத்துவங்கள் அல்ல. இவை காரியப் பொருள்கள். இவற்றிற்குக் காரணமான பஞ்ச பூத தத்துவங்களுக்கே இங்கு வடிவம் முதலியவை கூறப்படுகின்றன.

## பூதங்களின் நிறமும் எழுத்தும்

**5. பொன்பார்; புனல்வெண்மை; பொங்கும் அனல் சிவப்பு**

**வன்கால் கருணை; வளர் வான்தூமம்என்பார்**

**எழுத்து ல வ ர ய அ பாராதிக்கு என்றும்**

**அழுத்தமதாய் நிற்கும் அது**

### பதவுரை

**பார் பொன்** மண் பொன்னிறம் உடையது

**புனல்** வெண்மை நீர் வெண்ணிறம் உடையது

**பொங்கும் அனல் சிவப்பு** ஓங்கியெழும் நெருப்பு செந்நிறம் உடையது

**வன்கால் கருமை** வலிமை பொருந்திய காற்று கருநிறம் உடையது

**வளர் வான் தூமம்** பரந்து விரிந்த ஆகாயம் புகை நிறம் உடையது

**என்பார்** இவ்வாறு ஐம்பூதங்களின் நிறங்களை யோகக் காட்சியால் கண்டுணர்ந்தார் கூறுவர்

**பார் ஆதிக்கு** மண் முதலிய இப் பூதங்களுக்கு உரிய,

**எழுத்து** அவைகளின் உடன் நின்று தொழிற்படுத்தும் வித்து எழுத்துக்கள்(பீஜ அக்கரங்கள்)

**ல வ ர ய அ** முறையே ல,வ,ர,ய,ஹ எனப்படும் மெய்யெழுத்துக்களாம்

**அது** அவ்வெழுத்து (அப்பூதங்களில்)

**என்றும்** எப்போதும்

**அழுத்தமதாய் நிற்கும்** அழுந்தி நிற்கும்

## பொழிப்புரை

மண் பொன்னிறம் உடையது. நீர் வெண்ணிறம் உடையது. பொங்கி எழும் இயல்புள்ள நெருப்பு செந்நிறம் உடையது வலிமை மிக்க காற்று கரு நிறம் உடையது. எங்கும் பரவி நிற்கும் ஆகாயம் புகை நிறம் உடையது. இவ்வாறு பூதங்களின் நிறங்களை யோகக் காட்சியில் கண்டுணர்ந்த பெரியோர் கூறுவர்.

மண் முதலிய பூதங்களை உடன் நின்று செலுத்தும் மூலம் எழுத்துக்கள் முறையே ல,வ,ர,ய,ஹ எனப்படும் மெய்யெழுத்துக்களாம்.

## விளக்கம்

மூல எழுத்து வடமொழியில் பீஜ அட்சரம் எனப்படும். பீஜம்வித்து, ஹ என்ற வித்தெழுத்து செய்யுளில் அ எனக் குறிக்கப்பட்டுள்ளது.

எல்லாப் பொருள்களுக்கும் மூல ஒளிகள் உள்ளன என்று கொள்ளப்படும். அவையே அவ்வப் பொருள்களுக்குரிய மந்திரங்கள் அல்லது வித்து எழுத்துக்கள் ஆகும். அம்முறையில் இங்குப் பூதங்களுக்குரிய வித்தெழுத்துக்கள் கூறப்பட்டுள்ளன.

இறைவனது சத்தியாகிய திருவருள் எதனையும் நேராகத் தொழிற்படுத்தாது. அது சுத்த மாயையை ஊடகமாகவும் நிலைக்களமாகவும் கொண்டு நின்று பிறவற்றைத் தொழிற்படுத்தும் என்பது அறிதற்குரியது. மூல ஒலிகள் என்பவை சுத்த மாயையில் தோன்றுவன. அவை திருவருளுக்கு ஊடகமாகவும் நிலைக்களமாகவும் அமைகின்றன. திருவருள் அவற்றின் இடமாகக் கொண்டு பதிந்து நின்று அவற்றின் வழியாக ஐம்பூதங்களையும் செலுத்தும், அது பற்றியே மூல ஒலிகள் பூதங்களை உடன் நின்று செலுத்தும் என்று கூறப்பட்டது.

## பூதங்களின் அடையாளம்

**6. குறி குலிசம் கோகனதம் கொள்சுவத்தி குன்றா**

**அறு புள்ளி ஆரமுத விந்துபிறிவின்றி**

**மண் புனல்தீக் கால் வானம் மன்னும் அடைவே என்று**

**ஒண்புதல்வா.தும் ஓ ஆகமம் !**

### பதவுரை

**ஒண் புதல்வா** சிறந்த மாணாக்கனே!

**குறி** அடையாளமாக

**குலிசம்** வச்சிராயுதத்தையும்

**கோகனதம்** தாமரையையும்

**கொள்சுவத்தி** பொருந்திய சுவத்திகத்தையும்

**குன்றா அறுபுள்ளி** குறையாத ஆறு புள்ளியையும்

**ஆர் அமுத விந்து** அமுதத் துளியையும்

**அடைவே** முறையே

**மண் புனல் தீக்கால் வானம் மண்ணும் நீரும்** தீயும் காற்றும் வானும் ஆகிய ஐம்பூதங்களும்

**பிறிவின்றி** நீங்காமற் கொண்டு

**மன்னும் என்று** நிலை பெறும் என

**ஆகமம்** சிவாகமங்கள்

**ஓதும்** கூறும்

முதலில் அடையாளங்களை ஒரு வரிசையில் நிறுத்தி, மூன்றாம் அடியில் அவ்வடையாளங்களைக் கொண்டுள்ள பூதங்களை அதே வரிசையில் முறையே நிறுத்தியுள்ள பான்மையைக் காணலாம். எனவே, மண்ணிற்கு வச்சிரப் படையும், நீருக்குத் தாமரையும், தீக்குச் சுவத்திகமும், காற்றுக்கு

ஆறு புள்ளியும், வானுக்கு அமுதத் துளியும் அடையாளங்களாம் என்பது விளங்கும்.

சுவத்திகம் என்பது ஸ்வஸ்திக் என்ற வடிவம். இதனை தமிழில் இருதலை மேழி என்பர்.

## பொழிப்புரை

நன்மாணாக்கனே! மண்ணைக் குறிக்கும் அடையாளம் வச்சிராயுதம்; நீருக்கு அடையாளம் தாமரைப்பூ; நெருப்பிற்கு அடையாளம் கவத்திகம்; காற்றுக்கு அடையாளம் ஆறு புள்ளி; வானுக்கு அடையாளம் அமுதத் துளி. இவ்வாறு சிவாகமம் கூறும்.

## அதிதெய்வங்களும் அவர்கள் தொழில்களும்

**7. பாராதி ஐந்துக்கும் பன்னும் அதி தெய்வங்கள்**

**ஆர் ஆர் அயன் ஆதி ஐவராம் ஓரோர்**

**தொழில் அவர்க்குச் சொல்லுங்கால் தோற்றமுதல் ஐந்தும்**

**பழுதறவே பண்ணுவர்கள் பார்.**

## பதவுரை

| | |
|---|---|
| **பார் ஆதி** | மண் முதலிய |
| **ஐந்துக்கும்** | ஐந்து பூதங்களுக்கும் |
| **பன்னும்** | (சிவாகமங்கள்) சொல்லுகின்ற |
| **அதி தெய்வங்கள்** | அதி தெய்வம் ஆவார் |
| **ஆர் ஆர்** | யார் யார்? என்றால் |
| **அயன் ஆதி** | பிரமன் முதலிய |
| **ஐவராம்** | ஐவரும் ஆவர் |
| **ஓரோர் தொழில்** | ஒவ்வொரு தொழில் |

**அவர்க்குச் சொல்லுங்கால்** அவர்களுக்குச் சொல்லப்படும் அங்ஙனம் சொல்லுங்கால்

**தோற்றம் முதல் ஐந்தும்** படைத்தல் முதலிய தொழில்கள் ஐந்தினையும்

**பழுது அறவே** குற்றமின்றி

**பண்ணுவர்கள்** அவர்கள் செய்வார்கள்

**பார்** இதனை அறிவாயாக

**பொழிப்புரை**

நிலம் முதலிய ஐம்பூதங்களுக்கும் உரிய அதிதெய்வங்களை ஆகமங்கள் குறிப்பிடும். பிரமன் முதலிய ஐவரே அந்த அதிதெய்வங்கள். அவர்கள் முறையே படைத்தல் முதலிய ஐந்தொழில்களைச் செய்வர்.

**விளக்கம்**

இச்செய்யுளில் அதிதெய்வங்களையும், அவர்கள் தொழில்களையும் தொகுத்துக் கூறினார் ஆசிரியர் அடுத்த செய்யுளில் வகுத்துக் கூறுவார்.

**அதி தெய்வங்களின் தொழில்களை வகுத்துக் கூறுதல்**

**8. படைப்பன் அயன்மாயன் பங்கயக்கண் அளிப்பன் .**

**துடைப்பன் உருத்திரனும் சொல்லில் திடப்பெறவே**

**என்றும் திரோபவிப்பார் ஈசர்; சதாசிவரும்**

**அன்றே அநுக்கிரகர் ஆம்**

**பதவுரை**

**சொல்லில்** முந்திய செய்யுளில் தொகுத்துக் கூறிய தொழில்களை இங்கு வகுத்துக் கூறினால்

**அயன்** பிரம தேவன்

**படைப்பன்** படைத்தல் தொழிலைச் செய்வான்

**பங்கயக் கண் மாயன்** தாமரை போன்ற கண்களை உடைய மாயோன்

**அளிப்பன்** காத்தல் தொழிலைச் செய்வான்

**உருத்திரனும்** உருத்திரனும்

**துடைப்பன்** அழித்தலைச் செய்வான்

**திடம் பெறவே** உயிர்கள் உறுதி அடையும் படி

**ஈசர்** மகேசுரர்

**என்றும்** எப்பொழுதும்

**திரோபவிப்பர்** மறைத்தலைச் செய்வார்

**அன்றே** (மறைத்தல் தொழிலின் பயனாகப் பக்குவம் எய்திய உயிர்களுக்கு) அப்பொழுதே

**சதாசிவரும்** சதாசிவரும்

**அனுக்கிரகர் ஆம்** அருளும் தொழிலைச் செய்வார்

**பொழிப்புரை**

பிரமன் படைத்தல் ஆகிய தொழிலைச் செய்வான் மாயோன் ஆகிய திருமால் காத்தல் ஆகிய தொழிலைச் செய்வான். உருத்திரன் அழித்தல் ஆகிய தொழிலைச் செய்வான்.

உயிர்கள் பக்குவம் பெறுதற் பொருட்டு என்றும் மறைத்தல் ஆகிய தொழிலைச் செய்பவர் மகேசுரர். அதன் பயனாகப் பக்குவம் எய்திய உயிர்களுக்கு அப்பொழுதே அருள்புரியும் தொழிலைச் செய்பவர் சதாசிவர்.

**விளக்கம்**

ஐந்தொழில்களாவன படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்பனவாம்.

## படைத்தல்

படைத்தலாவது இல்லாததைத் தோற்றுவித்தல் அன்று.இல்லாதது என்றும் இல்லாததேயாம். அதனை ஒரு காலத்தில் தோன்றச் செய்ய முடியாது. முயலின் தலையில் கொம்பு என்பது இல்லாதது. அதனை எக்காலத்திலேனும் தோற்றுவிக்க முடியுமா? ஆதலால் படைத்தல் என்பதற்கு உள்ளதைத் தோற்றுவித்தல் என்பதே கருத்தாகும்.

உள்ளதை ஏன் தோற்றுவிக்க வேண்டும்? அதுதான் உள்ளதாயிற்றே என வினவலாம். உள்ளது என்பதன் பொருளை முதலில் விளங்கிக் கொள்ள வேண்டும் ஒவ்வொரு பொருளுக்கும் இரண்டு நிலைகள் உண்டு. ஒன்று காரணநிலை; மற்றொன்று காரியநிலை. காரணநிலையாவது ஒரு பொருள் தனது காரணத்தில் நுட்பமாய் ஒடுங்கிப் புலப்படாதிருக்கும் நிலையாகும். காரிய நிலையாவது அப்பொருள் தனது காரண நிலையிலிருந்து வெளியே புலப்பட்டு நிற்கும் நிலையாகும்.

களிமண்ணால் ஆகிய குடத்தை எடுத்துக் கொள்வோம். குடமானது தோன்றுவதற்கு முன்னே தனது காரணமாகிய களிமண்ணில் நுட்பமாய் ஒடுங்கியிருந்தது. அதுவே குடத்தின் காரணநிலை. பின் வனைபவனின் முயற்சியால் அது வெளிப்பட்டுப் புலப்படும் நிலையை எய்தியது. இந்நிலையே காரிய நிலை. இவ்விரு நிலைகளும் எல்லாப் பொருள்களுக்கும் உண்டு.

காரணநிலையில் புலப்படாமல் உள்ள பொருளைப் புலப்படும் காரி நிலைக்குக் கொண்டு வருதலே படைத்தல் அல்லது தோற்றுவித்தல் எனப்படும். உள்ளதைத் தோற்றுவித்தல் என்பதன் பொருள் இதுவேயாகும். உலகைப் படைத்தல் என்பதனை இந்த வகையில் நாம் நோக்க வேண்டும். படைப்பதற்கு முன்னும் உலகம் தனது காரணத்தில் நுட்பமாய் ஒடுங்கியிருந்தது என்று கொள்ள வேண்டும்.

குடத்திற்கு மூலகாரணமாய் நிற்பது களிமண். அதுபோல உலகிற்கு மூலமாய் நிற்பது எது? அதுவே மாயை. மாயை என்னும் மூலப் பொருளைப் பற்றி நாம் முன்பே விரிவாக அறிந்துள்ளோம். அந்த மாயையிலே தான் இந்த உலகம் ஒடுங்கியிருந்தது. அதிலிருந்து உலகை வெளிப்படுமாறு செய்தலே படைத்தல் தொழில் என்பதாகும்.

இவ்வுலகானது உடல், கருவி, நிலம், நுகர்ச்சிப் பொருள் என நான்காகப் பாகுபட்டு நிற்கும். இவை தனு, கரணம், புவனம், போகம் எனப்படும். இவற்றைத் தோற்றுவித்து உயிர்களோடு பொருத்துதலே படைத்தல் தொழிலாகிறது.

## காத்தல்

உடம்பைப் பெற்ற உயிர்கள் உலகிடைப் போக்குவரவு புரிகின்றன. அறிகருவிகள், தொழிற் கருவிகள் ஆகியவற்றைக் கொண்டு உலகப் பொருள்களை அறிந்து பயன் கொள்ளுகின்றன. வினைகளைச் செய்கின்றன. வினைப் பயன்களாகிய இன்ப துன்பங்களை நுகர்கின்றன இவ்வாறு வினை நுகர்ச்சியின் பொருட்டு, உயிர்களுக்குக் கொடுக்கப்பட்ட உடம்பு முதலியவற்றைக் குறித்த காலம் வரை நிற்கும்படி செய்தலே காத்தல் தொழிலாகும்.

## அழித்தல்

இனி, உடம்பு முதலியவற்றை உயிர்களிடமிருந்து பிரித்து, அவற்றின் காரணத்தில் ஒடுக்குதலே அழித்தல் தொழில் எனப்படுகிறது.

எந்த உயிரும் தனக்குக் கொடுக்கப்பட்ட உடம்பையும் உலகையும் விட்டுப் பிரிவதை விரும்புவதில்லை. சாவு என்பது உயிருக்குச் செல்ல முடியாத துன்பமாகும். சற்று முன் வரை நன்றாகப் பேசிச் சிரித்துக் கொண்டிருந்தவர் துடுமென மாண்டு விழுவதைக் காணும்போது அவரைச் சார்ந்தவர் மனம் என்ன பாடுபடுகிறது? இறைவனே இது என்ன அநியாயம்? உனக்குக் கண்ணில்லையா? என்று கதறுகிறார்கள். இப்படிப்பட்ட அழித்தலை இறைவன் செய்தல் நன்றோ? என ஐயுறலாம், ஓர் எடுத்துக்காட்டினால் இதற்கு விடைகூறலாம்.

மகன் நோய்வாய்ப்பட்டு இளைத்திருந்தான். தந்தை மிகவும் கவலைப்பட்டார். மருத்துவர் வந்து பார்த்தார். பையனுக்கு இப்பொழுது முழு ஓய்வு தேவை. படிப்பது கூட அவனது நிலையைப் பாதிக்கலாம். என்று கூறிச் சென்றார். அவர் சொன்ன அறிவுரையைப் பையன் பெரிதாக எடுத்துக் கொள்ளவில்லை. அவன் வெளியே சென்று விளையாட விரும்பினான். ஆனால் தந்தையார் அனுமதிக்க வில்லை. இரவு நேரத்தில் கண் விழித்துப் படிக்க விரும்பினான்; அதற்கும் தந்தையார் விடவில்லை

புத்தகத்தை எடுத்துப் பூட்டி வைத்தார். விளக்கை அணைத்து விட்டார் இதையெல்லாம் கண்டு மகனுக்கு ஆத்திரம் வந்தது. ஆனாலும் என்ன செய்ய முடியும்? அப்பாவாயிற்றே!

மகனுடைய பார்வையில் தந்தையின் செயல் கொடுமையானதாகத் தெரிகிறது. ஆனால் மகன் மீது கொண்ட அன்பினால் அல்லவா தந்தை இப்படியெல்லாம் செய்கிறார்? விளையாட்டுப் பொருளை அவனிடமிருந்து விலக்கி வைக்கிறார். விளக்கை அணைத்து வைக்கிறார்; புத்தகத்தை அவனிடமிருந்து பிரித்து வைக்கிறார்.

இத்தந்தையின் செயல் போன்றது இறைவன் செயல். வினைப்பயன்களாகிய இன்ப துன்பங்களை மாறி, மாறி நுகர்ந்த உயிர்கள் அதனால் இளைப்பு எய்தி நிற்கும். அவ்இளைப்பினை நீக்கக் கருதுகிறான் இறைவன். அதன் பொருட்டே உடம்பு முதலியவற்றை உயிர்களிடமிருந்து பிரித்து வைக்கிறான் உயிர்களின் பார்வையில் இச்செயல் கொடுமையானதாகத் தோன்றலாம். ஆனால் ஆழ்ந்து நோக்கினால், உயிர்களின் மீது கொண்ட கருணையினால் அல்லவா இறைவன் இப்படிச் செய்கிறான் என்பது புலனாகும்; இறைவன் அழித்தலைச் செய்வது உயிர்களின் நன்மைக்காகவே என்பது விளங்கும்.

மேற்கூறிய முத்தொழில்களும் மாயாகாரியமாகிய சடப்பொருள்களிடத்தே இறைவன் செய்கின்ற தொழில்களாகும். சடமாகிய உடம்பு முதலியவற்றைத் தோற்றுவித்தல் அவற்றை நிலைநிறுத்துதல், பின் அவற்றை ஒடுக்குதல் என்பது பற்றி இவ்வுண்மை அறியப்படும். இனிச் சித்தாகிய உயிரினிடத்தே செய்கின்ற தொழில்களே அடுத்து வரும் மறைத்தலும், அருளலும் ஆகும்.

## மறைத்தல்

மறைத்தலாவது, மாயை கன்மங்களைச் செயற்படுத்தி உயிர்களைப் பிறப்பு இறப்புக்களிற் பட்டு உழலச் செய்தல். இதற்கு மறைத்தல் என்ற பெயர் ஏன்? எனில், மாயை கன்மங்கள் செயற்படும் பொழுது உயிர்களுக்கு மெய்யுணர்வு ஆகிய பேரறிவு தோன்றாமல், மயக்கவுணர்வு ஆகிய சிற்றறிவே தோன்றும். அச்சிற்றறிவு உயிர்களை உலகப் பொருள்களோடு பிணித்து அப்பொருள்களையே மேலும் மேலும் பெற்றுத் துய்க்கும்

படியான நாட்டத்தைச் செய்யும். இறைவனை நோக்கவிடாது உலகையே நோக்கி நிற்கச் செய்யும். அதன் காரணமாக உயிர்கள் பல அல்லல்களை அடையும். இவ்வாறு உயிர்கள் தம்மையும், தலைவனையும் அறியாது மயங்கி நிற்கச் செய்தலின் அவ்வகையில் இறைவனது செயல் மறைத்தல் எனப்படுகிறது.

மறைத்தலை இறைவன் ஏன் செய்ய வேண்டும்? என வினவலாம். ஆணவமாகிய நோய்க்கு மருந்தாகவே உயிர்களுக்கு மாயை கனமங்களைச் சேர்க்கின்றான். அவற்றின் வயப்பட்ட உயிர்கள் உலக வாழ்வில் பல அல்லல்களை அடைகின்றன. இவ்வாறு உயிர்களை உழலச் செய்தலின் பயன், ஆணவ மலத்தின் சத்தி தொழிதலேயாகும் ஓர் எடுத்துக்காட்டுக் கூறினால் இது விளங்கும்.

தெரு முனையில் ஒரு சிறிய காபிக் கடை. கடையின் முன்னே பெருங்கூட்டம் நாம் மெய் வருத்தம் பாராது முட்டி மோதி உள்ளே புகுந்து கடைக்காரனை அடைகிறோம். அவன் ஒரு சிறிய கண்ணாடித் தம்ளரில் (அதை அவன் எங்குதான் கண்டுபிடித்து வாங்கினானோ) காபியை சுடச்சுட ஊற்றிக் கொடுக்கிறான். வாய் பொறுக்காத அளவுக்குச் சூடு. கையில் கூட வைத்திருக்க முடியவில்லை. அருகில் இருந்த பலகையில் அதை வைக்கிறோம். நேரம் போகிறதே தவிரச் சூடு போகவில்லை. நாமோ விரைந்து போக வேண்டும். ஆகவே கடைக்காரனிடம் அப்பா கொஞ்சம் ஆற்றிக் கொடு என்கிறோம். அவன் வெறுமையாக இருந்த மற்றொரு தம்ளரை எடுத்துக் கொண்டு இதையும் அதையும் மேலும் கீழுமாக வைத்துக் கொண்டு காபி வானுக்கும் மண்ணுக்குமாகப் போய் வரும்படி ஆற்றுகிறான்! ஒரு துளி கூடச் சிந்தவில்லை(காபி ஆற்றுவதும் ஒரு கலைதான்) பிறகு நம் கையில் தருகிறான். இப்பொழுது சூடு தணிந்து விட்டது.

காபியைத் தம்ளரிலேயே அசையாமல் வைத்திருந்தால் அதன் சூடு குறையப் போவதில்லை. அதையே மேலும் கீழுமாகச் செலுத்தியவுடன் அதன் சூடு தானாகத் தணிந்து போயிற்று. அதே போல, உயிரானது இயக்கமற்றுக் கிடந்தால் அதனைப் பற்றியுள்ள ஆணவ மலம் நீங்கப் போவதில்லை. அது கருதியே இறைவன் மாயை கன்மங்களைக் கூட்டி உயிரைச் செயற்படுத்துகின்றான். உலக நுகர்ச்சியில் ஈடுபடுத்தியும்,

இளைப்பாற்றியும் வருகின்றான் இவ்வாறு உயிர் செயற்படச் செயற்பட அதனைப் பற்றியுள்ள ஆணவமும் செயற்பட்டு அதன் சத்தி மெல்ல மெல்லத் தேய்ந்து மெலிகிறது. அதன் பொருட்டே இறைவன் உயிர்க்குயிராய் மறைந்து நின்று மறைத்தல் தொழிலைச் செய்கின்றான். ஆணவத்தின் சத்தி மெலிவடைகிறது என்றால் அதன் மறைப்பு நீங்கி உயிரின் அறிவு வளர்ந்து வருகிறது என்பது கருத்தாகும்.

அழித்தலைச் செய்வது உயிர்களின் நன்மைக்காகவே என்று முன்னே கூறினோம். அதே போல மறைத்தலைச் செய்வதும் உயிர்களின் அறிவை வளர்த்து உய்வித்தற் பொருட்டே என்பதை உணர்தல் வேண்டும்.

## அருளல்

இனி அருளலாவது, உயிர்கள் அறிவு முதிர்ந்த பக்குவ நிலையில் தம்மை உணர்ந்து அதனாலே தலைவனையும் உணர்ந்து, பிறப்பு இறப்புக்களினின்றும் நீங்கி வீடு அடையும்படி செய்தலாகும்.

இதுவரை ஐந்தொழில்களைப் பற்றி விளக்கமாக அறிந்தோம். ஐந்தொழில்களில் படைத்தல் முதலிய மூன்றினையும் செய்வோர் பிரமன், மால், உரத்திரன் என்பத பலரும் அறிந்தது. ஏனைய மறைத்தலையும் அருளலையும் மகேசுரரும் சதாசிவரும் செய்வர்.

இவ்வாறு பலர் கூறப்படினும் உண்மையில் எல்லாவற்றையும் செய்பவன் சிவபெருமான் ஒருவனே என்பது உளங் கொள்ளுதற்குரியது சிவபிரானது ஓர் அதிகார சத்தியே அவரவரிடத்தில் நின்று அவ்வச் செயலை ஆற்றுகிறது. இந்நாளில் ஒரு மாநிலத்தை ஆட்சி செய்யும் முதல்வருக்கே எல்லா அதிகாரமும் உண்டு. அவருக்குக் கீழ் பல அமைச்சர்கள் இருப்பினும் அவர்களுக்கென்று சுதந்திரமாக எந்த அதிகாரமும் இல்லை முதல்வரது கருத்திற்கு மாறாக ஒரு சொல் கூறினாலும் அவர் பதவியில் இருக்க முடியுமா? இஃது எதைக் காட்டுகிறது? அமைச்சர்க் கென்று தனி அதிகார சத்தியில்லை என்பதைத் தானே காட்டுகிறது. மேலும் எந்த அமைச்சர் எந்தத் திட்டத்தை நிறைவேற்றினாலும் அது முதல்வர் நிறைவேற்றிய திட்டம் என்று தானே சொல்லப்படுகிறது. எனவே அமைச்சர்களிடத்தில் உள்ள அதிகார சத்தி முதல்வருடைய அதிகார சத்தியே என்பது விளங்கும். அது போலத் தவ மிகுதி காரணமாகப்

படைத்தல் முதலிய தொழில்களைச் செய்யும் அதிகாரிகள் ஆனோர் பிரமன் முதலியோர் அவர்களிடத்து நின்று அவர்களை வாயிலாகக் கொண்டு செய்விப்பது சிவசத்தியேயாகும். எனவே எல்லாச் செயல்களும் சிவனுடைய செயல்களேயாம்.

## ஐந்தொழில் இரண்டாய்ச் சொல்லப்படுதல்

இறைவன் உயிர்க்குயிராய் மறைந்து நின்று, உயிர்களைப் பிறப்பு இறப்புக்களில் மீள மீளச் செலுத்தி, உலக நுகர்ச்சியில் அழுத்தியும் இளைப்பாற்றியும் வருவதே மறைத்தல், ஆதலின் இம் மறைத்தல் தொழிலில் படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் மூன்று தொழில்களும் அடங்கும் என்பது ஊன்றி நோக்குவார்க்குப் புலனாகும். எனவே ஐந்தொழிலும் மறைத்தல், அருளல் என்ற இரண்டாய் அடங்கும் என்பது விளங்கும். மறைத்தல் பந்தம் என்றும், அருளல் வீடு என்றும் கூறப்படும். பந்தமுமாய் வீடும் ஆயினாருக்கு என வரும் திருவாசக அடியில் (திருப்பொற்சுண்ணம் 20) ஐந்தொழிலும் இவ்வாறு இரண்டாய்ச் சொல்லப்பட்டமை காணலாம்.

## முத்தொழிலில் அடக்கிக் கூறுதல்

பல சமயத்தவரும் பொதுவாகக் கொள்வது படைத்தல், காத்தல், அழித்தல் என்ற முத்தொழிலையே, அதற்கேற்ப ஐந்தொழிலை முத்தொழிலில் அடக்கிக் கூறலாம். அங்ஙனம் கூறும் போது, மறைத்தல், காத்தல் தொழிலில் அடங்கும்; அருளல் அழித்தல் தொழிலில் அடங்கும்.

## திடப் பெறவே

இச் செய்யுளில் ஆசிரியர் பிற தொழில்களை வாளா கூறி, மறைத்தல் தொழிலை மட்டும் திடப் பெறவே, என அடைகொடுத்துக் குறித்துள்ளமை நோக்குதற்குரியது. ஏனைய தொழில்களை மாணாக்கர் எளிதில் விளங்கிக் கொள்ளலாம். ஆனால் மறைத்தல் தொழிலை விளங்கிக் கொள்ளுதல். அத்துணை எளிதன்று. அதன் நோக்கத்தை உணர்ந்து கொள்ளுதலும் எளிதன்று. அதனைக் கருதியே ஆசிரியர்அடைமொழி தந்து, மறைத்தலின் நோக்கத்தைக் கிளந்தெடுத்துக் கூறுகின்றார். திடப் பெறவே என்பதற்கு உறுதியடையும் படி என்பது பொருள். உயிர்கள் உறுதியடையும்படி

மறைத்தலைச் செய்கின்றான் என்பது கருத்தாகிறது. உறுதியடைதல் என்றால் என்ன?

ஆணவ மலத்தின் தூண்டுதலால் உயிர் யான் யான் என்று எச்செயலுக்கும் தன்னையே தலைவனாகக் கொண்டு செருக்குற்று நிற்கும். இறைவனது மறைத்தல் தொழிலால் உயிர் பிறப்பு இறப்புக்களில் மாறி மாறிச் சுழன்று அளவிலாத் துயரங்களை மாறி மாறி அனுபவிக்கும் போதுதான் உயிரைப் பிணித்துள்ள ஆணவ மலத்தின் சத்தி குறையும். அறியாமை தேய்ந்து நல்லுணர்வு தோன்றும். தனக்கென ஒரு செயலும் இல்லை என்பதையும், எல்லாம் அவன் செயல் என்பதையும் சிறிது சிறிதாக உணரும்.

இதுவரை தன்னையே பெரிதாக மதித்திருந்த உயிர் இப்பொழுது இறைவனே என் வாழ் முதலாகிய பொருள் என்ற உறுதியைப் பெறும். ஆடை நெய்யுமிடத்தில் நூல் இழைகளின் ஊடே இங்குமங்கும் மாறி மாறி ஓடும் குழல் போல எனது உள்ளம் உலக ஆசைகளிற் பட்டு அலைந்தது அதனால் உன்னை மறந்தேன். மயக்கத்தைச் செய்யும் உடம்பிலே கிடந்து இளைத்தேன். உடையாய், அடியேன் உன் அடைக்கலம். என்று இறைவனிடம் முறையிடும். உலகத்தை நோக்காது இறைவனையே நோக்குகின்ற இந்த உறுதிதான் உயிரின் பக்குவ நிலையாகும். இந்த உறுதி நிலையை உயிர்கள் பெறும் பொருட்டே இறைவன் மறைத்தல் தொழிலைச் செய்கின்றான்.

இவ்வாறெல்லாம் விரித்துப் பொருள் கொள்ளும் படியாக் திடப் பெறவே என்ற சிறிய அடைமொழியை அமைத்துள்ள ஆசிரியரின் சொல்லாட்சி எண்ணி மகிழ்தற்குரியது.

## ஐம்பூதங்களின் செய்தித் தொகுப்பு

இதுவரையிலும் நாம் அறிந்த ஐம்பூதங்களின் வடிவம் முதலிய செய்திகளை இங்கே தொகுத்துக் கூறுவோம்.

### பிருதிவி(மண்)

| | |
|---|---|
| **வடிவம்** | நாற்கோணம் |
| **நிறம்** | பொன்மை |
| **குறி(அடையாளம்)** | வச்சிராயுதம் |

| | |
|---|---|
| **எழுத்து** | லகர மெய் |
| **அதி தெய்வம்** | பிரமன் |

**அப்பு(நீர்)**

| | |
|---|---|
| **வடிவம்** | அரைவட்டம் |
| **நிறம்** | வெண்மை |
| **குறி** | தாமரைப்பூ |
| **எழுத்து** | வகர மெய் |
| **அதி தெய்வம்** | திருமால் |

**தேயு(தீ)**

| | |
|---|---|
| **வடிவம்** | முக்கோணம் |
| **நிறம்** | செம்மை |
| **குறி** | சுவத்திகம் |
| **எழுத்து** | ரகர மெய் |
| **அதி தெய்வம்** | உருத்திரன் |

**வாயு(காற்று)**

| | |
|---|---|
| **வடிவம்** | அறுகோணம் |
| **நிறம்** | கருமை |
| **குறி** | ஆறு புள்ளி |
| **எழுத்து** | யகர மெய் |
| **அதி தெய்வம்** | மகேசுரன் |

**ஆகாயம்(வான்)**

| | |
|---|---|
| **வடிவம்** | வட்டம் |
| **நிறம்** | புகைமை |
| **குறி(அடையாளம்)** | அமுத விந்து |
| **எழுத்து** | ஹ |
| **அதி தெய்வம்** | சதாசிவன் |

**பூதங்களின் குணமும் செயலும்**

**9. மண் கடின மாய்த் தரிக்கும்; வாரிகுளிர்ந் தே பதமாம்**
**ஒண் கனல் சுட்டு ஒன்றுவிக்கும் ஓவாமல் வண்கால்**
**பரந்து சலித் துத்திரட்டும் பார்க்கில் ஆ காயம்**
**நிரந்தரமாய் நிற்கும் நிறைந்து.**

**பதவுரை**

| | |
|---|---|
| **பார்க்கில்** | ஆராய்ந்து பார்த்தால் |
| **மண் கடினமாய்** | மண் திண்மைக்குணம் உடைய தாய் |
| **தரிக்கும்** | பொருள்களைத் தாங்கும் |
| **வாரி** | நீர் |
| **குளிர்ந்தே** | குளிர்ச்சிக் குணம் உடையதாய் |
| **பதமாம்** | பொருள்களை மென்மைப் படுத்தும் |
| **ஒண்கால்** | ஒளி பொருந்திய தீ |
| **சுட்டு** | வெம்மைக்குணம் உடையதாய் |
| **ஒன்றுவிக்கும்** | பொருள்களை நீறாக்கி ஒன்றுபடுத்தும் |
| **வண்கால்** | வளமையுடைய காற்று |

| | |
|---|---|
| **ஓவாமல்** | ஒழியாமல் |
| **பரந்து சலித்து** | எங்கும் பரவி இயங்கி |
| **திரட்டும்** | பொருள்களைத் திரட்டும் |
| **ஆகாயம்** | ஆகாயம் |
| **நிரந்தரம் ஆய்** | வெளியாதல் ஆகிய குணம் உடையதாய் |
| **நிறைந்து நிற்கும்** | எப்பொருளிலும் ஊடுருவி நிறைந்து நிற்கும் |

**குறிப்பு** : ரந்திரம் வெளி, அதனோடு நி என்பது சேர்ந்து நிரந்தரம் என்றாயிற்று. நி என்பதற்குத் தனிப்பொருள் ஏதும் இல்லை.

## பொழிப்புரை

மண்ணின் குணம் திண்மை; செயல், எப்பொருளையும் தாங்குதல். நீரின் குணம் தண்மை, செயல், பொருள்களை மென்மைப்படுத்துதல், காற்றின் குணம் அசைவு(சலனம்) செயல், பரந்து கிடக்கும் பொருள்களை ஒருங்கு திரட்டுதல், ஆகாயத்தின் குணம் வெளியாதல்; செயல் எப்பொருளுக்கும் இடங்கொடுத்தல்.

## விளக்கம்

இச்செய்யுளில் கூறப்பட்ட பூதங்களின் குணங்களையும் தொழில்களையும் பின்வரும் அட்டவணையில் நிரல்படக் காணலாம்.

பூதத்தின்கண் உள்ளதாய் உணரப்படும் இயல்பு குணம் என்றும், அதனால் பிற பொருளின்கண் நிகழும் விளைவு செயல் என்றும் கொள்ள வேண்டும்.

காரணமாகிய தத்துவங்களில் இவை இருத்தலால்தான் காரியப் பொருள்களிடத்தும் காணப்படுகின்றன.

| பூதங்கள் | குணம் | தொழில் |
|---|---|---|
| மண் | திண்மை | பொருளைத் தாங்குதல் |
| நீர் | குளிர்ச்சி | பொருளை மென்மைப்படுத்துதல் |
| தீ | வெம்மை | பொருளை நீறாக்கி ஒன்றுபடுத்துதல் |

| | | |
|---|---|---|
| காற்று | அசைவு | பொருளைத் திரட்டுதல் |
| வான் | வெளியாதல் | பொருளில் ஊடுருவி நிறைந்து நிற்றல் |

**இனி, ஐம்புலன்**

**10. உள்ளபடி மாபூதம் ஓதினோம் உன்றனக்குக்**

**கள்ளமிகும் ஐம்புலனும் கட்டுரைக்கில் மெள்ளவே**

**ஓசை பரிசம் உருவம் சுவை நாற்றம்**

**ஆசை தரும் ஐம்புலனே யாம்.**

**பதவுரை**

**உன்றனக்கு** (நன்மாணாக்கனே) உனக்கு

**மாபூதம்** பெரும் பூதங்களின் இயல்பை

**உள்ளபடி** உள்ளவாறு

**ஓதினோம்** விளக்கிச் சொன்னோம்

**கள்ளமிகும் ஐம்புலனும்** இனி, மனத்தைக் கவரும் ஐம்புலன்களை

**கட்டுரைக்கில்** எடுத்துச் சொல்வதாயின்

**ஓசை பரிசம் உருவம் சுவை நாற்றம்** ஓசையும், ஊறும், உருவமும், சுவையும், மணமும் என்பவை

**ஆசை தரும்** ஆசையை மிகுவிக்கும்

**ஐம்புலனேயாம்** ஐம்புலன்களாகும்

**பொழிப்புரை**

இதுவரை தூல பூதங்களின் இயல்பை உள்ளவாறு எடுத்துரைத்தோம். இனி, மனத்தைக் கவர்ந்து வசஞ்செய்யும் ஐம்புலன்கள் இவை எனச் சொல்வோம். அவை ஓசை, பரிசம், உருவம், சுவை, மணம் என்பன. இவை ஆசையை மிகுவிப்பனவாகும்.

## விளக்கம்

### ஐம்புலன் என்பதற்குச் சிலர் கூறும் பொருள்

தூல பூதங்களைக் கூறிய பின்னர் அடுத்துக் கூற வேண்டுவது அப்பூதங்களுக்கு முதற்காரணமாய் உள்ள தன்மாத்திரைகளை ஆனால் ஆசிரியர் தன்மாத்திரைகளைப் பற்றிக் கூறாமல் ஐம்புலன்களைப் பற்றிக் கூறுலுறுகின்றார். அதனால் இச்செய்யுள் சிலருக்குத் தடுமாற்றத்தை உண்டாக்கியிருப்பதில் வியப்பில்லை. இவ்விடத்தில் ஐம்புலன்களைக் கூறுதற்கு ஏதும் இயைபில்லையே என்று கருதிய அவர்கள் ஐம்புலன் என்றதற்குத் தன்மாத்திரைகள் என்றே பொருள் எழுதிச் சென்றார்கள். அவ்வாறு பொருள் கூறுதல் பொருந்துமா என்பதை நோக்குதல் வேண்டும்.

ஆசிரியர் வாளா ஐம்புலன் என்று கூறியிருந்தால் அதற்குத் தன்மாத்திரைகள் என்று பொருள் கூறுதல் பொருந்துவதாகலாம். எவ்வாறெனில், ஓசை முதலிய ஐந்தும் பொறிகளால் கொள்ளப்படும் சிறப்பு நிலையை எய்திய பொழுது புலன் எனப்படும். அவை செவி முதலிய பொறிகட்குப் புலனாகாமல் நுண்மையாய் நிற்கும் நிலையும் உண்டு. அந்நிலையில் அவை தன்மாத்திரைகள் எனப்படும். புலனாகாமை பற்றி அவற்றை நுண்புலன்கள் என்றும் கூறலாம். அம்முறையில் செய்யுளில் ஐம்புலன் என்றும் மட்டும் கூறியிருந்தால் நுண்புலன்களை அவை குறிப்பதாகக் கொண்டு தன்மாத்திரைகள் எனக் கூறுதற்கு இடம் உண்டு.

### அடை மொழிகளால் ஆசிரியர் உணர்த்துவது

ஆசிரியர் ஐம்புலனைக் குறிப்பிடும் இரண்டு இடங்களிலும் அடை மொழி புணர்ந்துக் கூறியுள்ளார். கள்ளமிகும் ஐம்புலன் என்றும் ஆசை தரும் ஐம்புலன் என்றும் கூறியுள்ள அடை மொழிகளை நோக்குதல் வேண்டும். ஓசை முதலிய ஐந்தும் பூதங்களின் குணங்களாய் வெளிப்பட்டு நின்று செவி முதலிய பொறிகளால் கொள்ளப்படும் போதே அவை நம் மனத்தைப் பற்றுகின்றன. ஆசையை மிகுவிக்கின்றன. இவ்வகையில் அவை பொறிகளுக்கு விடயங்கள் ஆகின்றன. தன்மாத்திரைகள் அங்ஙனம் பொறிகளுக்கு விடயம் ஆவதுமில்லை. ஆசையை மிகுவிப்பதும் இல்லை. எனவே ஆசிரியர் அமைத்துள்ள அடை மொழிகளை நோக்கினால் அவர்

இங்கே தன்மாத்திரைகளைக் குறிக்கவில்லை என்பதும் புலப்படும். நிலையினவாகிய ஐம்புலன்களையே குறிப்பிட்டார் என்பதும் தெளிவாகும்.

## தன்மாத்திரைகளைக் கூறாமல் புலன்களைக் கூறிய காரணம்

தன்மாத்திரைகளே தத்துவங்கள் என்றும், ஐம்புலன்கள் என்பவை புலப்படும் குணங்களாகிய தாத்துவிகங்கள் என்றும் முன்னே குறிப்பிட்டது நினைவிருக்கலாம். இவ்விடத்தில் தன்மாத்திரைகளைக் கூறுதலே முறை. அதை விடுத்துத் தாத்துவிகங்கள் ஆகிய புலன்களைக் கூறியிருப்பது எக்காரணம் பற்றி? என வினவலாம்.

ஆசிரியரின் அணுகு முறையைப் பற்றி முன்னேயே கூறியுள்ளோ. தெரிந்ததைக் கொண்டு தெரியாததைப் பெறவைத்தல் என்பது அவர் பின்பற்றும் முறையாகும். நமக்கு நன்கு தெரிந்தவை ஐம்புலன்களாகிய விடயங்கள். சிறப்பு நிலையில் விளங்கி நிற்கும் குணங்களாகிய அப்புலன்களை எடுத்துக் காட்டி, அவற்றிற்கு மூலமாய் பொதுமையில் விளங்காது நுட்பமாய் நிற்கும் நிலைகள் உண்டு எனவும், அவையே தன்மாத்திரைகள் எனவும் குறிப்பாய் உணர்த்தினார் ஆசிரியர்.

குணமாதல் ஒப்புமை பற்றியும், பருப்பொருளாக வைத்து முதற்கண் உணர்த்துதல் எளிமையாதல் பற்றியும் புலன்களே இங்குக் குறிக்கப் பெற்றன எனக் கொள்ளலாம்.

## இனி, ஞானேந்திரியங்கள்

ஞானேந்திரியங்கள் ஆகிய அறிகருவிகள் மெய், வாய், கண், மூக்கு, செவி என்பன. மெய் என்பது உற்று அறிவதாகிய தோலினைக் குறிக்கும். வாய் என்பது சுவைத்து அறிவதாகிய நாக்கினைக் குறிக்கும். இவை தோன்றும் முறையினை முன்னே அறிந்தோம். இவை புலன்களை அறியும் முறையினை இப்போது காண்போம்.

## அறிதலின் இரண்டு வகை

ஆன்மா ஞானேந்திரியங்கள் ஆகிய இவ் வைம்பொறிகளைக் கொண்டு புறத்தே உள்ள ஓசை, ஊறு, ஒளி, சுவை, மணம் ஆகிய ஐம்புலன்களைப் பொதுவாக அறியும். பொதுவாக அறிதல் என்றால் என்ன? ஓர் எடுத்துக்காட்டினால் இதனை விளக்கலாம். தொலைவில் ஒருவர்

வருகிறார். முதலில் நம் கண்களுக்கு ஏதோ ஓர் உருவம் என்ற அளவில் மட்டுமே தெரிகிறது. பிறகு அவர் நெருங்கி வரவர அவரைப் பற்றிய விவரங்கள் தெரிகின்றன. அவரது பெயர் இன்னது என்று தெரிகிறது. கன்னங்கரிய அவரது நிறம் தெரிகிறது. தலையில் உள்ள வழுக்கை தெரிகிறது. அவர் அணிந்துள்ள சட்டைப் பையில் வைத்திருக்கும் பணம் கூடத்தெரிகிறது. அவரது நடையின் வேகமும் தெரிகிறது.

இக்காட்சியில் முதலில் நம் கண்களுக்குத் தெரிந்தது இஃது ஓர் உருவம் என்ற அளவில் மட்டும்தான். இதுவே பொதுவாக அறிதல் என்பதாகும். பின்னர் பெயர், நிறம், தலையின் அமைப்பு, அணிந்துள்ள சட்டை, நடக்கும் பாங்கு முதலிய விவரங்கள் சிறப்பாகப் புலப்படுகின்றன. அவற்றைக் கொண்டு அவர் இன்னார் என்று வேறுபடுத்தி அறிகின்றோம். இது சிறப்பாக அறிதலாகும். இதனால் அறிவில் இரண்டு வகை உண்டு என்பது புலனாகும். ஒன்று பொருள்களைப் பொதுவாக அறிதல், மற்றொன்று பொருள்களைச் சிறப்பாக அறிதல்.

## ஞானேந்திரியங்களால் நிருவிகற்பக் காட்சி நிகழ்தல்

செவி முதலிய ஞானேந்திரியங்கள் பொருள்களைப் பொதுவாக அறியுமேயன்றிச் சிறப்பாக அறியமாட்டா. செவி இஃது ஓர் ஓசை என்று மட்டுமே அறியும். தோல் இஃது ஓர் ஊறு என்று மட்டுமே என்று அறியும். கண் இஃது ஓர் உருவம் என்று மட்டுமே அறியும். நான்கு இஃது ஓர் சுவை என்று மட்டுமே அறியும். மூக்கு இஃது ஓர் மணம் என்று மட்டுமே அறியும்.

எனவே ஆன்மா ஞானேந்திரியங்களால் புலன்களைப் பொதுவாகவே உணரும் என்று சொல்லலாம். பொதுவாக அறிவதை நிருவிகற்பக் காட்சி என்பர். நிருவிகற்பம் வேறுபாடின்மை, ஒரு பொருளுக்குரிய பெயர், குணம், தொழில் முதலிய வேறுபாடுகள் ஏதும் தெரிய வாராமல் இஃது ஒன்று என்ற அளவில் மட்டும் அறிவதால் இது நிருவிகற்பக் காட்சி என்று குறிக்கப்பட்டது. இனி, அவ்வேறுபாடுகள் தெரிந்து இஃது இன்ன பொருள் என்று சிறப்பாக அறிதல் மனம் முதலிய அந்தக்கரணங்களில் செயற்பாட்டினால் விளைவதாகும். இவ்வாறு சிறப்பாக அறிவதை சவிகற்பகாட்சி என்பர். சவிகற்பம் வேறுபாட்டோடு கூடியது. அந்தக்கரணங்களினால் உண்டாகும் சிறப்புக் காட்சியைப் பற்றிப் பின்னால்

(செய்யுள் 16) நாம் பார்க்க இருக்கின்றோம். இப்பொழுது ஞானேந்திரியங்களைப் பற்றி ஆசிரியர் வழியில் நின்று அறிந்து கொள்வோம்.

**11. ஞானேந் திரியங்கள் நன்றா உரைக்கக் கேள்**

**ஊன மிகு பூதம் உற்றிடமா ஈனமாம்**

**சத்தாதி யை அறியும் தானம் செவி தோல் கண்**

**அத்தாலு மூக்கென்று அறி.**

**பதவுரை**

**ஞானேந்திரியங்கள்** ஞானேந்திரியங்களின் இயல்பை

**நன்றா** தெளிவாக

**உரைக்கக் கேள்** உரைக்கின்றோம் கேட்பாயாக.

**(அவ்விந்திரியங்கள்)**

**ஊனம் மிகு** தாமத குணம் மிகந்த

**பூதம்** சூக்கும பூதம் எனப்படும் தன்மாத்திரைகளை

**இடமா உற்று** இடமாகக் கொண்டு

**ஈனமாம்** இழிந்தனவாகிய

**சத்த ஆதியை** ஓசை முதலிய விடயங்களை

**அறியும்** அறிந்து வரும்

**தானம்** அவ்விந்திரியங்கள் தங்கித் தொழிற்படும் இடமாகிய உறுப்புக்கள்

**செவி தோல் கண்** செவியும், தோலும், கண்ணும்

**அத்தாலு மூக்கு என்று** அந்த நாக்கும் மூக்கும் என்று

**அறி** அறிவாயாக.

## பொழிப்புரை

ஞானேந்திரியங்கள் ஆகிய ஐம்பொறிகளின் இயல்பை யாம் விளக்கமாகச் சொல்வோம். நீ கேள்.

ஞானேந்திரியங்கள், சூக்கும பூதங்கள் எனப்படும் தன் மாத்திரைகளைத் தமக்கு இடமாகக் கொண்டு ஓசை முதலிய புலன்களை அறிந்துவரும். அவ் இந்திரியங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வோர் உறுப்பில் நின்று ஒவ்வொரு புலனைக் கவரும். அவற்றிற்கு இடமாகிய உறுப்புகள் செவி, தோல், கண், நாக்கு, மூக்கு என்று அறிவாயாக.

## விளக்கம்

### இந்திரியங்களுக்கு இடமாய் உள்ளவை

தமிழில் செவி முதலிய உறுப்புக்களின் பெயரே அவ்விடங்களில் நின்று அறியும் இந்திரியங்களுக்கும் பெயராக வழங்குகின்றன.

அவ்வவ் உறுப்புக்களில் இருந்து அறியும் ஆற்றல்களே இந்திரியங்கள் எனக் கூறியுள்ளது நினைவிருக்கலாம். எனவே இந்திரியங்களுக்கு இடமாவன உறுப்புக்கள் என்பது விளங்குகிறது. இனி, சூக்கும பூதங்களாகிய தன்மாத்திரைகளும் இந்திரியங்களுக்கு இடமாய் உள்ளன என்று கொள்ளப்படுகிறது. அவ்வாறாயின், இந்திரியங்களுக்கு உறுப்புக்களும் இடம்; தன்மாத்திரைகளும் இடம் என்று ஆகிறது. இதனை எவ்வாறு விளங்கிக் கொள்வது? ஓர் உவமையின் மூலம் இதனை விளக்குவோம்.

### ஊர்தியும் நிலமும் உவமையாதல்

ஒருவன் ஊர்தியில் ஏறிச் செல்கிறான். அவனுக்கு அவ்ஊர்தி நேரே இடமாய் அமைகிறது. அந்த ஊர்திக்கு இடமாய் உள்ளது நிலம். அம்முறையில் நிலமும் அவனுக்கு இடமாகிறது. இந்திரியம் ஊர்தியில் செல்பவனைப் போன்றது. தன்மாத்திரை ஊர்தி போன்றது. உறுப்பு நிலம் போன்றது. இதனால், இந்திரியங்களுக்குத் தன்மாத்திரைகள் நேரே இடம் என்பதும், உறுப்புக்கள் தன்மாத்திரை வழியாக இடம் என்பதும் விளங்கும்.

இந்திரியம், தன்மாத்திரை, உறுப்பு என்ற இம்மூன்றையும் இணைத்து இனிவரும் செய்யுட்களில் காண்போம்.

## ஞானேந்திரியங்கள் அறியும் முறை

**12. வான்இடமா நின்று செவி மன்னும் ஒலியதனை**

**ஈனமிகும் தோல்கால் இடமாக ஊனப்**

**பரிசம் தனை யறியும் பார்வையின்கண் அங்கி**

**விரவி உரு வங்காணு மே.**

**பதவுரை**

**செவி** செவி என்னும் இந்திரியம்

**வான் இடமா நின்று** (உறுப்பாகிய காதில் நிற்கும்) சத்த தன்மாத்திரையை இடமாகப் பற்றி நின்று

**ஒலியதனை** ஓசையாகிய புலனை

**மன்னும்** அறிந்து வரும்

**ஈனமிகும்** இழிவு மிகுந்த

**தோல்** தோல் என்னும் இந்திரியம்

**கால் இடமாக** (உறுப்பாகிய தோலில் நிற்கும்) பரிச தன்மாத்திரையை இடமாகப் பற்றி நின்று

**ஊனப் பரிசம் தனை** குற்றமுள்ள ஊறு என்னும் புலனை

**அறியும்** அறிந்து வரும்

**பார்வை** கண் என்னும் இந்திரியம்

**அங்கியின் கண் விரவி** (உறுப்பாகிய கண்ணில் நிற்கும்) உருவ தன்மாத்திரையை இடமாகப் பற்றி நின்று

**உருவம்** உருவமாகிய புலனை

**காணும்** அறிந்து வரும்

### பொழிப்புரை

செவி என்னும் இந்திரியம் (உறுப்பாகிய காதில் நிற்கும்) சத்த தன்மாத்திரையைப் பற்றி நின்று ஓசையாகிய புலனை அறியும். தோல் என்னும் இந்திரியம்(உறுப்பாகிய தோலில் நிற்கும்) பரிச தன்மாத்திரையைப் பற்றி நின்று ஊறு என்ற புலனை அறியும். கண் என்னும் இந்திரியம் (உறுப்பாகிய கண்ணில் நிற்கும்)உருவ தன்மாத்திரையைப் பற்றி நின்று உருவம் என்ற விடயத்தை அறியும்.

### விளக்கம்

ஆசிரியர் வான் இடமாய் எனவும் கால் இடமாக எனவும், அங்கி விரவி எனவும், பூதங்களை இந்திரியங்களுக்கு இடம் என்று கூறியுள்ளார். நாம் முன்பு கூறியவாறு தன்மாத்திரைகளே இந்திரியங்களுக்கு இடமாக இருக்கவும், பூதங்களை இடம் என்று ஆசிரியர் கூறியது ஏன்? இதற்குப் பின்வருமாறு விடை கூறலாம்.

தன்மாத்திரைகளும் பூதங்களும் முறையே முளையும் மரமும் போல சூக்குமமும் தூலமுமாய் நிற்பவை, பூதங்களின் சூக்கும நிலையே தன்மாத்திரைகள். தன்மாத்திரைகளோடு பூதங்களுக்கு உள்ள இவ் ஒற்றுமையைக் கருதி ஆசிரியர் தன்மாத்திரைகளுக்குப் பதில் பூதங்களை இடம் என்று கூறினார் எனலாம். மேலும், தெரிந்த பருப் பொருளாகிய பூதங்களைக் கூறித் தன்மாத்திரைகளைப் பெற வைத்தார் என்பதும் ஆசிரியரது இயல்புக்குப் பொருந்துவதேயாகும்.

ஆகவே செய்யுளில் வான் என்பது சத்த தன் மாத்திரயையைக் குறிக்கும். அங்கி என்பது உருவ தன்மாத்திரையைக் குறிக்கும்.

செவி, தோல், கண் ஆகிய இந்திரியங்கள் புறத்தே காணப்படும். காது, தோல், கண் ஆகிய உறுப்புக்களில் நிற்கும் சத்தம், பரிசம், உருவம் ஆகிய தன்மாத்திரைகளை இடமாகக் கொண்டு நின்று தம்காரியத்தைச் செய்யும் என்பது கூறப்பட்டது.

## ஞானேந்திரியங்கள் அறியும் முறை(தொடர்ச்சி)

**13. நன்றாக நீர்இடமா நாஇரதம் தான்அறியும்**

**பொன்றா மணம் மூக்கு பூஇடமா நின்று அறியும்**

**என்று ஓதும் அன்றே இறைஆ கமம் இதனை**

**வென்றார் சென்றார் இன்ப வீடு**

### பதவுரை

**நா** நாக்கு என்னும் இந்திரியம்

**நீர் இடமா** (உறுப்பாகிய நாவில் நிற்கும்) இரத தன்மாத்திரையை இடமாகப் பற்றி நின்று

**இரதம்** சுவையாகிய புலனை

**நன்றாக** நல்ல முறையில்

**அறியும்** அறிந்து வரும்

**மூக்கு** மூக்கு என்னும் இந்திரியம்

**பூ இடமா நின்று** (உறுப்பாகிய மூக்கில் நிற்கும்) கந்த தன்மாத்திரையை இடமாகப் பற்றி நின்று

**பொன்றா மணம்** கெடாத மணம் ஆகிய புலனை

**அறியும்** அறிந்து வரும்

**என்று** இவ்வாறு

**இறை ஆகமம்** சிவாகமங்கள்

**ஓதும்** கூறும்

**இதனை** இவ்விந்திரியங்களை

**வென்றார்** உலக விடயங்களில் செல்லாதபடி அடக்கிய ஞானிகளே

**இன்ப வீடு** பேரின்ப வீட்டினை

**சென்றார்** அடைந்தவராவார்.

## பொழிப்புரை

நாக்கு என்னும் இந்திரியம் (உறுப்பாகிய நாக்கில் நிற்கும்) இரத தன்மாத்திரையைப் பற்றி நின்று சுவையாகிய புலனை நன்றாக அறியும் மூக்க என்னும் இந்திரியம் (உறுப்பாகிய மூக்கில் நிற்கும்) கந்த தன்மாத்திரையைப் பற்றி நின்று மணமாகிய விடயத்தை அறியும்.

இவ்வாறு சிவாகமங்கள் கூறும். இவ் இந்திரியங்களைப் புலன்களில் செல்லாதபடி அடக்கிய ஞான வீரவே பேரின்ப முத்தியைப் பெறுவார்கள்.

## விளக்கம்

முந்திய செய்யுளிற் போலவே இங்கும் பூதங்களாகிய நீர் பூ(நிலம்) என்பன தன்மாத்திரைகளைக் குறிப்பன எனக் கொள்ளல் வேண்டும்.

நாக்கு, மூக்கு ஆகிய இந்திரியங்கள் புறத்தே காணப்படும் நாக்கு, மூக்கு ஆகிய உறுப்புக்களில் நிற்கும் இரதம். கந்தம் ஆகிய தன்மாத்திரைகளை இடமாகக் கொண்டு நின்று தம் காரியத்தைச் செய்யும் என்பது கூறப்பட்டது.

## வென்றார் சென்றார் இன்ப வீடு

ஞானேந்திரியங்கள் ஐந்தும் தத்தம் புலன்களை அறியும் முறையினை மேற்போந்த இரண்டு செய்யுட்களில் வகுத்துக் காட்டிய ஆசிரியர் அவ்விந்திரியங்களை வென்றார் எய்தும் பயனையும் உடன் சேர்த்துக் கூறினார்.

இந்திரியங்களை வெல்லுதல் என்றால் அவற்றைக் கெடுத்தல் என்பது பொருளன்று. சமணரும் சாக்கியரும் புலன்களைக் கவர்கின்ற ஐம்பொறிகளையும் அழிப்பதே அவற்றை வெல்லுதல் என்பர். சைவ சமயத்திற்கு அஃது உடன்பாடன்று ஐம்பொறிகளைக் கெடுத்தொழித்தால் உயிர் யாதொன்றையும் அறிய மாட்டாது அறிவற்ற சடம் போல ஆகிவிடும். ஆதலால் அவற்றைக் கெடுத்திடாது செயற்பட வைத்தே அவற்றால் கவரப்படும் புலன்களில் பற்றின்றி இருத்தலே அவற்றை வெல்லுதலாகும்.

ஐம்பொறிகள் நம்மைக் கெடுக்கவில்லை. ஐம்பொறிகளின் வழி ஐம்புலன்களின் மேற் செல்லுகின்ற ஆசையே நம்மைக் கெடுக்கின்றது. அவ் ஆசையை ஆரா இயற்கை அவா என்றார் திருவள்ளுவர். ஆராமையாவது நிரம்பாமை. ஐம்புலன்களுக்குச் சார்பாயுள்ள பொருள்களை எவ்வளது தான் பெற்றாலும், எத்தனை காலம்அனுபவித்தாலும் அவற்றின் மீதுள்ள ஆசை நிரம்புவதேயில்லை. அது பற்றியே ஆரா இயற்கை எனப்பட்டது.

உலகம் நிலையற்றது என்பதைக் கூறும் நூல்களைப் பல கால் படித்திருக்கிறோம். அவற்றின் பொருளைப் பலர் விளக்கிப் பேசியதையும் கேட்டிருக்கிறோம். இவ்வாறு உலகம் கானல் நீர் போன்றது என்பதைக் கல்வியினாலும் கேள்வியினாலும் உணர்ந்தாலும் அவையெல்லாம் இந்திரியங்களை அடக்குவதற்குத் துணை செய்யா. நிலையாமையை எவ்வளவுதான் உணர்ந்திருந்தாலும். நம் மனம் நிலையில்லாத ஐம்புலப் பொருள்களின் மேல் அவாக் கொண்டு அவற்றை நோக்கியே முடிவின்றி ஓடுகிறது. அவ்வாறு ஓடுகின்ற மனத்தை அடக்குதலே இந்திரிய அடக்கத்திற்கு நேர் வழியாகும்.

ஓடுகின்ற மனத்தை அடக்குமாறு எவ்வாறு? மதங் கொண்டு செல்கின்ற யானையை ஒரு தறியில் கட்டிவிடுதல் போல, ஐம்புலப் பொருள்களை விரும்பிச் செல்கின்ற மனத்தை அச் செலவினின்றும் மீட்டு, சிவபெருமானது உருவத் திருமேனியிலே படிந்து நிற்குமாறு சிவ வழிபாட்டில் ஈடுபடுத்த வேண்டும். இறைவனை உள்ளன்போடு வழிபாடு செய்து வரின் ஐம்புலன்களை நாடி ஓடுகின்ற மனம் மெல்ல மெல்ல அதனை விடுத்து அவனிடத்தே சென்று ஒடுங்கும். இந்திரியங்களும் பிற வழியிற் செல்லாது.

**கண்காள் காண்மின்களோ கடல்**

**நஞ்சுண்ட கண்டன் தன்னை**

**செவிகாள் கேண்மின்களோ சிவன்**

**எம்இறை செம்பவள**

**எரிபோல் மேனிப் பிரான்திறம் எப்போதும்**

**செவிகாள் கேண் மின்களோ**

**வாயே வாழ்த்து கண்டாய் மத**

**யானை யுரிபோர்த்துப்**

**பேய் வாழ் காட்டகத் தாடும் பிரான்தன்னை**

**வாயே வாழ்த்து கண்டாய்**

என்று அருளாசிரியர் அறிவுறுத்திய வழியிற் செல்லும், எனவே, இந்திரிய அடக்கம் என்பது உண்மையில் மன அடக்கமேயாகும்.

மேற்கூறிய வகையில் இந்திரியங்களையும், மனத்தையும் அடக்கி அவற்றை ஞானநெறியில் செலுத்தியவர் பேரின்ப வீட்டைத் தலைப்படுவர் என்பது இச் செய்யுளில் கூறப்பட்டது.

ஞானேந்திரியங்கள் அறியும் முறையைப் பின்வருமாறு அட்டவணைப் படுத்திக் காட்டலாம்.

| இந்திரியம் | சார்பு/பற்றுக்கோடு | உறுப்பாகிய இடம் | அறியப்படும் புலன் |
|---|---|---|---|
| செவி | சத்த தன்மாத்திரை | காது | ஓசை |
| தோல் | பரிச தன்மாத்திரை | தோல் | ஊறு |
| கண் | உருவ தன்மாத்திரை | கண் | ஒளி |
| நாக்கு | இரத தன்மாத்திரை | நாக்கு | சுவை |
| மூக்கு | கந்த தன்மாத்திரை | மூக்கு | மணம் |

**இனி, கன்மேந்திரியங்கள்**

**14. கண்ணுதல்நூல் ஓதியிடும் கன்மேந் திரியங்கள்**

**எண்ணும் வச னாதிக்கு இடமாக நண்ணியிடும்**

**வாக்குப் பா தம் பாணி மன்னு குதம் உபத்தம்**

**ஆக் கருதும் நாளும் அது**

**பதவுரை**

| | |
|---|---|
| **கண்ணுதல் நூல்** | சிவபெருமான் அருளிச் செய்த சிவாகம நூல் |
| **ஓதியிடும்** | சொல்லுகின்ற |
| **கன்மேந்திரியங்கள்** | தொழிற் பொறிகள் |
| **எண்ணும்** | வேறு வேறாய்க் கருதப்படும் |
| **வசன ஆதிக்கு** | பேச்சு முதலிய செயல்களை |
| **இடமாக** | தோற்றுவிப்பனவாக |
| **நண்ணியிடும்** | பொருந்தும். |

**(அத் தொழிற்பொறிகள் யாவை எனில்)**

| | |
|---|---|
| **வாக்கு** | வாய் |
| **பாதம்** | கால் |
| **பாணி** | கை |
| **மன்னு குதம்** | பொருந்திய எருவாய் |
| **உபத்தம் ஆ(க)** | கருவாய் என |
| **அது** | அச்சிவாகமம் |
| **நாளும்** | எப்போதும் |
| **கருதும்** | ஆராய்ந்துரைக்கும் |

**பொழிப்புரை**

இறைவன் அருளிச்செய்த ஆகம நூலில் சொல்லப்பட்டுள்ள கன்மேந்திரியங்கள் பேசுதல், போக்கவரவு செய்தல், ஏற்றல் இடுதலைச் செய்தல், கழிவுப் பொருள்களை வெளியேற்றுதல், சிற்றின்பம் செய்தல் ஆகிய செயல்களைச் செய்யும், அக்கன்மேந்திரியங்களாவன வாய், கால், கை, எருவாய், கருவாய் என்பன. அவை வடமொழியில் வாக்கு, பாதம், பாணி, பாயு, உபத்தம் என்று கூறப்படும்.

### கன்மேந்திரியங்கள் செயற்படும் முறை

**15. வாக்கு ஆகா யம்இடமா வந்துவச னிக்கும் கால்**
**போக்காரும் காற்றிடமாய் புல்கி அனல் ஏற்கும்**
**இடும் கை குதம் நீர் இடமா மலாதி**
**விடும் பார் இடம் உபத்தம் விந்து**

### பதவுரை

**வாக்கு** வாக்கு என்னும் இந்திரியம்

**ஆகாயம் இடமா வந்து** (வாய் ஆகிய உறுப்பில் நிற்கும்) சத்த தன்மாத்திரையை இடமாகப் பற்றி நின்று

**வசனிக்கும்** பேசுதலைச் செய்யும்

**கால்** பாதம் என்னும் இந்திரியம்

**காற்று இடமாய்** (கால் ஆகிய உறுப்பில் நிற்கும்) பரிச தன்மாத்திரையைப் பற்றி நின்று

**போக்கு ஆரும்** போக்கு வரவினைச் செய்யும்

**கை** பாணி என்னும் இந்திரியம்

**அனல் புல்கி** (கை யாகிய உறுப்பில் நிற்கும்) உருவ தன்மாத்திரையைப் பற்றி நின்று

**ஏற்கும் இடும்** ஏற்றல் இடுதலைச் செய்யும்

**குதம்** பாயு என்னும் இந்திரியம்

**நீர் இடமா** (எருவாய் ஆகிய உறுப்பில் நிற்கும்) இரத தன்மாத்திரையைப் பற்றி நின்று

**மல ஆதி விடும்** மலம் முதலியவற்றை வெளிப்படுத்தும்

**உபத்தம்** உபத்தம் என்னும் இந்திரியம்

**பார் இடம்(ஆக)** (கருவாய் ஆகிய உறுப்பில் நிற்கும்) கந்த தன்மாத்திரையைப் பற்றி நின்று

**விந்து(விடும்)** ஆடவர்க்குச் சுக்கிலமும் மகளிர்க்குச் சோணிதமும் வெளிப்படுத்தி இன்பஞ் செய்யும்

## பொழிப்புரை

வாக்கு என்ற இந்திரியம் (வாய் ஆகிய உறுப்பில் நிற்கும்) சத்த தன்மாத்திரையைப் பற்றி நின்று பேசுதலைச் செய்யும். பாதம் என்ற இந்திரியம் (கால் ஆகிய உறுப்பில் நிற்கும்) பரிச தன்மாத்திரையைப் பற்றி நின்று போக்குவரவு செய்யும். பாணி என்ற இந்திரியம் (கை ஆகிய உறுப்பில் நிற்கும்) உருவ தன்மாத்திரையைப் பற்றி நின்று ஏற்றல் இடுதலைச் செய்யும். பாயு என்ற இந்திரியம்(எருவாய் ஆகிய உறுப்பில் நிற்கும்) இரத தன்மாத்திரையைப் பற்றி நின்று மலம் முதலியவற்றை வெளிப்படுத்தும். உபத்தம் என்ற இந்திரியம்(கருவாய் ஆகிய உறுப்பில் நிற்கும்) கந்த தன்மாத்திரையைப் பற்றி நின்று விந்தினை வெளிப்படுத்தி இன்பம் செய்யும்.

## விளக்கம்

செய்யுளில் ஆகாயம், காற்று, அனல், நீர், பார் என்பன சூக்கும பூதங்களாகிய தன்மாத்திரைகளைக் குறிக்கும்.

வாக்கு, பாதம், பாணி, பாயு, உபத்தம் ஆகிய இந்திரியங்கள் புறத்தே காணப்படும் வாய் கால் கை எருவாய் கருவாய் ஆகிய உறுப்புகளில் நிற்கும் சத்தம் பரிசம் உருவம் இரதம் கந்தம் ஆகிய தன்மாத்திரைகளை இடமாகக் கொண்டு கந்தம் ஆகிய தன்மாத்திரைகளை இடமாகக் கொண்டு நின்று தம்தம் காரியத்தைச் செய்யும் என்பது கூறப்பட்டது.

கன்மேந்திரியங்கள் செயற்படும் முறையைப் பின்வருமாறு அட்டவணைப்படுத்திக் காட்டலாம்.

| இந்திரியம் | சார்பு/பற்றுக்கோடு | உறுப்பாகிய இடம் | செய்யும் தொழில் |
|---|---|---|---|
| வாக்கு | சத்த தன்மாத்திரை | வாய் | பேசுதல் |
| பாதம் | பரிச தன்மாத்திரை | கால் | போக்கு வரவு செய்தல் |

| | | | |
|---|---|---|---|
| பாணி | உருவ தன்மாத்திரை | கை | ஏற்றல் இடுதல் |
| பாயு | இரத தன்மாத்திரை | எருவாய் | மலம் முதலியன வெளிப்படுத்தல் |
| உபத்தம் | கந்த தன்மாத்திரை | கருவாய் | சுக்கில சோணிதங்களை வெளிப்படுத்தல் |

## இனி, அந்தக்கரணங்கள்

ஞானேந்திரியங்களைப் பற்றிக் கூறிய இடத்தில் அவற்றால் முதலில் பொருள்களைப் பொதுவாக அறிவதாகிய நிருவிகற்பக் காட்சியே உண்டாகும். எனவும், அதன் பின்னர் அப்பொருள்களின் பெயர், குணம், தொழில், முதலியவற்றைச் சிறப்பாக அறிவதாகிய சவிகற்பக் காட்சி அந்தக் கரணங்களினால் உண்டாவதாகும் எனவும் குறிப்பிட்டோம். அவ்வந்தக்கரணங்கள் தொழிற்படும் முறையினை இச் செய்யுளில் எடுத்துரைக்கின்றார் ஆசிரியர்.

**16. அந்தக்கரணம் அடைவே உரைக்கக் கேள்**

**அந்தமனம் புத்தியுடன் ஆங்காரம் சிந்தை இவை**

**பற்றியது நிச்சயித்துப் பல்கால் எழுந்திருந்து அங்கு**

**உற்றது சிந்திக்கும் உணர்**

### பதவுரை

| | |
|---|---|
| **அந்தக் கரணம்** | அகக் கருவிகளை |
| **அடைவே** | வரிசைப்பட |
| **உரைக்க** | யாம் கூற |
| **கேள்** | கேட்பாயாக |
| **அந்த மனம்** | மனமும் |
| **புத்தியுடன்** | புத்தியோடு |

**ஆங்காரம்** அகங்காரமும்

**சிந்தை** சித்தமும் ஆகியவை

**இவை** இக்கருவிகளாம்

**பற்றி** பொறிவழியாக வந்ததை மனம் பற்ற

**அது நிச்சயித்து** மனம் பற்றியதனைப் புத்தி இஃது இன்னது என்று நிச்சயிக்க

**பல்கால் எழுந்திருந்து** அகங்காரம் இச்செயல்களுக்கு அடி நிலையாக அமைந்து நான் இதனைச் செய்வேன் எனப் பலகாலும் முந்தி எழ

**அங்கு உற்றது சிந்திக்கும்** அங்ஙனம் அறியப்பட்டதைச் சித்தம் மீள மீளச் சிந்திக்கும்

**உணர்** அந்தக் கரணங்களின் செயல்களை இவ்வாறு உணர்ந்து கொள்.

## பொழிப்புரை

அகக்கருவிகள் நான்கினையும் முறையே கூறுகிறோம். கேள், அவைமனம், புத்தி, அகங்காரம், சித்தம் என அழைக்கப்பெறும்.

புறத்தே உள்ள ஒரு புலனை அதற்குரிய பொறியானது கவர்ந்து தர, மனம் அதனைப் பற்றும், மனம் பற்றியதனை புத்தி இஃது இன்னது என்று நிச்சயிக்கும் அகங்காரம் இச்செயல்களுக்கு அடி நிலையாக அமைந்து முன்னும் பின்னும் யான் செய்வேன் என முந்தியெழும் சித்தம் உற்ற அப்பொருளைப் பற்றி மீள மீளச் சிந்திக்கும்.

## விளக்கம்

ஆன்மா இந்நான்கு கருவிகளையும் பற்றி நின்று உலகப் பொருள்களைச் சிறப்பாக உணர்ந்து அவற்றில் அழுந்துகிறது.

## மனம்

நிருவிகற்பக் காட்சியின் பின்னர் ஆன்மா மனத்தைப் பற்றி நின்று இஃது அதுவாகுமோ, இதுவாகுமோ என்று பல வகையில் ஐயுறும். இங்ஙனம் ஐயுறுவதற்குக் கருவியாவது மனமாகும்.

## புத்தி

பின் ஆன்மா புத்தியைப் பற்றி நின்று அப்பொருளின் பெயர், இனம், குணம், தொழில் முதலியவற்றை உணருமாற்றால் இஃது இன்னதே என்று துணியும். இவ்வாறு துணிவதற்குக் கருவியாவது புத்தியாகும்.

## அகங்காரம்

இனி எச்செயலிலும் ஆன்மா முன்னர் முனைத்து எழுவதற்குக் கருவியாவது அகங்காரமாகும். அகங்காரம் என்பதற்கு யான் என்று எழுவது என்பது பொருள். இஃது ஆங்காரம் என்றும் வழங்கப் பெறும். எனவே மனம் நிருவிகற்பக் காட்சியைப் பற்றும் பொழுதும். புத்தி அதனை இன்னது என்று நிச்சயிக்கும் பொழுதும் ஆன்மா இடையிடையே அகங்காரத்தைப் பற்றி எழுதல் உண்டாகும் இது பற்றியே பல்கால் எழுந்திருந்து என்றார் ஆசிரியர்.

புத்தி நிச்சயித்த பின்பும் அகங்காரத்தின் செயற்பாடு வேண்டி உள்ளது. எவ்வாறெனில், நிச்சயித்தலின் பயன் அப்பொருளில் ஆன்மா அழுந்தி நுகர்வதுதான். அதற்கும் ஆன்மா யான் இதனை நுகர்வேன் என்று அகங்காரத்தைப் பற்றி முன்னர் எழ வேண்டும். இவ்வாறு நிச்சயித்த பின்பும் அகங்காரம் எழுதலின் நிச்சயித்துப் பல்கால் எழுந்திருந்து என நிச்சயித்தலின் பின்னர் அகங்காரத்தின் செயற்பாட்டை வைத்தார் ஆசிரியர்.

## சித்தம்

இனி அழுந்தி அறிதலே அனுபவம் அல்லது நுகர்ச்சி எனப்படுகிறது. ஆன்மா தான் நிச்சயித்த பொருளின் தன்மைகளை எல்லாம் மீள மீளப் பலவாறு சிந்திக்கும் போதே அப்பொருளில் அழுந்தும் நிலை உண்டாகும். அவ்வாறு உற்று உற்றுச் சிந்திப்பதற்குக் கருவியாய் இருப்பது சித்தம் ஆம் இது பற்றியே உற்றது சிந்திக்கும் உணர் என்றார் ஆசிரியர். அனுபவமாகிய

முடி நிலைக்குச் சித்தமே உதவியாய் இருத்தலின் சித்தத்தின் செயலை இறுதியில் வைத்து முடித்தார்.

## கரணங்கள் நான்கும் சிந்தையே ஆக

சித்தத்தின் செயலை சுந்தரமூர்த்தி நாயனாரின் வாழ்க்கை நிகழ்ச்சி ஒன்றில் வைத்து விளக்கியுள்ளார் சேக்கிழார். சுந்தரமூர்த்திகள் தில்லை சென்று பொன்னம்பலத்தில் ஆனந்தக் கூத்தாடும் பெருமானை நேர் நின்று கண்டார். அத்திருக்கோலத்தில் ஈடுபட்டு மெய்ம்மறந்து நின்றார். அவரது மனம் வேறு எப்பொருளையும் பற்றவில்லை. புத்தி வேறு பொருளிடத்தில் செல்லவில்லை. அகங்காரம் வேறு பொருளை அறிய எழவில்லை. சித்தம் மட்டுமே செயற்பட்ட நிலை அது. அளப்பரும் கரணங்கள் நான்கும் சிந்தையே ஆக, அவர் இறைநினைவில் மீளமீள ஈடுபட்டு அழுந்தி நின்ற அனுபவ நிலையைச் சேக்கிழார் நுட்பமாக எடுத்துக்காட்டியுள்ளார்.

## உற்றதை மீளமீளச் சிந்தித்தல்

இனி புதிதாக வரும் பொருள்களை மட்டுமே சித்தம் சிந்திக்கும் என்பதில்லை. முன்னரே புத்தி உணர்ந்து வைத்துள்ள பொருள்களையும் சித்தம் மீளப்பற்றி நின்று சிந்திக்கும்; நாம் முன்பு நிகழ்ந்தவற்றையெல்லாம் இப்பொழுது நினைத்து வருந்துகிறோம். அல்லது மகிழ்கிறோம். முன்பு நடந்த சில இனிய நிகழ்ச்சிகளை இப்பொழுது நிகழ்வது போல எண்ணிக் களிக்கிறோம். இப்படியெல்லாம் சிந்திப்பதற்குச் சித்தமே கருவியாக உள்ளது.

முன்னரே உணர்ந்தவற்றை சித்தமானது மீளச் சிந்திக்கும் என்பதற்கு ஒரு சான்று தருவோம். பழங்காலத்தில் ஒரு புலவர் இருந்தார். முதுமையே அவரைக்கண்டு வெறுக்கும் அளவுக்கு நரையும் திரையுமாய் மூப்புற்று விளங்கினார். நடக்கும் வலிமையைக் கால்கள் இழந்து விட்டன கோல் ஊன்றியே நடக்க வேண்டும். உடலில் நடுக்கம் ஏற்பட்டிருந்தது. தொடர்ந்து அவரால் பேச முடியாது. இடையிடையே இருமல் வந்து தொல்லை கொடுத்தது.

அந்நிலையில் அவர் கடந்து போன வாழ்க்கையைத் திரும்ப நினைத்துப் பார்த்தார். இளமையில் நான் எப்படி இருந்தேன்! கவலை என்பதை அறியாத அப்பருவத்தில், ஒளிவு மறைவு என்பதை அறியாத

இளம்பிள்ளைகளுடன் நான் எப்படியெல்லாம் ஆடித் திரிந்தேன்! ஒரு சமயம் நான் துணிச்சலான ஒரு செயலைச் செய்தேன். என் இளைய நண்பர்களுடன் ஒரு நீர் நிலைக்குச் சென்றேன். அது ஆழமான நீரை உடைய கேணி. அதன் கரையிலே ஒரு மரம். அதன் ஒரு கிளை வளைந்து தாழ்ந்து கேணியின் நீர்ப்பரப்பின் மேலாகச் சென்றது. அதைப் பார்த்ததும் நண்பர்களுக்கு என்னுடைய திறமையைக் காட்ட இது ஒரு வாய்ப்பு என்று கருதினேன். நான் அந்த மரத்தின் மீது ஏறி நீர்ப்பரப்புக்கு மேலாக இருந்த கொம்பினை அடைந்தேன். அங்கிருந்து துடும் என அந்த ஆழமான மடுவில் குதித்தேன். கீழே மூழ்கிச் சென்றேன். தரையைத் தொட்டேன். அது மட்டுமா! தரையில் உள்ள மணலில் ஒரு கைப்பிடியை எடுத்துக்கொண்டு மேலே நீர்ப்பரப்பிற்கு வந்தேன். கரையில் நின்றவரெல்லாம் வியந்து கைதட்டும் படியாக அம்மணலை அவர்களுக்குக் காட்டினேன். அவர்களிடையே அப்பொழுது ஒரு வீரனாகக் காட்சியளித்தேன் அந்த இளமை எங்கே போயிற்று? இப்பொழுது பொல்லாத முதுமை வந்து வாட்டுகிறது. தண்டினை ஊன்றித் தளர்ந்து இருமலிடையே சில சொற்களே பேசும் நிலைக்கு ஆளானேன். அந்தப் பழைய காலம் மீண்டும் வருமா? இப்படிக் கழிந்து போனவற்றை மீள எண்ணிஎண்ணி இரங்குகிறார் அப்புலவர்! அவர் மட்டுமா? நாமும் கூட அதைத்தான் செய்கிறோம். உற்றது சிந்திக்கும் உணர் என்ற ஆசிரியரின் வாக்கு எவ்வளவு உண்மையாக உள்ளது.

## இனி, அசுத்த மாயையிலிருந்து தோன்றும் வித்தியா தத்துவங்கள் 7

பூதங்கள் தொடங்கி அந்தக்கரணங்கள் இறுதியாக உள்ள ஆன்மதத்துவங்கள் இருபத்து நான்கினையும் ஆசிரியர் விளக்கிய முறையில் இதுகாறும் அறிந்தோம்.

இக்கருவிகள் மட்டுமே ஆன்மாவிற்குப் போதியன அல்ல. இவற்றுக்கு மேலும் வேறு கருவிகள் தேவைப்படுகின்றன. இஃது ஏன்? என்று வினவலாம். அவ்வினாவிற்கு விடை கூறுவோம்.

ஒன்றினை அறிதல், அதனை விரும்புதல், அதற்காக முயலுதல் என்னும் முத்திறனும் உயிருக்கு இயல்பாக உள்ளது. உயிருக்கு அமைந்த இம்மூன்றனுள் அறியும் திறன் ஞானசத்தி எனப்படும் விழையும் திறன் இச்சா சத்தி எனப்படும். செயல் திறன் கிரியா சத்தி எனப்படும். இந்த

ஞானம், இச்சை, கிரியை என்னும் மூன்றும் செயற்படும் போதே உயிருக்கு உலக போகமாகிய நுகர்ச்சிப் பொருள்களிடத்தில் நாட்டம் உண்டாகும். அவற்றை அனுபவிக்கப்புகும் முயற்சி உண்டாகும்.

ஆயின், இவை செயற்பட முடியாதபடி ஆணவ மலமாகிய தளை உயிரைப் பிணித்திருக்கின்றது. அம்மலப்பிணிப்பிலிருந்து விடுபட்டால் அன்றி உயிரின் ஞானம், இச்சை, கிரியைகள் செயற்பட இயலாது. அவை செயற்படாத போது உலக போகத்தில் நாட்டமும் நோக்கமும் நோக்கமும் உண்டாகாவிடில் உலக போகமாகிய நுகர்ச்சிப் பொருள்கள் இருந்து என்ன பயன்? இந்திரியங்கள், அந்தக்கரணங்கள் முதலிய கருவிகள் எல்லாம் இருந்து என்ன பயன்? சுருங்கக் கூறினால் ஆன்ம தத்துவங்களால் என்ன பயன்?

ஆணவ மலத்திலிருந்து நீங்கி உயிரின் அறிவு, விழைவு, செயல்கள் நன்கு செயற்படும் நிலை வரும்பொழுதுதான் உயிரானது மேற்கூறிய ஆன்மதத்துவங்களாகிய அகக் கருவிகள் புறக் கருவிகளைக் கொண்டு உலகப் பொருள்களை அறிந்து அனுபவிக்க முடியும்.

ஆகவே உயிரினது அறிவு இச்சை செயல்களை ஆணவ மலப்பிணிப்பிலிருந்து விடுவித்து உலக நுகர்ச்சியில் ஈடுபடுத்துவதாகிய உதவியைச் செய்வதற்குச் சில கருவிகள் தேவைப்படுகின்றன. மேலும் உயிர் பெறும் இன்ப துன்ப நுகர்ச்சி காலத்திற்கு உட்பட்டது என்பதை அறிவோம். உரிய கால அளவிற்கு மேல் நாம் நுகரும் இன்பத்தை நீட்டித்துக் கொள்ளவும் முடியாது. உரிய கால அளவு முடிவதற்குள்ளே நாம் வெறுக்கும் துன்பத்தை விலக்கிக் கொள்ளவும் முடியாது என்பது அனுபவ உண்மை. ஆகவே காலம் என்ற கருவியும் வேண்டும் என்பது புலனாகும். இது காறும் கூறியவற்றால் ஆன்ம தத்துவங்கள் மட்டும் போதா அவற்றிற்கு அப்பாற்பட்டனவாய் வேறு கருவிகளும் தேவைப்படுகின்றன என்பது தெளிவாகும்.

முன்பு கூறிய இருபத்துநான்கு தத்துவங்களுக்கு மேல் உயிருக்கு உதவும் கருவிகளாக ஏழு தத்துவங்கள் கொள்ளப்படுகின்றன. அவை பிரகிருதியிலிருந்து தோன்றுவனவல்ல. பிரகிருதிக்கு மேலேயுள்ள அசுத்த மாயையிலிருந்து தோன்றுவனவாகும். அவை மாயை, காலம், நியதி, கலை,

வித்தை, அராகம் புருடன் என்பன. இவை அசுத்த மாயை தத்துவங்கள் எனப்படும். இவை ஒவ்வொன்று பற்றியும் இனிக் காண்போம்.

## மாயை

விரிவுடைய அசுத்த மாயையின் ஒரு சிறு பகுதியே மாயை என்னும் முதல் தத்துவமாகும். இந்த மாயை தத்துவத்திலிருந்தே காலம் முதலிய பிற தத்துவங்கள் தோன்றும். எனவே பிற அசுத்த தத்துவங்கள் தோன்றுவதற்கு ஏற்புடையதாகப் பதப்படுத்தப்பட்ட ஒரு பகுதியே மாயை எனக் கூறலாம். இதனை ஓர் உதாரணம் கொண்டு விளக்கலாம். இம்மண்ணுலகம் மிகப் பெரியது. இதன் ஒரு சிறு பகுதியே மண் எடுத்துக் குடம் முதலியன செய்வதற்குப் பயன்படுத்தப்படுகிறது. அதுபோல விரிவுடைய அசுத்த மாயையின் ஒரு சிறு பகுதியே பிற தத்துவங்கள் தோன்றுவதற்குரிய தகுதி உடையதாய், மாயை அல்லது மாயா தத்துவம் எனப்படுகிறது.

## காலம்

இம்மாயா தத்துவத்திலிருந்து முதலில் காலம் என்னும் தத்துவம் தோன்றும். இக் காலத்தத்துவத்தைச் சிறிது விளக்குவோம். காலம் என்பது இன்றி எச்செயலும் நடவாது என்பதை அனுபவத்தில் நாம் அறியலாம். எதற்கும் காலம் நேரம் வரவேண்டும் என்று மக்கள் பேசிக்கொள்வது அன்றாட நிகழ்ச்சி.

ஒரு பெற்றோருக்குத் திருமண வயதில் பெண் இருக்கிறாள். அக்குடும்பத்தில் செல்வத்துக்குக் குறைவில்லை. அப்பெண்ணின் அழகுக்குக் குறைவில்லை. அப்பெற்றோரின் முயற்சிக்கும் குறைவில்லை. ஆயினும் அப்பெண்ணுக்குத் திருமணம் கூடாமலே நாட்கள் செல்லுகின்றன. எல்லாருக்கும் ஒரே கவலை. ஒருநாள் எதிர்பாராத நிலையில் எதிர்பாராத இடத்திலிருந்து பெண் பார்க்க வருகிறார்கள். அடுத்த சில நாட்களிலேயே திருமணம் இனிதாக நடந்து முடிகிறது. இப்படி நடப்பதை வைத்துத்தான் காலம் வந்தால் எல்லாம் நல்ல படியாக நடக்கும் என்று சொல்லுகிறார்கள். இதனால் எல்லாம் இருப்பினும் செயல் நிகழ்தற்குக் காலம் வேண்டும் என்பது தெளிவாகிறது.

மூதுரை என்னும் நீதி நூல் இக்கருத்தைப் பின்வருமாறு சொல்லுகிறது. பழ மரங்கள் எல்லாக்காலத்திலும் பூத்துக் காய்த்துக் கனிகளைத் தருவதில்லை. அவ்வக்காலம் வந்தால் மட்டுமே காய்த்துப் பழுத்துப் பயன் தருவதைக் காண்கிறோம். அதுபோல ஒருவர் எவ்வளவு தான் முயன்றாலும் அவர் ஈடுபடுகிற செயல் அவர் நினைத்த வண்ணமே நிறைவேறிவிடுவதில்லை. அதற்குரிய காலம் வரும்போது தான் அக்காரியம் நிறைவேறும்.

**அடுத்து முயன்றாலும் ஆகும் நாள் அன்றி**

**எடுத்த கருமங்கள் ஆகா தொடுத்த**

**உருவத்தால் நீண்ட உயர் மரங்கள் எல்லாம்**

**பருவத்தால் அன்றிப் பழா**

இதுவரை கூறியவற்றால் கால தத்துவத்தின் இன்றியமையாமை ஒருவாறு விளங்கும்.

காலம் இறந்தகாலம் என்றும், நிகழ்காலம் என்றும், எதிர்காலம் என்றும் மூன்று பகுதிப்பட்டு நிற்கும். இறந்த காலம் செயலை முடிக்கும். நிகழ்காலம் செயலை நிகழ்விக்கும் எதிர்காலம் செயலைத் தோற்றுவிக்கும்.

காலம் ஒவ்வொரு பொருளிலும் வேறுவேறாக உள்ளது. மேலும் அளவால் பெரிதும் சிறிதுமாய் உள்ளது. ஒருவர் உடம்பில் காலம் நெடியதாய் இருக்குமாயின் அவர் நீண்ட ஆயுளை உடையவராகிறார் அவ்வாறின்றி அவர் உடம்பில் உள்ள காலம் அளவால் சிறியதாய் இருக்குமாயின் அதற்கேற்ப அவர் குறுகிய ஆயுளை உடையவராகிறார். இவ்வாறு பொருள் தோறும் காலம் வெவ்வேறு அளவினதாய் அமைந்து செயலை நிகழ்விக்கின்றது.

காலம் சடப்பொருளேயாதலின் அது தானே செயற்படாது என்பதையும், இறைவனது சத்தி செலுத்தவே அது தன் காரியத்தைச் செய்யும் என்பதையும் நினைவிற் கொள்ளுதல் வேண்டும்.

## நியதி

காலத்தின் பின்னர் மாயா தத்துவத்தினின்றும் நியதி என்னும் தத்துவம் தோன்றும்.

நமது வாழ்வில் நாம் நினைத்தபடியெல்லாம் நடந்து விடுவதில்லை. ஒருவர் படிக்கின்ற காலத்தில் மருத்துவத்துறையில் எப்படியாவது சேர வேண்டும் என்று முயல்கிறார். ஆனால் அது முடியாமலே போய்விடுகிறது மற்றொருவர் ஒரு பெண்ணை உயிருக்கு உயிராக நேசித்தும் வேறொரு பெண்ணைக் கைப்பிடிக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டு விடுகிறது. இன்னொருவர் பதவி உயர்வு பெறுதற்குரிய தகுதி எல்லாம் பெற்றிருந்தும் அவருக்குக் கிட்டாமல் அவர்க்குக் கீழ்நிலையில் உள்ள மற்றொருவருக்கு அது கிடைத்து விடுகிறது.

இவற்றுக்கெல்லாம் காரணமாய் இதனையே நுகர்க ஏனையவற்றை நுகரற்க என வரையறுத்து நிறுத்துவது நியதி தத்துவமாகும். நியதி தத்துவம் அவரவர் செய்த வினையின் பயன்களை அவரவரே அனபவிக்குமாறு நெறிப்படுத்தி நிற்பதாகும்.

இறைவனது சத்தியே இவ்வாறு நியமித்து நடத்தும் என்று கொள்ளலாம் அல்லவா? நியதி என்ற ஒரு கருவி எதற்கு? என வினவலாம். கட்டு நிலையில் இறைவனது சத்தி தானே நேராக எதனையும் செய்யாது ஏதேனும் ஒரு கருவியைக் கொண்டு அதன் வழியாகவே செய்யும். ஆதலால் இறைவனது சத்தி வினைகளை வரையறுக்கும் செயலுக்கு இந்நியதி தத்துவம் கருவியாய் நிற்கிறது எனலாம். நியதி தானே சுதந்திரமாகச் செயற்படாது. என்பதையும், இறைவனது சத்தியின் வழி நின்றே செயற்படும் என்பதையும் கருத்திற்கொள்ளுதல் வேண்டும்.

நியதி வினைப்பயன்களை அவ்வவ்வுயிர்களே நுகரும் படி செய்யும் எனவும், காலம் அந்நுகர்ச்சியின் அளவை வரையறுத்து நிற்கும் எனவும் அறிந்தோம். இனி உயிர்கள் நுகர்ச்சியில் ஈடுபட வேண்டுமாயின் அவற்றின் அறிவு இச்சை செயல்கள் ஆணவ மல மறைப்பிலிருந்து விடுபட்டுத் தொழிற்பட வேண்டும் எனச் சற்று முன்னே கூறினோம். அங்ஙனம் அவை தொழிற்படுவதற்கு உதவும் கருவிகள் கலை, வித்தை,

அராகம் என்பனவாகும். அக்கருவிகள் தோன்றும் முறையை இனிப் பார்ப்போம்.

## கலை

மாயாதத்துவத்தினின்றும் நியதி தத்துவம் தோன்றிய பின்னர், கலை என்ற தத்துவம் தோன்றும். இக்கருவி ஆணவ மலமறைப்பைச் சிறிது நீக்கி ஆன்மாவின் கிரியா சத்தியை முதலில் எழுப்பித் தொழிற்படச்செய்யும்.

இங்கு ஓர் ஐயம் எழலாம். அறிவுப் பொருளாகிய ஆன்மா ஆணவ மலத்தால் முற்றிலும் மறைக்கப்பட்டு, அறியுந்திறனை இழந்து அறிவற்ற சடப்பொருள் போலக் கிடக்கும் நிலையில் முதலில் அதன் அறிவாகிய ஞான சத்தியையல்லவா எழுப்புதல் வேண்டும். அதனை விடுத்துக் கிரியா சத்தியை முதலில் எழுப்புவது எதற்கு? என்பதே அவ்ஐயம். ஞானசத்தியை முதலில் எழுப்புவதாக வைத்துக் கொள்வோம். ஞானசக்தி ஆணவ மலப் பிணிப்பிலிருந்து சற்று விடுபட்டு எழுந்தாலும் அது தானே செயற்படாது. ஆன்மா அதனைத் தொழிற்படுத்த வேண்டும் அப்பொழுது தான் ஞானசத்தி தொழிற்படும்.

ஆன்மா அதனைத் தொழிற்படுத்த வேண்டுமானால் அதற்குக் கிரியா சத்தி வேண்டும். கிரியா சத்தியின்றி எச்செயலும் நிகழாது. கிரியா சத்தி விளங்கப் பெற்ற போதே ஆன்மா எச்செயலையும் செய்வோன் என்ற நிலையை அடைகிறது. ஆதலால் ஞான சத்தி தொழிற்படுவதற்கும் கிரியா சத்தி வேண்டப்படுகிறது. அது பற்றியே கிரியா சத்தியை முதலில் எழுப்பும் கலை என்ற கருவி தோன்றுவதாயிற்று.

கலித்தல் என்ற சொல்லிலிருந்து கலை என்பது வந்தது. கலித்தல் என்பதற்கு நீக்குதல், செலுத்துதல் என்ற பொருள்கள் உண்டு. எனவே ஆணவ மலத்தை நீக்கி ஆன்மாவின் கிரியா சத்தியை எழுப்பிச் செலுத்துகிற கருவிக்குக் கலை என்று பெயரிட்டது பொருத்தமாகும்.

## வித்தையும் அராகமும்

கலை தோன்றிய பின்னர் அக் கலையிலிருந்தே வித்தை என்னும் தத்துவம் தோன்றும். வித்தை என்ற அக்கருவி ஆணவ மல சத்தியைச் சிறிது அடக்கி ஆன்மாவின் ஞான சத்தியை எழுப்பும். வித்தை தோன்றி

பின்னர் அதிலிருந்தே அராகம் என்னும் தத்துவம் தோன்றும். அராகம் என்ற அக்கருவி ஆன்மாவின் இச்சா சத்தியை எழுப்பும்.

முன்னே சொன்ன காலம், நியதி, கலை என்னும் மூன்றும் மாயையிலிருந்து நேரே தோன்ற, வித்தையும் அராகமும் ஆகிய இரண்டும் அங்ஙனம் மாயையிலிருந்து நேரே தோன்றாமல் கலையிலிருந்து வித்தையும் அவ்வித்தையிலிருந்து அராகமும் தோன்றுவது நோக்குதற்குரியது. இதற்கான காரணத்தைப் பின்வருமாறு கூறலாம்.

ஆன்மாவினது அறிவு ஒன்றே அறிதல் விழைதல் செய்தல் என்னும் செயல் பற்றி ஞான சத்தி, இச்சா சத்தி, கிரியா சத்தி என மூன்றாக வழங்கப்படுகிறது. எனவே இம் மூன்றும் தம்முள் வேறல்ல என்பதும். அறிவாகிய ஒன்றன் நிலை வேறபாடே என்பதும் விளங்கும். கிரியா சத்தியும் ஞான சத்தியும் தம்முள் மாறுபட்டனவல்ல ஆகையால் கிரியையை எழுப்புவதாகிய கலையிலிருந்தே ஞானத்தை எழுப்புவதாகிய வித்தை தோன்றுவதாயிற்று. இச்சா ஞானத்தின் நிலை வேறுபாடேயாகையால் ஞானத்தை எழுப்புவதாகிய வித்தையினின்றும் இச்சையை எழுப்புவதாகிய அராகம் தோன்றுவதாயிற்று.

கிரியையும் ஞானமும் இச்சையும் வேறுவேறல்லவாயின் கலையாகிய ஒரு கருவியே இம்மூன்றையும் எழுப்புதல் இயலாதோ? கலை, வித்தை, அராகம் என வேறு வேறு கருவிகள் எதற்கு? எனக் கேட்கலாம். இங்கே ஓர் உண்மையைத் தெரிந்து கொள்ள வேண்டும். ஒரு கருவி ஒரு நேரத்தில் ஒரு தொழிலைச் செய்யுமேயன்றிப் பல தொழில்களை ஒருங்கு செய்யமாட்டாது. ஆதலால் கிரியை, ஞானம், இச்சை ஆகிய மூன்றும் ஒருங்கே வேண்டப்படும்போது கலை என்ற கருவி கிரியையை எழுப்புதலாகிய ஒரு தொழிலை மட்டும் செய்யும் என்பதும், ஞானத்தையும் இச்சையையும் எழுப்புதலாகிய தொழிலைச் செய்வதற்கு வித்தையும் அராகமும் ஆகிய வேறு கருவிகள் வேண்டியுள்ளன என்பதும் தெளிவாகும்.

வித்தை என்னும் சொல் அறிவு எனப் பொருள்படும். ராகம் என்னும் வடசொல்லுக்கு விருப்பம் என்பது பொருள். அச்சொல்லே தமிழில் அராகம் என வந்துள்ளது.

இதுகாறும் வந்தவற்றுள் அராகம் ஆன்மாவின் இச்சா சத்தியையும் வித்தை ஞான சத்தியையும், கலை கிரியா சத்தியையும் விளக்கி ஆன்மாவை நுகர்ச்சியில் ஈடுபடச் செய்யும். நியதி இதனையே நுகர்க என வரையறுத்து நிறுத்தும். காலம் இந்த நுகர்ச்சியை இத்தனைக் காலம் நுகர்க என எல்லைப்படுத்தும். இவ்வைந்து கருவிகளும் ஆன்மாவுக்கு இன்றியமையாதனவாய். ஆன்மாவோடு எப்பொழுதும் நீங்காமல் சட்டை போல ஒன்றாய் ஒட்டியேயிருக்கும். அதனால் அவை பஞ்சகஞ்சுகம் என்னும் பெயர் பெறும். கஞ்சுகம்சட்டை.

## புருடன்

இந்த ஐந்து சட்டைகளையும் அணிந்து நிற்கும் நிலையில் ஆன்மாபுருடன் எனப் பெயர் பெறும். போகத்தை நுகரும் தகுதியுடைமை பற்றி ஆன்மா புருடன் எனப்படுகிறது. இந்நிலையே புருடதத்துவம் எனச் சொல்லப்படுகின்றது. தத்துவம் என்று கூறப்படினும் இஃது ஏனையவை போல ஒரு தனித் தத்துவம் அன்று என்பது அறிதற்குரியது.

பஞ்சகஞ்சுகத்துடன் கூடிப் புருடன் என நின்ற ஆன்மா பொதுவகையில் போகத்தை நுகரும் தகுதியைப் பெறும் பின்னர் பிரகிருதியோடு தொடர்பு கொள்ளும் போதே அத்தகுதியைச் சிறப்பு வகையாற்பெறும். பிரகிருதியே உலக அனுபவத்தைத் தருவது ஆதலால் அதனோடு பொருந்தும் போதே ஆன்மா புருடனாம் நிலையைச் சிறப்பாகப் பெறுகிறது. இதனால் காலம் முதலிய ஐந்தினாலே வரும் தகுதி பொதுத் தகுதி என்பதும், பிரகிருதியினாலே வரும் தகுதி சிறப்புத் தகுதி என்பதும் விளங்கும்.

பிரகிருதியைப் பற்றி முன்னே குறிப்பிட்டபோது அஃது அசுத்த மாயையிலிருந்து தோன்றும் காரியம் எனச் சொன்னோம். அது பொதுவாகச் சொன்ன கூற்றேயாகும். குறிப்பிட்டுச் சொல்வதானால், அது அசுத்த மாயையின் காரியங்களில் ஒன்றாகிய கலையிலிருந்து தோன்றுவதாகும். தோசை என்ற உணவுப் பண்டத்திற்கு மூலப் பொருள் எது என்று கேட்டால் மாவு என்றும் சொல்லலாம்; அரிசி என்றும் சொல்லலாம். மாவு நேரான மூலப்பொருள். அரிசி முடிவான மூலப்பொருள். அதுபோல, பிரகிருதிக்குக் கலை நேரான முதற்காரணம்; அசுத்த மாயை முடிந்த முதற்காரணம் என அறிதல் வேண்டும்.

கலை என்னும் தத்துவத்தினின்றும் வித்தை என்னும் தத்துவமும் அவ்வித்தையினின்றும் அராகம் என்னும் தத்துவமும் தோன்றும் எனக் கூறினோம். அவற்றின் பின்னர்க் கலையினின்றும் நேரே பிரகிருதி தோன்றும். ஆன்மா பிரகிருதியைப் பொருந்திய நிலையில் நுகர்வோன் என்னும் சிறப்புத் தகுதியைப் பெற்றுப் புருடனாய் நிற்கும் எனக் கண்டோம். காலம் முதலிய ஐந்தோடு புருடன் என்பதைச் சேர்க்கத் தத்துவங்கள் ஆறாகும். அவற்றோடு முதலிற் சொன்ன மாயா தத்துவம் என்பதைச் சேர்க்கத் தத்துவங்கள் ஏழாகும். இவ்வாறு காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை (மாயா தத்துவம்) ஆகிய இவ் ஏழும் அசுத்த மாயா தத்துவங்கள் ஆயின.

**அசுத்த மாயை**




இவற்றுள் மாயையும் புருடனும் நீங்கலாக மற்றையவை பரிணாம முறையில் தோன்றுவனவாகும். மாயையின் ஒரு கூறு காலமாகப் பரிணமிக்கும். மற்றொரு கூறு நியதியாகப் பரிணமிக்கும். மற்றுமொரு கூறு கலையாகப் பரிணமிக்கும். கலையின் ஒரு கூறு வித்தையாகவும். வித்தையின் ஒரு கூறு அராகமாகவும் பரிணமிக்கும். கலையின் மற்றொரு கூறே பிரகிருதியாகப் பரிணாமம் அடையும் என்பது அறிதற்குரியது.

**வித்தியா தத்துவம் பெயர்க் காரணம்**

அசுத்த மாயா தத்துவங்கள் ஏழும் வித்தியா தத்துவம் என்னும் பெயரைப் பெறும். பெயருக்கான காரணத்தை நோக்குவோம். இத்தத்துவங்கள் இறைவனது ஏவல் வழி நிற்கும் அனந்த தேவர் என்பவரால் தோற்றவும் ஒடுக்கவும்படுகின்றன. அவர் வித்தியேசுரருள் சிறந்தவர். எனவே அவர் பெயரால் இவை வித்தியா தத்துவங்கள் எனப்படுகின்றன. வித்தை இங்கு வித்தியேசுரரைக் குறிக்கும். இது மரபாகச் சொல்லி வரும் விளக்கம்.

இனி வித்தை என்பது அறிவாகும். எனவே ஆன்மாவின் அறிவு இச்சை செயல்களைத் தோற்றுவிக்கும் கருவிகளாதல் பற்றி வித்தியா தத்துவம் எனப்பட்டன என்று கூறுதலும் அமையும்.

இவ்வித்தியா தத்துவங்களுக்கு போசயித்திரு காண்டம் என்ற மற்றொரு பெயரும் உண்டு. இவை ஆன்மாவிடத்தில் நுகர்வோனாம் தன்மையை உண்டாக்குதலால் இப்பெயர் பெற்றன. போசயித்திரு நுகர்வோன்; காண்டம் தொகுதி.

இனி ஆசிரியர் வழியில் நின்று வித்தியா தத்துவங்களைப் பற்றிய செய்யுட்களின் பொருளைக் காண்போம்.

**வித்தியா தத்துவங்களைக் கூறத் தொடங்குதல்**

**17. ஓதியிடும் நாலாறும் உற்றான்ம தத்துவம் என்று**

**ஆதி அருள்நூல் அறையுங்காண்; தீதறவே**

**வித்தியா தத்துவங்கள் தம்மை விளம்பக்கேள்**

**உத்தமனே நன்றா உனக்கு.**

**பதவுரை**

**ஓதியிடும்** இதுவரை சொன்ன

**நால் ஆறும்** இருபத்து நான்கு தத்துவங்களும்

**உற்ற** உயிர்க்கு நுகர்ச்சியாகப் பொருந்திய

**ஆன்ம தத்துவம் என்று** ஆன்ம தத்துவம் என்று

**ஆதி அருள் நூல்** சிவபிரான் அருளிச் செய்த ஆகம நூல்

அறையும் கூறும்

**தீது அறவே** இனி, உனது மயக்கம் நீங்கும் படியாக

**வித்தியா தத்துவங்கள் தம்மை** வித்தியா தத்துவங்களின் இயல்பை

உனக்கு உனக்கு

| | |
|---|---|
| **நன்றா** | ஐயமற |
| **விளம்ப** | யாம் சொல்ல |
| **உத்தமனே** | நன்மாணாக்கனே, |
| **கேள்** | கேட்பாயாக. |

## பொழிப்புரை

இதுவரை யாம் விளக்கிக் கூறிய பூதங்கள் ஐந்து, தன்மாத்திரைகள் ஐந்து, ஞானேந்திரியங்கள் ஐந்து, கன்மேந்திரியங்கள் ஐந்து, அந்தக்கரணங்கள் நான்கு ஆகிய இருபத்து நான்கு தத்துவங்களையும் ஆன்ம தத்துவங்கள் என்று சிவாகமங்கள் குறிப்பிடும்.

நன்மாணாக்கனே! இனி, வித்தியா தத்துவங்களை உனக்கு உரைப்போம். கேட்பாயாக.

## வித்தியா தத்துவங்களின் பெயர்

**18. காலம்நியதி கருதும் கலை வித்தை**

**ஏல அராகம்புருடனே மாயை மால் அற வேழ்**

**சொன்னோம் அடைவாகச் சொன்ன இவை தம்உண்மை**

**உன்னி உரைக்கும் நாம் உற்று**

## பதவுரை

| | |
|---|---|
| **காலம்** | காலமும் |
| **நியதி** | நியதியும் |
| **கருதும் கலை** | ஆராய்ந்து கொள்ளத்தக்க கலையும் |
| **வித்தை** | வித்தையும் |
| **ஏல அராகம்** | பொருந்திய அராகமும் |
| **புருடன்** | புருடனும் |
| **மாயை** | மாயையும் என |

**(வித்தியா தத்துவங்களை)**

| | |
|---|---|
| **மால் அற** | மயக்கம் நீங்க |
| **ஏழ்** | ஏழினையும் |
| **அடைவாக** | வரிசைப்படுத்தி |
| **சொன்னோம்** | கூறினோம் |
| **சொன்ன இவ்வாறு** | பெயர் அளவில் சொல்லிய |
| **இவை தன் உண்மை** | இத்தத்துவங்களின் இயல்பை |
| **நாம்** | யாம் |
| **உன்னி** | (உனக்கு விளங்கச் சொல்லும் முறையை) நினைந்து |
| **உற்று** | அதனைக் கடைப்பிடித்து |
| **உரைக்கும்** | கூறுவோம் |

**பொழிப்புரை**

காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை என்னும் ஏழும் வித்தியா தத்துவங்கள் ஆகும். இவற்றின் இயல்பை இனி உரைப்போம்.

**வித்தியா தத்துவங்களின் தொழில்**

**19. எல்லைபலம் புதுமை எப்போதும் நிச்சயித்தல்**

**அல்லல் தரும் கிரியை ஆன்மாவுக்கு ஒல்லை**

**அறிவு ஆசைஐம்புலனும் ஆரவரும் காலம்**

**குறியா மயக்குஎன்று கொள்.**

**பதவுரை**

**(காலம் செய்யும் தொழிலாவது)**

**எல்லை** இறந்த காலமாய் நின்று, வினைகளை நுகர்ச்சியினால் கழியச் செய்தல்.

**பலம்** நிகழ்காலமாய் நின்று, உயிரை வினைப்பயன்களோடு கூட்டி நுகரச் செய்தல்.

**புதுமை** எதிர்காலமாய் நின்று, வினைப் பயன்களை உயிர் எதிர்நோக்குமாறு செய்தல்.

**(நியதி செய்யும் தொழிலாவது)**

**எப்போதும் நிச்சயித்தல்** எப்போதும் வினைப்பயன் அதனைச் செய்த உயிரையே சாருமாறு நியமித்தல்.

**(கலை செய்யும் தொழிலாவது)**

**ஆன்மாவுக்கு** உயிருக்கு

**அல்லல் தரும்** வினைகளை ஈட்டித் துன்புறுதற்கு ஏதுவாகும்படி

**கிரியை** அதன் கிரியாசத்தியாகிய செயலாற்றலைச் சிறிதே விளங்கச் செய்தல்.

**(வித்தை செய்யும் தொழிலாவது)**

**ஒல்லை** விரைந்து

**அறிவு** அதன் ஞானசத்தியாக அறிவாற்றலைச் சிறிதே விளங்கச் செய்தல்.

**(அராகம் செய்யும் தொழிலாவது)**

**ஆசை** அதன் இச்சா சத்தியாகிய விழைவு ஆற்றலைச் சிறிதே விளங்கச் செய்தல்.

**(புருடன் என்பது)**

**ஐம்புலனும்** (உயிர் மேற்கூறிய ஐந்தோடும் கூடி நின்று) ஐம்புலன்களையும்

**ஆர வரும் காலம்** நுகர்தற்குத் தகுதி பெற்ற காலத்தில் அந்நிலையில் வழங்கும் பெயராகும்.

**(மாயை என்பது)**

**குறியா மயக்கு** உயிரின் அறிவு இச்சை செயல் ஆகிய மூன்றும் பிரிந்து தோன்றுதல் இன்றி, ஒன்றையும் குறியாத, பொதுவான மயங்குநிலையை உயிருக்குத் தருவது

**என்று கொள்** என்று இவ்வாறு உணர்ந்துகொள்.

**பொழிப்புரை**

உயிருக்கு வினைப் பயன்களை இத்துணைப் பொழுது என வரையறுப்பது காலம் அது இறந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் என மூன்றாகி நிற்கும். அவற்றுள் இறந்தகாலம் வினைகளை நுகர்ச்சியினால் கழியச்செய்து உயிரை அவ்வினையினின்றும் பிரிக்கும். இதுவே எல்லை எனப்பட்டது. நிகழ்காலம் உயிரை வினைப்பயன்களோடு கூட்டி நுகர்விக்கும் இதுவே பலம் எனப்பட்டது. எதிர்காலம் வினைப் பயன்களை உயிர் எதிர்நோக்குமாறு செய்யும். இதுவே புதுமை எனப்பட்டது.

நியதி எப்போதும் வினைப்பயன் அதனைச் செய்த உயிரையே சாருமாறு நியமிக்கும். இதுவே நிச்சயித்தல் எனப்பட்டது.

கலை, உயிரின் செயலாற்றலைச் சிறிதே விளங்கச் செய்யும்; வித்தை அறிவாற்றலைச் சிறிதே விளங்கச் செய்யும். அராகம் விழைவாற்றலைச் சிறிதே விளங்கச் செய்யும்.

உயிர் இவ்வைந்தோடும் கூடி நின்று விடயங்களை நுகரும் தகுதி பெற்ற காலத்தில் புருடன் எனப்பெயர் பெறும்.

மாயை மயக்குதலைச் செய்யும்.

**விளக்கம்**

முந்திய செய்யுளில் வித்தியா தத்துவங்களின் பெயர்களை வரிசைப்படக் கூறிய ஆசிரியர், இச்செய்யுளில் அவை செய்யும் தொழிலை அதே வரிசை முறையில் நிறுத்திக் கூறியுள்ளார்.

எனவே அவற்றைப் பின்வருமாறு அமைத்துக் கொண்டால் பொருள் எளிதில் விளங்கும்.

| **வித்தியாதத்துவம்** | | **தொழில்** |
|---|---|---|
| 1. காலம் | இறந்தகாலம் | எல்லை |
| | நிகழ்காலம் | பலம் |
| | எதிர்காலம் | புதுமை |
| 2. நியதி | எப்போதும் | நிச்சயித்தல் |
| 3. கலை | கிரியை | விளங்கச் செய்தல் |
| 4. வித்தை | அறிவு | விளங்கச் செய்தல் |
| 5. அராகம் | ஆசை | விளங்கச் செய்தல் |
| 6. புருடன் | ஐம்புலனும் | ஆரவரும் காலம் |
| 7. மாயை | மயக்குதல் | |

**இனி, சுத்த மாயையிலிருந்து தோன்றும் சுத்த தத்துவங்கள் 5**

வித்தியா தத்துவங்கள் ஏழினையும் ஆசிரியர் விளக்கிய முறையில் இதுகாறும் அறிந்தோம். அவை உயிரின் அறிவாற்றல், விழைவாற்றல், செயலாற்றல்களை மலத்தடையிலிருந்து நீங்கி எழுப்பி உயிரை உலக நுகர்ச்சியில் நோக்குடையதாகச் செய்யும் எனக் கண்டோம். ஆயின் அக்கருவிகள் தாமே சுதந்திரமாகச் செயற்படா. இறைவனது சத்தியே அவற்றைச் செலுத்தி நிற்கும்.

இறைவனது சத்தி பற்றி ஒன்றைச் சொல்ல வேண்டும். அது எதனையும் நேராகச் செய்யாது. ஒன்றை நிலைக்களமாகக் கொண்டு நின்றே செய்யும். நெருப்பு ஒரு பொருளில் தங்கி நின்று தன் தொழிலைச் செய்யுமேயன்றி அது தனித்து நிற்பதில்லை. அது விறகு, நெருப்புக்குச்சி முதலியவற்றுள்

ஒன்றை ஆதாரமாகக் கொண்டு நிற்கிறது. அதுபோல இறைவனது சத்தி நின்று தொழிற்படுவதற்கு ஓர் ஆதாரம் நிலைக்களம் வேண்டும். அந்த நிலைக்களம் எது? தூய்மையற்ற அசுத்த மாயை தூயதாகிய இறைவனது சத்திக்கு நிலைக்களம் ஆகாது. எனவே சுத்த மாயையே அதற்கு நிலைக்களம் ஆவது என்பது விளங்கும்.

இறைவனது சத்தி சுத்த மாயையிற் பொருந்தி ஐந்து தத்துவங்களைத் தோற்றுவிக்கும். அவை சிவம், சத்தி, சதாசிவம், (அல்லது சாதாக்கியம்), ஈசுரம், சுத்தவித்தை என்பன. இவ்வைந்துமே இறைவனது சத்திக்கு நிலைக்களமாய் அமைவன இத்தத்துவங்கள் சுத்த மாயையில் தோன்றும் முறையைக் காண்போம்.

## விருத்தி

பிரகிருதியிலும், அசுத்த மாயையிலும் தோன்றும் காரியங்கள் எல்லாம் பரிணாமமாய்த் தோன்றுவன என அறிந்தோம். ஆயின், சுத்த மாயையில் தோன்றும் தத்துவங்கள் அவ்வாறு பரிணமித்துத் தோன்றுவன அல்ல. அவை விருத்திப்பட்டுத் தோன்றுவனவாகும். விருத்தி என்றால் என்ன? என்பதை முதலில் விளங்கிக் கொள்வோம். சுருங்கி நிற்பது விரிவடைதல் விருத்தி எனப்படும். எடுத்துக் காட்டினால் இதனை விளக்கலாம்.

சர்க்கஸ் நடத்துவோர் அக் காட்சிக்கென்று பெரிய கூடாரங்களை அமைப்பர். மடித்து வைத்திருந்த முரட்டுத் துணிகளை விரித்துக் கால்களை நாட்டிக் கூடாரமாகச் செய்வர். முன்னே சுருங்கி நின்ற துணியே பின் விரிந்து கூடாரமாக மாறுகிறது. இம் மாற்றமே விருத்தி எனப்படும்.

சுத்த மாயையிலிருந்து இம்முறையில் விரிந்து தோன்றும் தத்துவங்கள் ஐந்து எனக் குறிப்பிட்டோம். அவை விரியும் முறை வருமாறு.

### 1. சிவதத்துவம்

முதலில் இறைவன் சுத்த மாயையில் ஒரு பகுதியைத் தனது ஞான சத்தியால் இது விரிவடையத் தக்கது எனப் பொதுவாக நோக்குவான். அவ்வாறு அவன் நோக்கிய அளவில் சுத்த மாயையின் ஒரு பகுதி

காரியப்படுவதற்கு ஏற்ற பக்குவத்தைப் பெறும். பக்குவப்பட்ட அப்பகுதி சிவதத்துவம் என்றும் நாதம் என்றும் சொல்லப்பெறும். இது சுத்த மாயையின் முதல் விருத்தி. இறைவனது ஞானசத்தி மட்டும் செயற்படும் நிலை இது.

### 2. சத்திதத்துவம்

இறைவன் பின்னர் முதல் விருத்தியாகிய சிவ தத்துவத்தின் ஒரு பகுதியைத் தனது கிரியா சத்தியால் இது விரிவடைக எனப்பொதுவாகக் கருதுவான். அவ்வாறு அவன் கருதிய அளவில் அப்பகுதி இரண்டாம் விருத்திப்பட்டு சத்தி என்றும், விந்து என்றும் பெயர் பெறும். இறைவனது கிரியா சத்தி மட்டும் செயற்படும் நிலை இது.

### 3. சதாசிவ தத்துவம்

இறைவன் பின்னர் இரண்டாம் விரிவாகிய சத்தி தத்துவத்தின் ஒரு பகுதியைத் தனது ஞான சத்தியால் சிறப்பாக நோக்கியும், கிரியா சத்தியால் சிறப்பாகக் கருதியும் நிற்பான். இது இவ்வாறு விரிவடையத்தக்கது என்பது சிறப்பாக நோக்குதல்.

இது இவ்வாறு விரிவடைக என்பது சிறப்பாகக் கருதுதல். நோக்குதலும், கருதுதலும் சிறப்பாக நிகழும் இந்நிலையில் அப்பகுதி மூன்றாம் விருத்தியாக வளர்ச்சியடைந்து சதாசிவம் அல்லது சாதாக்கியம் எனப் பெயர் பெறும். இறைவனது ஞான சத்தியும், கிரியா சத்தியும் சமமாகச் செயற்படும் நிலை இது.

### 4. ஈசுர தத்துவம்

ஞான சத்தியையும் கிரியா சத்தியையும் சமமாகச் செலுத்தி நின்ற இறைவன் பின்னர் மூன்றாம் விருத்தியாகிய சதாசிவ தத்துவத்தின் ஒரு பகுதியைச் செயற்படுத்தற்குக் கிரியா சத்தியை மிகச் செலுத்தி இஃது இவ்வாறு ஆகுக எனக் கருதுவான் அப்பொழுது அம்மூன்றாம் விருத்தி நான்காம் விருத்தியாக வளர்ச்சி அடைந்து ஈசுரம் எனப் பெயர் பெறும். கிரியா சத்தி மிகுந்தும் ஞான சத்தி குறைந்தும் செயற்படும் நிலை இது.

### 5. சுத்த வித்தியா தத்துவம்

கிரியா சத்தியை மிகச் செலுத்தி நின்ற இறைவன் பின்னர் நான்காம் விருத்தியாகிய ஈசுர தத்துவத்தின் ஒரு பகுதியைச் செயற்படுத்தற்குத் தனது ஞான சத்தியை மிகச் செலுத்தி நிற்பான். அப்பொழுது அப்பகுதி ஐந்தாம் விருத்தியாக வளர்ச்சியடைந்து சுத்த வித்தை எனப் பெயர் பெறும்.

(அசுத்த மாயையின் காரியங்களுள் வித்தை என ஒன்று இருப்பதால் சுத்த மாயையின் காரியமாகிய இதனை அதிலிருந்து வேறுபடுத்தற்காகக் சுத்த வித்தை என்றனர்.) ஞான சத்தி மிகுந்தும் கிரியா சத்தி குறைந்தும் செயற்படும் நிலை இது.

இறைவனது இச்சா சத்தி என்றும் ஒரு நிலையிலே நிற்க, ஏனைய ஞான சத்தியும் கிரியா சத்தியும் தனித்தனியாயும், தம்முள் ஒத்தும், ஒன்றின் ஒன்று மிகுந்தும் குறைந்தும் செயற்படுதலால் சிவம், சத்தி, சதாசிவம், ஈசுரம், சுத்தவித்தை என்னும் இவ்வைந்து தத்துவங்களும் சுத்த மாயையின் விரிவுகளாய்த் தோன்றலாயின எனச் சுருக்கமாகக் கூறலாம்.

**சுத்த மாயை**

(1. சிவம்(நாதம்)

2. சத்தி (விந்து)

3. சிதாசிவம் (சாதாக்கியம்)

4. ஈசுரம்

5. சுத்த வித்தை

இவற்றைச் சுத்த மாயையிலிருந்து சிவபெருமானே நேரே தோற்றி ஒடுக்குவதால் இவை சிவதத்துவங்கள் எனப்படுகின்றன. சுத்த மாயையினின்றும் தோன்றிச் சுத்தமாய் இருத்தல் பற்றி இவை சுத்த தத்துவங்கள் என்றும் சொல்லப்படும். முன்னே சொன்னபடி இறைவனது சத்தி, சுத்த தத்துவங்களாகிய இவற்றை நிலைக்களமாகப் பற்றி நின்று இவற்றின் வழியாகக் கீழேயுள்ள ஏனைத் தத்துவங்களைச் செலுத்தி நிற்கும். செலுத்தும் கருவியாதல் பற்றி இத்தத்துவத் தொகுதி பிரேரக காண்டம் என்றும் சொல்லப்பெறும் பிரேரகம் செலுத்துவது.

## சுத்த தத்துவங்களின் பெயர்

**20. வித்தியா தத்துவங்கள் ஏழும் விளம்பினோம்**

**சுத்தமாம் தத்துவங்கள் சொல்லக்கேள் - நித்தமாம்**

**சுத்தவித்தை ஈசுரம்பின் சொல்லும் சதாசிவம் நல்**

**சத்திசிவம் காண் அவைகள் தாம்**

### பதவுரை

**வித்தியா தத்துவங்கள்** அசுத்த மாயையின் காரியமாகிய வித்தியா தத்துவங்கள்

**ஏழும்** ஏழினையும்

**விளம்பினோம்** இதுவரையில் விளக்கினோம்.

**சுத்தமாம் தத்துவங்கள்** இனி, சுத்த மாயையிலிருந்து தோன்றும் சுத்த தத்துவங்களின் இயல்பை

**சொல்லக்கேள்** கூறுகிறோம். கேட்பாயாக.

**அவைகள்** அத் தத்துவங்கள்

**சுத்த வித்தை** சுத்த வித்தையும்

**ஈசுரம்** ஈசுரமும்

**பின் சொல்லும்** அவற்றின் மேலாகச் சொல்லப்படும்

**சதாசிவம்** சதாசிவமும்

**நல்சத்தி** நல்ல சத்தியும்

**சிவம்** சிவமும் என

**காண்** அறிவாயாக.

## பொழிப்புரை

அசுத்த மாயையிலிருந்து தோன்றும் வித்தியா தத்துவங்கள் ஏழினையும் விளக்கிச் சொன்னோம். இனி, சுத்த மாயையிலிருந்து தோன்றும் தத்துவங்களின் இயல்பை உனக்குக் கூறுகிறோம். அவை சுத்த தத்துவங்கள் எனப்படும். அவை சுத்தவித்தை, ஈசுரம், சதாசிவம், சத்தி, சிவம் என்னும் பெயரை உடையன. அவை நித்தமாக உள்ளன.

## சுத்த தத்துவங்களின் நிலை

**21. சுத்தவித்தை ஞானம்மிகும் தொன்மையாம் ஈசுரம் தான்**

**அத்தன் தொழில் அதிகம் ஆக்கியிடும் - ஒத்தவிவை**

**சாதாக்கியம் என்றும் சத்தி சிவம் கிரியை**

**ஆதார ஞானஉரு ஆம்**

## பதவுரை

**சுத்த வித்தை** சுத்த வித்தை என்ற தத்துவம்

**ஞானம் மிகும்** இறைவனது ஞானசத்தி மிகுந்து, கிரியா சத்தி குறைந்து நின்று தொழிற்படும் நிலைக்கு நிலைக்களமாய் இருப்பது.

**தொன்மையாம்** பழமையாகிய

**ஈசுரம்** ஈசுரதத்துவம்

**அத்தன் தொழில்** இறைவனது கிரியா சத்தி

**அதிகம் ஆக்கியிடும்** மேம்பட்டு நிற்க, ஞானசத்தி அடங்கி நிகழும் நிலைக்கு நிலைக்களமாய் இருப்பது.

**ஒத்தவிவை** ஞானசத்தியும் கிரியாசத்தியும் ஆகிய இவை ஒத்து இணைந்து நிகழும் நிலைக்கு நிலைக்களமாய் உள்ளது.

**சாதாக்கியம்** சதாசிவ தத்துவமாகும்.

**என்றும்** எப்போதும்

**சத்தி** சத்தி தத்துவம்

**கிரியை ஆதார உரு** இறைவனது சத்தி கிரியை மட்டுமாய் நின்று தொழிற்படும் நிலைக்கு நிலைக்களமாய் உள்ளது.

**சிவம்** சிவ தத்துவம்

**ஞான ஆதார உருவாம்** இறைவனது சத்தி ஞானமேயாய் நின்று தொழிற்படும் நிலைக்கு நிலைக்களமாய் இருப்பது.

**பொழிப்புரை**

சிவசத்தி மூத்திறப்பட்டு விளங்கும். அவை இச்சா சத்தி, ஞானசத்தி, கிரியா சத்தி என்பன. இச்சை என்றும் ஒரே நிலையில் இருப்பது. ஏனைய ஞானமும் கிரியையும் ஆகியவற்றின் தொழிற்பாட்டில்தான் வேறுபாடு உள்ளது. ஞான சத்தி மிகுந்து, கிரியா சத்தி குறைந்து நின்று தொழிற்படும் நிலை உண்டு. அவ்வாறு சிவசத்தி நிற்கும் நிலைக்கு நிலைக்களமாய் இருப்பது சுத்தவித்தை.

கிரியா சத்தி மிகுந்து, ஞான சத்தி குறைந்து நின்று தொழிற்படும் நிலை உண்டு. அவ்வாறு சிவசத்தி நிற்கும் நிலைக்கு நிலைக்களமாய் இருப்பது ஈசுரம்.

ஞான சத்தியும் கிரியா சத்தியும் சமமாய் நின்று தொழிற்படும் நிலை உண்டு. அவ்வாறு சிவசத்தி நிற்கும் நிலைக்கு நிலைக்களமாய் உள்ளது சதாசிவம்.

இனி, சிவசத்தி கிரியை மட்டுமாய் நின்று தொழிற்படும் நிலை உண்டு. அவ்வாறு கிரியையாய் நிற்கும் நிலைக்கு நிலைக்களமானது சத்தி தத்துவம்.

சிவசத்தி ஞானம் மட்டுமாய் நின்று தொழிற்படும் நிலை உண்டு. அவ்வாறு ஞானமேயாய் நிற்கும் நிலைக்கு நிலைக்களமானது சிவதத்துவம்.

இவ்வாறு சிவசத்திக்கு இடமாய் உள்ளவை இச் சுத்ததத்துவங்கள் ஆகும்.

**இனி, பாசமாகிய ஆணவமும் வினையும்**

**22. அறாறு தத்துவமும் சொன்னோம் அடைவாக**

**மாறா மலம்இரண்டும் வாசொல்லக் கூறில்**

**அறியாமை ஆணவம் நீயானசுக துக்கம்**

**குறியா வினைஎன்று கொள்.**

**பதவுரை**

**ஆறாறு தத்துவமும்** முப்பத்தாறு தத்துவங்களின் இயல்பையும்

**அடைவாக** முறையாக

**சொன்னோம்** விளக்கிக் கூறினோம்.

(ஆணவம், கன்மம், மாயை என்ற பாசம் மூன்றனுள் இதுவரை மாயை பற்றிக் கூறிமுடித்தோம். இனி, எஞ்சியுள்ள)

**மாறா** உயிரை விட்டு நீங்காமல் தொடர்ந்து வரும்

**மலம் இரண்டும்** ஏனைய இரண்டு மலங்களின் இயல்பையும்

**சொல்ல, வா** யாம் கூறுவோம்; நீ கேட்க வருவாயாக.

**கூறில்** அவற்றை எடுத்துச் சொல்லுமிடத்து

**அறியாமை** அறியாமையைத் தருவது

**ஆணவம்** ஆணவ மலமாகும்.

**நீயான** உன்னில் வேறாகப் பிரித்தறிய முடியாமல், உன் இயல்பாகவே நீ கண்டுவருகின்ற

**சுக துக்கம்** இன்பத் துன்பங்களைப் பயந்து நிற்பது

**குறியா வினை** எதிர்பாராத வகையில் வந்து பொருந்துகின்ற கன்ம மலமாகும்

**என்று கொள்** என்று அறிவாயாக.

## பொழிப்புரை

இதுவரை முப்பத்தாறு தத்துவங்களையும் முறையாகக் கூறி முடித்தோம். இனி, உயிரை விட்டு நீங்காதிருக்கும் ஆணவம், வினை என்னும் இரண்டு மலங்களின் இயல்பினை உனக்கு உரைப்போம். உனது அறிவை மறைத்து அறியாமையைத் தருவது ஆணவம்; உனக்கு இன்ப துன்ப நுகர்ச்சிகளைத் தருவது நல்வினை தீவினை என இரு வகைப்படும் வினையாகும் என்று அறிவாயாக.

## விளக்கம்

## ஆணவம்

உயிர்களாகிய நாம் அறிவுப் பொருள். அறிவுப் பொருளாகிய நம்மிடத்தில் அறியாமையும் இருக்கிறது. எவ்வாறெனில் ஒன்றன்பின் ஒன்றாகத் தொடர்ந்து வருகின்ற பிறப்பு இறப்புக்களில் அகப்பட்டுத் துன்புற்று வருகிறோம். ஆயினும், எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தோம் என்பதையோ பிறவி நமக்குத் துன்பம் தருவது என்பதையோ உணராதிருக்கின்றோம். நாம் செய்த வினை காரணமாகவே பிறவியும் துன்பங்களும் வருகின்றன என்பதையும் நாம் உணர்வதில்லை. இப்பிறவியிலிருந்து நம்மை எடுத்துக் காத்துப் பேரின்பத்துள் வைக்கவல்ல இறைவனது திருவருளையும் நாம் அறியாமல் அதனைப் பற்றிச் சிறிம் கவலை கொள்ளாமல் வாழ்கின்றோம்.

அறிவுப் பொருளாக இருந்தும் நாம் பிறவித்துயர், வினை, திருவருள் முதலியவற்றை அறியாதிருக்கிறோம். இவற்றை அறியாமல் இருப்பதற்கு என்ன காரணம்?

## அகவிருள்

காணும் தன்மையுடைய கண் பொருள்களைக் காணவொட்டாதபடி இருள் என்ற பொருள் அக்கண்ணை மூடி மறைக்கின்றது. கண் பொருள்களை அறியாத தன்மை இருளால் உண்டாவது. கண்ணை மறைக்கின்ற புற இருள்போல உயிரோடு பொருந்தி அதனை மறைத்திருக்கின்ற அகவிருள் ஒன்று உள்ளது. அதுவே ஆணவமலம் எனப்படுவது. முன்னே கூறியபடி பிறவித்துயர். வினை, திருவருள் முதலிய அறியத்தக்க பல பொருள்களுள் ஒன்றையும் அறியவொட்டாதபடி செய்வது ஆணவ இருளேயாகும்.

## அறியாமையே அறிவாகத் தோன்றுதல்

புறவிருள் வந்து கண்ணை மறைக்கும் போது கண் செயற்படாது போகிறது. உயிர் கண்ணுக்கு வேறாக இருப்பதனால் அக் கண் செயற்படாமையைக் கொண்டு அதனை மறைக்கக் கூடிய இருளாகிய பொருள் வந்துற்றது என்று உயிர் கருதி உணர்கிறது. இனி அகஇருளாகிய ஆணவமோ உயிரையே மறைத்து நிற்கிறது. அவ்வாறு மறைத்து நின்று அறியாமையை உண்டாக்குகிறது. உயிர் அவ்வறியாமையையே அறிவென்று நம்பி விடுகிறது. அதனாலேயே தன்னை ஒன்று மறைத்திருக்கிறது என்பதை எவ்வகையினாலும் உணர முடியாமற்போகிறது.

உலகில் இருள் வந்துற்றபோது அதனை உணர்ந்து அதனை நீக்கிக் கொள்ள வழி தேடுகிறோம். ஆணவ இருளினால் அறிவு மறைக்கப்படும் போது அம் மறைப்பினை நாம் உணர்வதில்லை. அதனால் ஏற்படும் அறியாமையையே அறிவு என்று நம்பி விடுகிறோம். அதனாலேயே அறியாமையைப் போக்கிக் கொள்ள வழி தேடாமல் இருக்கிறோம்.

ஓர் எடுத்துக்காட்டுக் கூறினால் இது விளங்கும். ஒரு குடும்பத்தலைவர் தமது மனைவி, மக்கள், உடன் பிறந்தார் பொருட்டு வாழ்நாளெல்லாம் பாடுபட்டுப் பொருள் ஈட்டினார். கடைசி காலத்தில் அவர்கள் தனக்குத் துணையாக இருப்பர் என்று உறுதியாக நம்பினார். ஆனால் நடந்தது என்ன? அவர் ஓய்வு பெற்ற பின்னர், அவருக்கு வருவாய் இல்லை என்று ஆன பின்னர், குடும்பத்தார் அவரிடம் நடந்து கொண்ட முறையில் அவர் வேறுபாட்டைக் கண்டார். தனக்கு உரிய மதிப்பினை அளிக்காமல் புறக்கணிக்கும் போக்கினைக் கண்டார். அவர்கள் கடைசி வரை தமக்குத் துணையாய் இருப்பர் என்று நம்பியது எவ்வளவு அறியாமை என்று எண்ணி வருந்தினார். இத்துணைக் காலமும் அவர் அறியாமையில் இருந்தார்.

ஆயினும் நாம் அறியாமையில் இருக்கிறோம் என்பதை அவர் உணரவில்லை அதற்குக் காரணம், அந்த அறியாமையே அவருக்கு அறிவாகத் தோன்றியதுதான்.

## ஆணவம் செய்யும் முழுமறைப்பு

இனி அறியாமையிலே இரு நிலைகள் உள்ளன. ஒன்று பேரறியாமை; மற்றொன்று, ஓரளவில் அறியாமை பேரறியாமையாவது உயிர் யாதொன்றையும் அறியமாட்டாமல் முழுஅறியாமையில் மூழ்கியிருத்தல். அந்நிலையில் உயிர், தான் ஒரு பொருள் உண்டு எனத் தன் இருப்பையும் கூட அறியாது நிற்கும். நாம் உறங்குங் காலத்தில் இப்படிப்பட்ட பேரறியாமையே நமக்கு உண்டாகிறது அப்பொழுது ஐம்பொறி முதலிய கருவிகள் செயற்படாது போதலினால் அறிவு விளங்காமற் போகிறது. உயிர் அந்நிலையில் ஆணவமலத்தின் வயப்பட்டு விடுகிறது. இருள் வயப்பட்ட கண் ஒன்றையும் அறிய மாட்டால் திகைந்து நிற்பதுபோல உயிரும் உறக்கத்தில் ஆணவ மலத்தால் மறைக்கப்பட்டு முழு அறியாமை உடையதாய் நிற்கிறது. இப்படிப்பட்ட பேரறியாமை நிலை, கேவல நிலை எனப்படும். நாள்தோறும் நாம் இக் கேவல நிலையை அடைந்துவருகிறோம்.

## ஆணவத்தால் உண்டாகும் மயக்கவுணர்வு

இனி ஓரளவில் உள்ள அறியாமை என்றால் என்ன? என்பதைக் கூறுவோம். எங்கும் செறிந்த இருளிடத்தில் ஒரு விளக்கை ஏற்றினால் அவ்விளக்கொளியில் இருள் சிறிது விலகுகிறது. ஆனால் அது முற்றிலும் நீங்கி விடவில்லை. நீங்காதிருக்கிற அந்த இருள் விளக்கொளியின் காரணமாக முன்பு போலப் பொருள்களை முற்றிலும் மறைக்க முடியவில்லை. ஆனால் அது வேறு ஒரு காரியத்தைச் செய்கிறது. விளக்கொளியானது பொருள்களைப் புலப்படுத்துகிற போது இருளானது அந்த ஒளியோடு கலந்து பொருள்களை மங்கலாகப் புலப்படும்படி செய்கிறது. தரையில் கிடக்கும் கயிற்றைப் பாம்பு என்று தவறாகக் கருதும்படி செய்கிறது. இவ்வாறு இருள் ஒளியோடு சேர்ந்து பொருளின் இயல்பை வேறுபடுத்திக் காட்டுகிறது.

இந்தப் புறவிருளின் செய்கை போல அக இருளாகிய ஆணவத்தின் செயலும் அமைகிறது. ஆணவம் இருள் என்றால் அதனை நீக்கும் விளக்குப் போன்றது மாயை. நமக்கு வாய்த்துள்ள ஐம்பொறிகளும், மனம் புத்தி போன்றவையும் மாயையினின்றும் தோன்றிய கருவிகளே என்பது நாம் அறிந்தது. இக்கருவிகளின் செயற்பாட்டினால் அஃதாவது,

மாயாமலத்தின் சேர்க்கையால் ஆணவ மலத்தின் சத்தி சிறிது விலகுகிறது. அறிவு விளங்குகிறது. மாயையின் காரணமாக ஆணவ இருள் முன்பு போல அறிவை முற்றிலும் மறைக்க முடியவில்லை. ஆனால் அது இப்பொழுது வேறு ஒரு காரியத்தைச் செய்கிறது. மாயா கருவிகளால் விளங்கும் அறிவை விபரீத அறிவாக மாற்றி விடுகிறது. அஃதாவது அற்பமான பொருளை உயர்வானது என்றும், நிலையில்லாத பொருளை நிலைத்தது என்றும் இவ்வாறு மாறி உணரும்படியாகச் செய்து விடுகிறது. இவ்வாறு ஆணவ இருள் மாயையோடு கூடிய நிலையில் உயிருக்கு மயக்க உணர்வை உண்டாக்குகிறது. நாமெல்லாம் நமக்கு வேறாகிய உடம்பையே நாம் என்று எண்ணிக் கொண்டிருக்கிறோம். இது மயக்க உணர்வு தானே. நமக்கென்று என்ன உடைமை இருக்கிறது? நாம் பிறக்கும் போது எதையும் உடன் கொண்டு வரவில்லை. இறக்கும் போது எதையும் உடன் கொண்டு போவதும் இல்லை. அப்படியிருக்க எனது எனது என்று எண்ணி உடைமைகளைச் சேர்த்துக் கொண்டிருக்கிறோமே. இது மயக்கவுணர்வு தானே. இம்மயக்கவுணர்வே ஓரளவில் அறியாமை என்று முன்னே குறிப்பிடப்பட்டது.

## ஆணவத்தின் தன்னியல்பும் பொதுவியல்பும்

இதுவரை கூறியவற்றால் ஆணவ மலத்தின் இயல்பு இரண்டு என்பது புலனாகும். ஒன்று மாயையோடு சேராத தனி நிலையில் ஆணவமலம் உயிருக்குப் பேரறியாமையைத் தருதல். மற்றொன்று, மாயையோடு கூடிய நிலையில் உயிருக்கு ஓரளவில் அறியாமையைத் தருதல்.

ஆணவம் தனித்துச் செயற்படும் நிலை கேவலநிலை என்று குறிப்பிட்டோம். மாயையோடு கூடிச் செயற்படும் நிலை சகல நிலை எனப்படும்.

ஆணவம் தனி நிலையில் பேரறியாமையைச் செய்தல் அதற்குத் தன்னியல்பு ஆகும். அது மாயையின் சேர்க்கையைப் பெற்றவிடத்து மயக்கவுணர்வைச் செய்தல் அதற்குப் பொதுவியல்பு ஆகும்.

எனவே தனி நிலையிலும், மாயையோடு கூடிய பொது நிலையிலும் ஆன்மாவுக்கு அறியாமையைத் தருதலே ஆணவத்தின் இயல்பாகும். இதுபற்றியே அறியாமை ஆணவம் என்று குறிப்பிட்டார் ஆசிரியர்.

இத்தொடரின் நடுவே தருவது என்ற ஒரு சொல்லை வருவித்து அறியாமையைத் தருவது ஆணவம் எனக்கொள்ள வேண்டும்.

## வினை

ஆணவத்தின் காரணமாக உண்டாவது கன்மம் எனப்படும் வினையாகும். ஆணவத்தினால் வினை எப்படித் தோன்றுகிறது என்பதைக் காண்போம். உயிர் இறைவனைப் போல அறிவுப் பொருளேயாகும். ஆயினும் சுதந்திரமான அறிவுடையதல்ல. அறிவதற்குத் துணை ஒன்றே வேண்டாது தானே அறிவதே சுதந்திர அறிவாகும். அத்தகைய சுதந்திர அறிவு உயிருக்கு ஏது? பிறந்தது முதற்கொண்டு பெற்றோர், ஆசிரியர், நூல்கள் முதலிய துணையைக் கொண்டு தானே அறிவு விளங்குகிறது. மேலும் கண்டும் கேட்டும் உண்டும் உயிர்த்தும் உற்றும் அறிவதற்கு ஐம்பொறிகள் அல்லவா துணை செய்கின்றன? இவ்வாறு பொறிகளின் துணையில்லாமல் யாதொன்றையும் அறிய மாட்டாத உயிர்க்குச் சுதந்திர அறிவென்பது ஏது?

உயிருக்குச் சுதந்திர அறிவு இல்லாமை போலவே சுதந்திரமான செயலும் இல்லை. சுதந்திரமான செயலாவது எத்தடையுமின்றி நினைத்ததை நினைத்தவாறே செய்து முடித்தலாகும். இத்தகைய செயல் உரிமை உயிருக்கு இருக்கிறதா?

**ஒன்றை நினைக்கில் அது ஒழிந்திட்டு ஒன்றாகும்**

**அன்றி அதுவரினும் வந்தெய்தும் ஒன்றை**

**நினையாத முன் வந்து நிற்கினும் நிற்கும்**

**எனையாளும் ஈசன் செயல்**

எனவரும் அனுபவ வாக்கு உயிருக்குச் சுதந்திரமான செயல் இல்லை என்பதை உணர்த்தி நிற்கிறது.

## பற்றுடன் செய்யும் முயற்சியே வினையாதல்

இறைவனையின்றி ஆன்மா எதனையும் தானே அறியவும்மாட்டாது; எதனையும் தானே செய்யவும் மாட்டாது. ஆயினும் ஆணவ மலம் உண்டாக்குகிற மயக்க உணர்வால் ஆன்மா எச்செயலுக்கும் தன்னையே வினைமுதலாகக் கருதி நான் நான் என்று முனைத்து எழும். அவ்வாறு

எழுந்த ஆன்மா ஆணவ சத்தியின் தூண்டுதலால் உலகப் பொருள்களை நோக்கி அவற்றின் மேல் இச்சை கொள்ளும். அவ் இச்சையினால் தனது அல்லாத அப்பொருள்களை எனது எனது என்று சென்று பற்றும். எனது என்பது புறப்பற்றும், யான் என்பது அகப்பற்றும் ஆகும். இவ்விரு பற்றுக்களின் வழியே செய்யும் முயற்சியே வினை அல்லது கன்மம் எனப்படும்.

## ஆணவ மலத்தின் வழிப்பட்டது வினை

ஆணவ மலமே உயிருக்கு யான் என்னும் உணர்வை உண்டாக்கி செய்வோனாம் தன்மையைத் தருகிறது; எனது என்னும் உணர்வை உண்டாக்கி நுகர்வோனாம் தன்மையைத் தருகிறது. செய்வோனாம் தன்மையும், நுகர்வோனாம் தன்மையுமே வினை உண்டாவதற்கு ஏதுவாகின்றன. சுருங்கக் கூறினால், ஆணவ மலத்தின் வழியாகவே வினை வந்து உயிரைப் பற்றுவதாகிறது.

## வினையின் மூவகை நிலைகள்

ஆன்மா தனது செய்வோனாம் தன்மையினால் ஒரு செயலைச் செய்யுங்கால் நிகழ்வது தூல கன்மம். புலப்படுகிற வினை என்பது அதற்குப் பொருள். அச்செயல் முடிந்த பின் அது தூல நிலை நீங்கிச் சூக்கும நிலையை அடைந்து நிற்கும். அதனைப் புலப்படாத வினை எனலாம்.

புலப்படும் வினை நல்வினை, தீவினை என இரண்டு வகையாய் அமையும் பின் அவைகளே புலப்படாத வினையாய் நிற்குங்கால் புண்ணியம், பாவம் எனப் பெயர் பெறும். புலப்படாத வினைகளே தத்தமக்குரிய காலம் வந்தபோது இன்பமும் துன்பமும் ஆகிய தம் தம் பயன்களைத் தம்மைச் செய்த ஆன்மாக்களுக்குக் கொடுக்கும்.

புலப்படும் நிலையில் நிகழும் வினை ஆகாமியம் எனப்படும். ஆகாமியம் என்பதற்கு விரும்பிச் செய்யப்படுவது என்பது பொருள். அச்செயல் முடிந்தபின், புலப்படா நிலையை அடைந்து சூக்குமமாய் நிலைத்து நிற்குங்கால் சஞ்சிதம் எனப்படும். சஞ்சிதம் என்பதற்கு நன்கு பெறப்பட்டது என்பது பொருள். புலப்படாத நிலையினின்று பயனாய் வந்து இன்ப

துன்பங்களைக் கொடுக்கும் போது பிராரத்தம் எனப்படும். பிராரத்தம் என்பதற்கு நேர்படுவது என்பது பொருள்.

### இன்ப துன்பங்களுக்குக் காரணம்

இதனால், ஒருவர் நல்வினை செய்தால் அது புலப்படாத நிலையில் புண்ணியமாய் நிலைத்து நின்று பின் காலம் வந்தபோது இன்பமாகிய பயனைத் தன்னைச் செய்தவருக்குக் கொடுக்கும் என்பதும், ஒருவர் தீவினை செய்தால் அது பாவமாய் நிலைத்து நின்று பின் காலம் வந்த போது துன்பமாகிய பயனைத் தன்னைச் செய்தவருக்குக் கொடுக்கும் என்பதும் புலனாகும். எனவே இன்ப துன்பங்களுக்குக் காரணம் வினை என்பது விளங்கும்.

### நீயான சுகதுக்கம்

இன்ப துன்பங்கள் நமது இயற்கையல்ல. இயற்கையென்றால் என்றும் ஒரு தன்மையாய் இருக்கவேண்டும் மாறுதல் அடைவது இயற்கையாகாது. நமக்கு வருகின்ற இன்ப துன்பங்கள் இயற்கை எனின் அவை நம்மை விட்டு எப்பொழுதும் நீங்காதிருத்தல் வேண்டும். ஆயின் அவை சிறிது காலம் இருந்து பின் நீங்கக் காண்கிறோம். ஆகையால் அவை நம்மோடு என்றும் இருக்கும் இயற்கையல்ல. வினை என்னும் காரணத்தினால் வந்து பொருந்துகிற செயற்கையேயாகும். அக்காரணம் உள்ள வரையில் அவையும் இருந்து, அது நீங்கியவுடன் அவையும் நீங்கி விடும்.

நாம் இவ்வுண்மையை உணர்வதில்லை. இன்ப துன்பங்களை நமக்கு வேறானவை எனப் பிரித்து உணராது, அவற்றை நம் இயல்பாகவே கண்டு வருகிறோம். யான் இன்பமாய் இருக்கிறேன், துன்பமாய் இருக்கிறேன் என்று நம் இயல்புகளாகச் சொல்லி வருகிறோம். இது பற்றியே நீயான சுகதுக்கம் என்றார் ஆசிரியர்.

இங்கேயும் தருவது என்ற ஒரு சொல்லை வருவித்து, சகதுக்கம் தருவது குறியாவினை என்று கொள்ளவேண்டும்.

### குறியாவினை

சுக துக்கத்திற்குக் காரணம் இன்னது என்பதை மேலே அறிந்தோம். சுகமும் துக்கமும் வருவதும் போவதும் நம் கையில் இல்லை. அவை எவ்வழியாக

வரும்? எத்தனை காலம் நிற்கும்?என்று யாரால் சொல்ல முடியும்? உலக வாழ்க்கையைப் போல் அறியமுடியாத விந்தை வேறொன்றுமில்லை.

நீலவானம் மேகமேயில்லாமல் களங்கமற்று விளங்கி வருகிறது. திடீரென்று கருமேகங்கள் எங்கிருந்தோ திரண்டு வந்து, இடி இடித்து மின்னல் மின்னிப் பெருமழை கொட்டுகிறது.

சில சமயம் காற்று என்பதே இல்லாமற் போய் விடுகிறது. மரங்களின் இலைகளும் அசையாமல் இருக்கின்றன. திடீரென்று எங்கிருந்தோ ஒரு சூறைக்காற்று வந்து சுழன்று அடிக்கிறது. அதன் வேகத்தில் பெரிய பெரிய மரங்களெல்லாம் வேருடன் பெயர்ந்து விழுகின்றன. சற்று முன்னால் கண்ணுக்குக் குளிர்ச்சியாகக் காட்சியளித்த பசுஞ்சோலை இப்பொழுது நிலைகுலைந்து தரைமட்டமாகி விடுகிறது.

வாழ்க்கையும் இதுபோலத்தான். சுகம் எப்படி வருகிறது? துக்கம் எப்படி வருகிறது? என்பதை நாம் அறிய முடியவில்லை. காலம் வருமளவும் நுண்ணியதாய் அடங்கியிருந்து, காலம் வந்தவிடத்து உருப்பட்டு வந்து பொருந்தி இன்ப துன்பங்களைப் பயப்பதாகிய வினையின் இயல்பு அறிதற்கு அரிது. அதனைக் குறியாவினை என அடைமொழி கொடுத்துக் கூறினார் உண்மை விளக்க ஆசிரியர். குறியாவினை என்பதன் பொருளை நன்கு விளங்கிக் கொள்ளச் சங்க இலக்கியமாகிய அகநானூற்றில் வரும் ஒருதொடர் துணை செய்வதாகும். அத்தொடரையும், அத்தொடர் பயன்படுத்தப்பட்ட சூழலையும் முதலில் அறிந்து கொள்வோம்.

ஒரு வளமான மலைச்சாரல். எங்கே பார்த்தாலும் அடர்த்தியான காடு. அங்கே எத்தனை வகையான மரங்கள்! செழிப்பாக வளர்ந்துள்ள வாழை மரங்களில் பெரிய பெரிய குலைகள். அவற்றை வெட்டுவார் இல்லை. அவ்வாழைக் குலைகள் முற்றி முதிர்ந்து தாமாகப் பழுத்து நிற்கின்றன. கீழே பாறையான தரையில் குழிவான இடத்தில் சிறிய சுனை இருக்கிறது. தாமே பழுத்து உதிர்ந்த வாழைக் கனிகள் அச்சுனை நீரில் கலக்கின்றன.

அருகிலே பலா மரங்கள் உள்ளன. அவற்றில் கொத்துக் கொத்தாகப் பலாப் பழங்கள் காட்சியளிக்கின்றன. அவை நன்றாகக் கனிந்து வெடித்து, அவற்றின் சுளைகள் உதிர்ந்து கீழே பாறையிலுள்ள சுனை நீரில் கலக்கின்றன.

இவ்வாறு வாழைக் கனிகளும் பலாப்பழச் சுளைகளும் விழுந்து கலந்து பல நாள் ஊறி ஊறி அந்தச் சுனைநீர் தேன்போல ஆகிவிட்டது.

இனிமையான அந்த மலைச் சாரலில் மனிதர்களின் நடமாட்டம் இல்லை. ஆனால் வளமான மரங்கள் நிறைந்த இடத்திலே வானரங்கள் மிகுதியாக இருப்பது இயற்கை தானே. மரமேறும் குரங்குகளுக்கு மரங்கள்தான் வாழும் அரண்மனை; பசி தீர்க்கும் உணவுச்சாலை; தாவி விளையாடும் ஊசல்; துயிலும் தொட்டில்!

இதோ ஓர் ஆண்குரங்கு. அதற்குப் பொறுக்கமுடியாத தாகம் போலும். அது பாறையிலே தேங்கியிருந்த சுனை நீரை ஓடிச் சென்று குடித்தது. அது வெறும் நீரா? புளித்த தேன் (கள்) அல்லவா? அதன் தன்மையறியாமல் நீர் என்றே கருதிப் பருகி விட்டது.

சுனையின் பக்கத்தில் ஒரு சந்தன மரம் ஓங்கி நிற்கிறது. கள் ஆகிய நீரைப் பருகிய குரங்குக்கு ஒரே மயக்கம். சந்தன மரத்தில் அது ஏற முயல்கிறது. சிறிது தூரம் ஏறுவதற்குள் மயக்கம் கண்ணைச் சுழற்றுகிறது. மேலே செல்ல முடியாமல் கீழே விழுகிறது. விழுந்த இடமோ பல வகையான மலர்கள் உதிர்ந்து மெத்தென்று இருக்கிறது. மென்மையான அந்த மலர்ப்படுக்கையிலே விழுந்ததும் குடி மயக்கத்தால் தன்னை மறந்து இன்ப உறக்கத்தில் ஆழ்ந்து விடுகிறது. இந்த இன்ப உறக்கம் முயற்சியும் நினைப்பும் இன்றி, எதிர்பாராதவகையில் அதற்குக் கிடைத்ததாகும். அதனால், குறியாஇன்பம் என அதனைக் குறிப்பிட்டார் புலவர் (அகநானூறு,2) குறியா எதிர்பார்க்காத, நினைக்காத.

இச்சங்க இலக்கியத் தொடரையொத்து அமைந்துள்ளது குறியா வினை என்ற உண்மை விளக்கத்தொடர், எதிர்பாராத வகையில், நாம் நினைக்காத முறையில், வந்து பொருந்தி இன்ப துன்பங்களைத் தருதலின் குறியா வினை எனப்பட்டது என்று கொள்ளலாம்.

## பசு

### நான் யார்?

**23. ஆறாறு தத்துவமும் ஆணவமும் வல்வினையும்**
**மாறா அருளால் வகுத்துரைத்தீர் வேறுஆகா**
**என்னை எனக்கு அறியக் காட்டீர் இவைகண்டேன்**
**உன்னரிய தேசிகரே உற்று.**

### பதவுரை

**உன்னரிய** எண்ணுதற்கு அரிய பெருமையையுடைய

**தேசிகரே** ஆசாரிய மூர்த்தியே,

**மாறா அருளால்** அடியேன் மீது கொண்ட நீங்காத பேரருளால்

**ஆறாறு தத்துவமும்** முப்பத்தாறு தத்துவங்களின் இயல்புகளையும்

**ஆணவமும்** ஆணவ மலத்தின் இயல்பையும்

**வல்வினையும்** வலிய கன்ம மலத்தின் இயல்பையும்

**வகுத்து உரைத்தீர்** வகைப்படுத்தி விளக்கினீர்.

**உற்று** உமது திருவருள் நோக்கம் பெற்று

**இவை கண்டேன்** இவற்றின் இயல்பையெல்லாம் உள்ளவாறு உணர்ந்து கொண்டேன்.

(இதுவரை கூறிவந்த தத்துவங்களின் தொழிற்பாடுகள், ஆணவ மலத்தால் விளையும் அறியாமை, கன்ம மலத்தால் விளையும் இன்பத்துன்பங்கள் ஆகியவை எனக்கு உரியன அல்ல என்பதை உணராமல், அவற்றையே என் இயல்புகள் எனத்தவறாகக் கருதி மயங்கினேன்.)

**வேறாகா** இவற்றுக்கு வேறாக அறியமாட்டாது இவற்றில் கட்டுண்டு கிடக்கின்ற

**என்னை** அடியேனது உண்மையியல்பை

**எனக்கு அறியக் காட்டீர்** எனக்கு உணர்த்தியருள்வீராக

## பொழிப்புரை

எண்ணுதற்கு அரிய பெருமையையுடைய குரு முதல்வரே! என்னிடத்திற் கொண்ட பேரருளால் முப்பத்தாறு தத்துவங்களின் இயல்புகளையும், ஆணவம் வினை என்ற இருமலங்களின் இயல்புகளையும் வகுத்துச் சொன்னீர்கள். உமது அருள் நோக்கம் பெற்றமையால் இவற்றை உள்ளவாறு உணர்ந்து கொண்டேன். இதுகாறும் இத்தத்துவங்களோடு கூடி இவையே நான் என்று மயங்கியிருந்தேன். ஆணவம், வினை இவற்றின் விளைவுகளாகிய அறியாமையையும் இன்ப துன்பங்களையும் என் இயல்புகள் என்று தவறாகக் கருதியிருந்தேன். இம் மயக்கவுணர்வு நீங்கி நான் யார்? என்பதை உணரும்படி என் உண்மையான இயல்பை எனக்கு உணர்த்தியருள்க. இவ்வாறு மாணாக்கர் வேண்டுகிறார். ஆசிரியர் இதற்குப் பின் வரும் மூன்று செய்யுட்களில் விடையளிக்கின்றார்.

## ஆன்மாவின் இயல்பு

**24. நன்றா உரைக்கக்கேள் நல்லசித்தின் முன் அசித்து இங்கு**
**ஒன்றாது சித்துஅசித்தை ஓராது நின்று இவற்றை**
**அன்றே பகுத்து அறிவது ஆன்மாவே என்று மறை**
**குன்றாமல் ஓதும் குறித்து**

## பதவுரை

| | |
|---|---|
| **நன்றா** | (நன்மாணாக்கனே, உன் இயல்பை) தெளிவாக |
| **உரைக்கக் கேள்** | யாம் சொல்லக் கேட்பாயாக, |
| **நல்ல சித்தின் முன்** | தூய அறிவுப் பொருளாகிய சிவத்தின் முன் |
| **அசித்து** | அறிவில்லாதவனாகிய உலகப் பொருள்கள் |
| **இங்கு ஒன்றாது** | எதிர்ப்பட்டு விளங்கி நில்லா (ஆதலால்) |
| **சித்து** | அச்சிவம் |

**அசித்தை** தன் முன் விளங்கி நில்லாத அவ்வுலகப் பொருள்களை

**ஓராது** சுட்டியறியாது; அவற்றில் தோய்ந்து நுகராது.

**அன்றே** அனாதியே

**இவற்றை** அறிவில் பொருள்களாகிய இவற்றோடு

**நின்று** வேற்றுமையின்றிக் கூடிநின்று நுகர்ந்து

**பகுத்தறிவது ஆன்மாவே** (பின், ஆசான் அருளால்) அவற்றைத் தனக்கு வேறு எனப்பகுத்து அறிந்து, அவற்றின் தொடர்பிலிருந்து நீங்கும் அறிவுப் பொருளாயிருப்பது ஆன்மாவேயாகும்.

**மறை** இவ்வாறு வேத ஆகமங்கள்

**குன்றாமல்** ஐயத்திற்கு இடமில்லாமல்

**குறித்து ஓதும்** விளக்கிக் கூறும்.

**பொழிப்புரை**

ஆன்மாவின் இயல்பை உணர்த்துகின்றோம் நன்றாகக் கேள். என்றும் மாறாத தூய அறிவாய் இருப்பது சிவம். அதன்முன் அறிவில்லாத உலகப் பொருள்கள் எதிர்ப்பட்டு நில்லா. ஆதலால் தூய அறிவாகிய சிவம் அப்பொருள்களைச் சுட்டியறிவதுமில்லை; அனுபவிப்பதுமில்லை.

இனி, அறிவில்லாத உலகப் பொருள்களைச் சுட்டியறிந்து அவற்றில் அழுந்தி, அவை வேறு தான் வேறு என்பதை அறியாமல் அவற்றோடு ஒற்றுமைப்பட்டு நின்று, பின் நல்லாசிரியரின் உபதேசத்தால் அவற்றை தனக்கு வேறு எனப் பகுத்தறிந்து அவற்றின் தொடர்பிலிருந்து நீங்கும் அறிவுப் பொருளாய் இருப்பது ஆன்மாவே ஆகும். இவ்வாறு ஆகமங்கள் விளக்கிச் சொல்லும்.

## விளக்கம்

## உலகத்தை அறிந்து நுகர்வது ஆன்மாவே

சடமாகிய உலகப் பொருள்கள் அனைத்தும் பகுதிகளை உடைய செயப்படுபொருள்களாய் உள்ளன. அவை பயன்படு பொருள்களாய் நுகரப்படும் பொருள்களாய் உள்ளன என்பது கண்கூடு. கண்டும், கேட்டும், உண்டும், உயிர்த்தும், உற்றும் அவை நுகரப்படுகின்றன. அற்பமான தலைமுடியும் கூட நுகரப்படு பொருளாய் உள்ளது என்றால் பிற பொருள்களைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ?

அழகான கட்டில் ஒன்று. அதன் கால்கள் நன்றாகக் கடையப்பெற்று விளங்குகின்றன. அக்கட்டிலில் சிற்ப வேலைப்பாடுகள் கண்ணைக் கவர்கின்றன. மெல்லிய மெத்தை விரிப்பும் சித்திர வேலைப்பாடுள்ள தலையணைகளும் அக்கட்டிலில் திகழ்கின்றன.

இப்படிப்பட்ட பல பகுதிகளை இணைத்து நேர்த்தியாகச் செய்யப்பெற்ற கட்டிலைக் காணும் பொழுது இக்கட்டில் ஒருவருடைய பயன்பாட்டிற்காகச் செய்யப்பட்டது எனவும், இதனைப் பயன்படுத்துகிற ஒருவர் இருக்கிறார் எனவும் எளிதில் ஊகித்தறியலாம் தானே.

அதுபோல உலகிற் காணப்படும் சடப்பொருள்கள் யாவும் ஆக்கப்படு பொருள்களாய், நுகர்ச்சிக்குரிய பொருள்களாய் உள்ளன. எனவே இவற்றை அறிந்து நுகர்கின்ற, இவற்றால் பயன்கொள்ளுகின்ற அறிவுடைய பொருள் இருத்தல் வேண்டும் என்பது தெளிவாகிறது. அவ்வறிவுப் பொருள் எது?

அறிவுப் பொருள்கள் இரண்டு உள்ளன என்று சைவ சித்தாந்தம் கொள்ளும். ஒன்று முற்றறிவுடைய சிவம். மற்றொன்று, சிற்றறிவுடைய ஆன்மா. இவ்இரண்டனுள் உலகத்தை அறிந்து நுகர்வது எது?

ஒன்றை அறிந்து நுகர வேண்டுமாயின் அப்பொருள் எதிரில் வேறாக விளங்கி நிற்றல் வேண்டும். அப்பொழுது தான் அதனை இன்னது என்று சுட்டியறிதலும். அதனை அனுபவித்தலும் இயலும்.

இறைவனுக்குச் சுட்டறிவு என்பது இல்லை சுட்டியறிவதற்கு அவனுக்கு எதிரில், அவனுக்கு வேறாக எப்பொருளும் இல்லையே. எல்லாப் பொருள்களும் அவனுக்குள்ளாக அல்லவா உள்ளன. அவனது

பெருநிறைவுக்குள் அடங்கியல்லவா உள்ளன. அவனது நிறைவுக்கு அப்பால் அவனுக்கு வேறாய் ஏதும் இல்லாதபோது அவன் எப்படிச் சுட்டியறிய முடியும்? அவன் தன்னுள் அடங்கிய யாவற்றையும் ஒரே நேரத்தில் ஒன்றாக அறிந்து நிற்பானேயன்றி இது இன்னது என்று தனித் தனியாகச் சுட்டியறிய வேண்டிய நிலை அவனுக்கு இல்லை.

எல்லாவற்றையும் அறிந்தாங்கு அறிந்து நிற்கும் அவனுக்குச் சுட்டறிவு இல்லை. மேலும் அவனது அறிவு எதிலும் தோயாது நிற்கும் சுதந்திர அறிவாகும். பிறவற்றின் வயப்படாது தன்வயத்தனாய் நிற்றல் அவனது இயல்பாகும். எனவே பொருள்களின் வயப்பட்டு அவற்றில் அழுந்தி நிற்றலாகிய அனுபவம் என்பது அவனுக்கு இல்லை. எனவே இறைவன் உலகத்தை அறிந்து நுகர மாட்டான் என்பது தெளிவாகிறது.

உலகம் நுகர்ச்சிப் பொருள் என்பதை அறிந்தோம். இறைவன் அதனை நுகர மாட்டான் என்பதையும் அறிந்தோம். எனவே உலகத்தை நுகர்வதும், அதனால் பயன்கொள்வதும் ஆகிய பொருள் ஆன்மாவே என்பது தானே விளங்கும்.

## அது அதுவாய் ஒன்றி நிற்பது ஆன்மா

ஆன்மாவினது அறிவு தன்வயமில்லாதது. எப்பொருளைச் சார்கிறதோ அப்பொருளின் வசப்படுவது. அப்பொருளோடு ஒன்றி அதுவே தானாய் நிற்பது. இதனை ஓர் எடுத்துக்காட்டால் விளக்கலாம். ஒருவனுக்குப் பெருஞ் செல்வம் வந்து சேர்கிறது. அவன் அதனைத் தனக்கு வேறானது என்று கருதவில்லை. அது இடையில் வந்தது; இடையிலேயே நீங்கிவிடக் கூடியது என்றும் எண்ணவில்லை. அவன் அதனையே தன்னுயிராகக் கருதுகிறான். எப்பொழுதும் அதனைப் பற்றிய நினைப்புத்தான். அதனை எப்படிப் பாதுகாப்பது? என்ற கவலைதான். ஒரு சமயம் வருமான வரித்துறை அதிகாரிகள் அவன் வீட்டைச் சோதனையிட்டுக் கணக்கில் வாராதவற்றையெல்லாம் கைப்பற்றுகிறார்கள். அவன் கலங்குகிறான்; மயங்குகிறான். உயிரே போனது போல உணர்விழந்து நிற்கிறான். அவனது உணர்வு செல்வத்தோடு ஒன்றி நின்ற காரணத்தாலேயே அச்செல்வம் போனதும் அவனும் உணர்விழந்த நிலையை அடைகிறான்.

இவ்வாறு அசத்தாகிய உலகப் பொருள்களோடு ஒன்றி அவையே தானாய் நிற்கிறது ஆன்மா.

## சிவத்தோடு ஒன்றி நிற்றலே இயற்கை

அறிவுப் பொருளாகிய ஆன்மா தன்னினமாகிய தூய அறிவுப் பொருளாகிய இறைவனோடு ஒன்றி நிற்பதே இயற்கையாகும். வேற்றினமாகிய அறிவற்ற உலகப் பொருள்களோடு ஒன்றி நிற்பது அதற்குச் செயற்கையே ஆகும்.

இவ்வுண்மையை ஞானாசிரியர் உணர்த்தும் போதுதான் ஆன்மா அசத்தாகிய உலகச் சார்பைத் தனக்கு வேறு எனப் பகுத்தறிந்து, அதனின் நீங்கிச் சத்தாகிய சிவத்தோடு கூடி இன்புறும்.

இச்செய்யுளின் கருத்தைப் பின்வருமாறு சுருக்கிக் கூறலாம். உலகம், சிவம் என்ற இருபொருள்களுள் உலகம் அறிவற்றது. எனவே அது சிவத்தை அறிந்து நுகரமாட்டாது. சிவம் எதையும் சுட்டி அறியாது. எனவே அதுவும் உலகத்தைச் சுட்டியறிந்து நுகரமாட்டாது. இவ்வாறு உலகும் சிவமும் ஆகிய இரண்டும் தம்முள் ஒன்றையொன்று அறிந்து நுகரா. ஆதலின், இவ்விரண்டனையும் அறிந்து நுகர்தற்கு உரிமையுடைய மூன்றாவது பொருள் உண்டு என்பது பெறப்படும். அதுவே ஆன்மா என்பது.

ஆன்மா உலகை அறிந்து நுகர்ந்து அதன் வயப்பட்டு நிற்கும். இது கட்டு நிலை. பின் திருவருள் துணையால் இறைவனை உணர்ந்து இறையின்பத்தை நுகர்ந்து அதன் வயப்பட்டிருக்கும். இது வீட்டு நிலை.

## தத்துவங்கள் ஆன்மா அல்ல

மாயா காரியங்களாகிய முப்பத்தாறு தத்துவங்கள் நாம் அறிந்தவை அத்தத்துவங்களே புறக் கருவிகளாயும் அகக் கருவிகளாயும் அமைந்துள்ளன. கண், காது முதலிய புறக்கருவிகளும் மனம், புத்தி முதலிய அகக் கருவிகளும் ஆகிய இவையே உலக அறிவைத் தருகின்றன. கண் கண்டறிகிறது. காது கேட்டறிகிறது. மனம் ஐயுறுகிறது. புத்தி நிச்சயிக்கிறது. இவ்வாறு தத்துவங்களே அறிவனவாய் இருத்தலால் அவற்றையே உயிர் என்று கொள்ளலாமோ என்னும் ஐயம் தோன்றலாம். அவ்ஜயத்தை நீக்கித் தத்துவங்கள் ஆன்மா அல்ல என்றும், அத்தத்துவங்களோடு ஒற்றுமைப்பட்டு நின்று அறிந்து வருகிற ஆன்மா

என்ற தனிப் பொருள் உண்டு என்றும் வலியுறுத்துதற்கு எழுந்தவை இச்செய்யுளும் அடுத்த செய்யுளுமாகும்.

**25. தத்துவங்கள் ஆறாறும் தம்மைத்தாம் என்று அறியா**

**எத்தன்மை என்னில் இயம்பக்கேள் சுத்தமாம்**

**ஆறு சுவையும் அறியாவே தம்மைத்தாம்**

**கூறில் அவை இவை போல் கொள்**

**பதவுரை**

**தத்துவங்கள் ஆறு ஆறும்** தத்துவங்கள் முப்பத்தாறும்

**தம்மைத்தாம் என்று அறியா** தம்மியல்பைத் தாம் அறியமாட்டா. அஃதாவது, கண் தன்னை நோக்கி நான் கண்; நான் பார்க்கிறேன் என்று தன்னை அறியமாட்டாது. பிற கருவிகளும் அவ்வாறேயாம்.

**எத்தன்மை என்னில்** தத்துவங்கள் தம்மை அறியாத தன்மை எது போன்றது என்றால்

**இயம்பக் கேள்** ஓர் எடுத்துக்காட்டுக் கூறுவோம். கேட்பாயாக.

**சுத்தமாம் ஆறு சுவையும்** இனிப்பு, கைப்பு முதலிய ஆறு சுவையையுடைய பொருள்கள்

**தம்மைத் தாம் அறியா** யான் இனிப்பாக இருக்கிறேன், யான் கைப்பாக இருக்கிறேன் என்றாற் போலத் தம்மை நோக்கித் தம் இயல்பை அறியா.

**கூறில்** சொல்வதாயின்

**அவை இவை போல் கொள்** இவை போன்றனவே அத்தத்துவங்களும் என உணர்ந்து கொள்.

## பொழிப்புரை

தத்துவங்கள் ஆகிய கருவிகள் அறிவுள்ளனவாகத் தோன்றினாலும் தம்மியல்பைத் தாம் அறிய மாட்டா. நான் அறிகிறேன் என்ற தன்னை நோக்கிய அறிவு அவற்றிற்கு இல்லை. கண் காணும் ஆனால் நான் காண்கிறேன் என்று அது தன்னை நோக்கி அறியாது. பிற கருவிகளும் இவ்வாறே. தன்னை நோக்கி அறியாத தன்மைக்கு ஓர் எடுத்துக்காட்டுக் கூறுவோம். கேள்.

உண்ணும் உணவில் இனிப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கைப்பு, கார்ப்பு என அறுவகையான சுவைகள் உண்டு. உணவு தன்னிடமுள்ள இச்சுவைகளைத் தான் அறியாது. உணவிலே சில சமயம் உப்புக் கூடிவிடும். அப்போது அந்த உணவு நான் உப்பாக இருக்கிறேன் என்று தன்னை நோக்கி அறியாது. அதுபோலத் தத்துவங்களும் தம்மைத்தாம் அறியா.

## விளக்கம்

எது தன்னை நோக்கித் தன்னியல்பையும் அறியக் கூடியதாக உள்ளதோ அதுவே ஆன்மாவாக இருக்க முடியும். தத்துவங்கள் தம்மை நோக்கித் தாம் என்று அறியாத இயல்பினவாகும். ஆதலால் அவை ஆன்மா அல்ல என்பது தெளிவாகும்.

## தத்துவங்களை அறிவது உயிர்

**26. ஆறு சுவையும் அருந்தி அவைதம்மை**

**வேறுஒருவன் கூறியிடும் மேன்மைபோல் ஆறாறும்**

**ஒன்றுஒன்றா நாடி உணர்ந்து ஓதில் அதில் உற்று அறிவாய்**

**நின்ற பொருள் தானே காண் நீ**

## பதவுரை

| | |
|---|---|
| **ஆறு சுவையும்** | ஆறு சுவையுடைய பொருள்களை |
| **வேறொருவன்** | அவற்றுக்கு வேறாக உள்ள ஒருவன் |
| **அருந்தி** | சுவைத்து |

**அவை தம்மை** அச் சுவைகளை

**கூறியிடும்** இஃது இன்ன சுவை, இஃது இன்ன சுவை என்று அறிந்து கூறுகிற

**மேன்மை போல்** தன்மை போல

**ஆறு ஆறும்** தத்துவங்கள் முப்பத்தாறின் இயல்பையும்

**ஒன்று ஒன்றா** (யாம் காட்ட) ஒவ்வொன்றாக

**நாடி உணர்ந்து** கண்டு உணர்ந்து, இவை கண்டேன் எனத் தன்னை நோக்கி உணர்ந்தும்,

**அதில் உற்று** அத்தத்துவக் கூட்டத்தில் பொருந்தி அத்தத்துவங்களோடு ஒற்றுமைப் பட்டு நின்று

**அறிவாய் நின்ற பொருள்தான்** அவற்றால் அறிவு விளங்கியும் வரும் அறிவுப் பொருள்தான்

**நீ** உயிராகிய நீ என

**காண்** உன்னை உள்நோக்கி உணர்ந்து கொள்

**பொழிப்புரை**

உணவு தன் சுவையைத் தான் அறியாது. உணவை நுகர்கின்ற வேறு ஒருவனே அதன் சுவையை அறிந்து கூறுகின்றான். உணவிலே காரம் சற்றுக் கூடிவிட்டது என்றோ, உப்புச் சிறிது குறைவாக உள்ளது என்றோ அறிந்து பிறருக்கும் கூறுகின்றான். யான் சுவைத்துப் பார்த்தேன் என்று தன்னை நோக்கியும் உணர்ந்து கூறுகின்றான்.

அதுபோல முப்பத்தாறு தத்துவங்களும் தம் இயல்பைத் தாம் அறியமாட்டா. அவற்றிற்கு வேறாக இருக்கின்ற அறிவுப் பொருளாகிய நீயே அத்தத்துவங்கள் ஒவ்வொன்றின் இயல்பையும் (கண் காணும், செவி கேட்கும், மனம் பற்றும், புத்தி நிச்சயிக்கும் என்று இவ்வாறு) தனித் தனியாகக் கண்டு உணர்ந்து சொல்லுகின்றாய். இவை கண்டேன் என்ற தன்னோக்கு உணர்வும் நீ உடையாய். இவ்வாறு உன்னை உள்நோக்கி உணர்ந்துகொள்.

## விளக்கம்

இவ்விரண்டு செய்யுட்களாலும் உயிரின் இயல்பைத் தத்துவங்களினின்றும் வேறு பிரித்து உணர்த்தினார் ஆசிரியர்.

## பதி

## இறைவன் வேறாய் நிற்றல்

**27. குன்றா அருளாலே கூறினீர் என்வடிவு**
**பொன்றாத நும் உருவம் போதியீர் நின்று அருக்கன்**
**கண்ணுக்குக் காட்டுமாப் போலே உனது அறிவில்**
**நண்ணிஅறி வித்திடுவோம் நாம்**

## பதவுரை

**குன்றா அருளாலே** குறைவுபடாத அருள்கொண்டு

**என் வடிவு** ஆன்ம இயல்பை

**கூறினீர்** அடியேனுக்கு உணர்த்தினீர்.

**பொன்றாத** இனி, அழிவில்லாத

**நும் உருவம்** உமது (இறைவனது) இயல்பை

**போதியீர்** உணர்த்தியருள்க.

(இங்ஙனம் மாணாக்கர் வேண்ட, ஆசிரியர் பின்வருமாறு கூறுகிறார்.)

**அருக்கன்** சூரியன்

**நின்று** (தன் ஒளியால் கண்ணிற் கலந்து) கண்ணுக்கு வேறாக நின்று

**கண்ணுக்கு** அக்கண் பொருள்களை அறியும் படி

**காட்டுமாப் போல்** விளக்கிக் காட்டுவது போல

**நாம்** யாம்

**உனது அறிவில்** உன்னறிவில்

**நண்ணி** பொருந்தி (வேறாய் நின்று)

**அறிவித்திடுவோம்** நீ பிற பொருள்களை அறியும்படி செய்து வருவோம்.

## பொழிப்புரை

பேரருளாலே என் உண்மையியல்பை எளியேன் அறியும்படி உணர்த்தினீர்கள். இனி, அழிவில்லாத தூய அறிவு வடிவாய் விளங்கும் நும் இயல்பை அடியேன் தெளியும்படி உணர்த்தியருள்க என்று மாணாக்கர் வேண்டுகிறார். ஆசிரியர் பின்வருமாறு உணர்த்துகிறார். சூரியவொளி கண்ணொளியோடு கலந்து வேறாய் நின்று அக்கண்ணொளியை விளக்கிப் பொருள்களைக் காணும்படி செய்கிறது. அதுபோல யாம் உன் அறிவில் பொருந்தி, வேறாய் நின்று, நீ பொருள்களை அறிந்து வரும்படி செய்து வருகின்றோம் என்பதை உணர்வாயாக.

## விளக்கம்

### கண்ணொளியின் தன்மை

கண்ணொளி தானே தனித்து நின்று பொருள்களைக் காணமாட்டாது. தனியே காணவல்லதாயின் இருட்டில் இருக்கும் பொழுதும் அது பொருளைக் காணுதல் வேண்டும். அது கூடாமையால் கண்ணொளி தானே காணமாட்டாது என்பது விளங்கும். வேறோர் ஒளியின் துணையைப் பெற்றே கண்ணொளி காணும் நிலைமையைப் பெறும்.

### சூரியவொளி வேறாய் இருந்து காட்டுதல்

பகலில் கண்ணுக்குத் துணை செய்வது சூரியவொளி அது கண்ணொளியோடு பொருந்தி நின்று பொருளைக் காணும்படி செய்கிறது. இதனால், பொருளைக் காணும் காட்சியில் கண்ணொளியும் சூரியவொளியும் என்ற இரண்டு ஒளிகளும் தம்முள் கலந்துள்ளன என்பது புலனாகும். அவ்வாறு கலந்தாலும் அவை ஒன்றாய்ப் போய் விடுவதில்லை. கண்ணொளி கண்ணொளியாகவே நிற்கும். சூரியவொளி சூரியவொளியாகவே நிற்கும். எனவே கண்ணொளியோடு கலந்திருந்தாலும் சூரியவொளி வேறாக இருந்து காட்டக் கண்ணொளி பொருளைக் காணுவதாகும்.

## கண் போல இருப்பது உயிர்

இதுவரை கூறியது உவமை. இதனைப் பொருளோடு பொருத்திப் பார்ப்போம் உயிர் எதனையும் தானே அறியமாட்டாது. இறைவன் தன்னோடு இயைந்து நின்று அறிவிக்கவே அது அறிவதாகும் இவ்வகையில் சூரியனைப் போன்றவன் இறைவன். கண்ணைப் போன்று உள்ளது உயிர்.

## இறைவன் வேறாய் நின்று உணர்த்தி வருதல்

இறைவன் உயிரில் இரண்டறக் கலந்திருக்கின்றான். இறைவனும் உயிரும் சேர்ந்துள்ள அக்கலப்பு நிலை பிரித்தறிய வாராது. அவ்வாறு பிரிப்பின்றிக் கலந்திருந்தாலும், ஒன்று மற்றொன்றாகி விடுவதில்லை. உயிர் உயிர்தான். இறைவன் இறைவன் தான். எனவே உயிரோடு கலந்து பொருந்தியிருந்தாலும் இறைவன் வேறாக இருந்து அறிவிக்க, உயிர் எப்பொருளையும் அறிவதாகும்.

இறைவன் உயிர்க்கு வேறாகியும், கலந்து நின்றும் உணர்த்தி வருகிறான் என்பது இச்செய்யுளில் கூறப்பட்டது.

ஞானாசிரியர் இறைவனே யாதலின், அவர் வாக்காகிய நாம் என்பது இறைவனைக் குறித்ததாயிற்று. அடுத்து வரும் இரண்டு செய்யுட்களிலும் இவ்வாறே கொள்ள வேண்டும்.

## இறைவன் ஒன்றாய் நிற்றல்

**28. அன்றியும்கேள் ஆன்மாவால் ஆய்ந்துஅறியும் ஐம்பொறிகள்**

**இன்றி அறியா இவைஎன்ன நின்றதுபோல்**

**ஓவாமல் உன்னை உணர்த்துவோம் உன்அறிவில்**

**மேவாமல் மேவி நாமே,**

### பதவுரை

| | |
|---|---|
| **அன்றியும் கேள்** | மேலும் கூறுவோம். கேட்பாயாக. |
| **ஆன்மாவால்** | ஆன்மாவின் உதவியினாலேயே |

**ஐம்பொறிகள்** அறிவுப் பொறிகளாகிய மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐந்தும்

**ஆய்ந்து அறியும்** தத்தம் புலன்களை அறிவனவாம்.

**இன்றி** ஆன்மாவின் துணையில்லாமல்

**அறியா** அவை தாமே அறியமாட்டா.

**இவையென்ன நின்றது போல்** ஆன்மா இப்பொறிகளை இடங்கொண்டு பிரிப்பின்றிக் கலந்திருந்து அவை புலன்களை அறியுமாறு செய்தும், தான் காணப்படாமல் அவ்வப் பொறியாகவே நின்றதுபோல

**நாம்** யாமும் (இறைவனும்)

**உன் அறிவில்** உனது அறிவினுள்

**மேவாமல் மேவி** பொருந்தாமல் பொருந்தி (நீயாகவே நின்று)

**ஓவாமல்** இடையறாமல்

**உன்னை உணர்த்துவோம்** உன்னறிவை விளக்கி வருவோம்.

**பொழிப்புரை**

இன்னும் கூறுவோம், கேள், மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகள் உயிரின் துணையினாலேயே தம் தம் புலன்களை அறிகின்றன. அவை புலன்களை அறிவதற்கு உயிர் அவற்றில் பொருந்தி அவையேயாய் ஒன்றுபட்டு நிற்கவேண்டும். அவ்வாறு உயிர் அப்பொறிகளோடு ஒற்றுமைப்பட்டு நிற்கவில்லை என்றால் அப்பொறிகள் ஏதொன்றையும் அறியமாட்டா. இங்ஙனம் ஐம்பொறிகள் அறிவதற்கு உயிர் அப்பொறிகளை இடங்கொண்டு அப்பொறிகளேயாய் நிற்றல் போல, யாம் உனது அறிவினுள் பொருந்தாமல் பொருந்தி, நீயேயாய் நின்று உன்னை உணரும்படி செய்துவருவோம்.

## விளக்கம்

### ஐம்பொறிகள் உயிருக்கு உவமையாதல்

ஐம்பொறிகள் தாமாக அறியா. இது எப்படித் தெரிகிறது? உயிர் நீங்கிய உடம்பில் கண், காது முதலிய பொறிகள் கெடாமல் நல்ல நிலையில் இருந்தாலும் அவை அறிதலாகிய தொழிலைச் செய்வதில்லை. அவை தாமே அறியா என்பதும், உயிர் தம்மோடு பொருந்தி நின்றபோதே அவை அறியும் என்பதும் இதனால் விளங்கும். அந்த ஐம்பொறிகளின் நிலையில்தான் உயிரும் உள்ளது. உயிரும் தானாக அறிவதில்லை. உயிருக்கு உயிராக இறைவன் பொருந்தி நின்று அறிவிக்கும்போதே உயிர் யாதொன்றையும் அறியும் வன்மையைப் பெறுகிறது. எவ்வாறு ஐம்பொறிகள் உயிரால் அறிகின்றனவோ, அவ்வாறே உயிரும் இறைவனால் அறிகின்றது. இவ்வகையில் ஐம்பொறிகள் உயிருக்கு உவமையாகின்றன.

### மேவாமல் மேவுதல்

ஒரு பொருள் தன் தன்மையைச் சிறிதும் இழக்காமல் மற்றொரு பொருளோடு பொருந்தி ஒன்றுபட்டு அப்பொருளேயாய் நிற்றலே மேவாமல் மேவுதலாகும். இறைவன் உயிரோடு பொருந்தித் தான் சிறிதும் தோன்றாமல் உயிர் ஒன்றே உள்ளது என்று சொல்லும் படியாக அதனோடு ஒற்றுமைப்பட்டு நிற்கின்றான். அவ்வாறு நின்றாலும் அவன் தன்னியல்பில் சிறிதும் மாறுவதில்லை. எதிலும் தோயாமல் நிற்பவன் அவன். இந்நிலையே மேவாமல் மேவுதல் என்பது.

உயிரின் நிலையோ இதனின் வேறுபட்டது. உயிரறிவு எப்பொருளைப் பொருந்தினாலும் அப்பொருளின் தன்மையைப் பெற்று அதன் வண்ணமாய்த்திரிந்து நிற்கும். இதுபற்றிய விளக்கத்தை முன்னே கூறியிருக்கிறோம் (செய்யுள் 24)

இறைவன் உயிரில் பொருந்தி, உயிரேயாய் நின்று உணர்த்தி வருகிறான் என்பது இச்செய்யுளில் கூறப்பட்டது.

## இறைவன் உடனாய் நிற்றல்

**29. அக்கரங்கட்கு எல்லாம் அகரஉயிர் நின்றாற்போல்**

**மிக்க உயிர்க்கு உயிராய் மேவினோம் எக்கண்ணும்**

**நில்லா இடத்து உயிர்க்கு நில்லாது அறிவுஎன்று**

**நல்ஆகமம் ஓதும் நாடு**

### பதவுரை

| | |
|---|---|
| **அக்கரங்கட்கு எல்லாம்** | எல்லா எழுத்துக்களிலும் |
| **அகர உயிர்** | அ என்னும் உயிரெழுத்து |
| **நின்றாற் போல்** | இயைந்து அவற்றை இயக்கி நின்றாற் போல |
| **மிக்க உயிர்க்கு** | எண்ணற்ற உயிர்களிடத்தில் |
| **உயிராய்** | இயைந்து அவற்றை இயக்கும் உயிராய் |
| **மேவினோம்** | யாம் பொருந்தியுள்ளோம். |
| **எக்கண்ணும்** | எவ்விடத்தும் |
| **நில்லா விடத்து** | யாம் உடன் நின்று அறிவிக்காத போது |
| **உயிர்க்கு** | அவ்வுயிர்களுக்கு |
| **நில்லாது அறிவு என்று** | அறிவு விளங்காது என்று |
| **நல் ஆகமம்** | குற்றமற்ற சிவாகமங்கள் |
| **ஓதும்** | கூறும். |
| **நாடு** | இதனை நீ சிந்திப்பாயாக. |

### பொழிப்புரை

அகரம் ஆகிய உயிர் ஏனைய எழுத்துக்கள் எல்லாவற்றிலும் கலந்து உடனாய் நின்று அவற்றை இயக்கும். அதுபோல யாமும் எல்லா

உயிர்களிடத்தும் உயிர்க்குயிராய் உடனிருந்து அவற்றை இயக்குவோம். அவ்வாறு யாம் எல்லா இடத்தும் நிறைந்து நின்று அறிவித்தாலன்றி உயிர்களுக்கு அறிவு நிகழாது என்று ஆகமங்கள் கூறும். அதனை ஆராய்ந்து அறிக.

## விளக்கம்

### அகர உயிரின் முதன்மை

ஒலிக்கும் முயற்சிகளுள் முதல் முயற்சி வாயைத் திறத்தல். அந்த முதல் முயற்சியிலேயே வாயைத்திறந்த அளவிலேயே உண்டாவது அ என்னும் ஒலி. மற்றைய ஒலிகள் வாயைத் திறப்பதோடு வேறு சில முயற்சிகளும் செய்யப் பிறப்பவையாகும். வாயைத் திறத்தல் ஆகிய அம்முதல் முயற்சியின்றிப் பிற முயற்சிகள் நிகழா என்பது தெளிவு. அம்முதல் முயற்சியோடு கூடியே பிற முயற்சிகள் நிகழ்கின்றன. எனவே முதல் முயற்சியில் பிறப்பதாகிய அகர வொலியோடு கூடியே பிற முயற்சிகளில் பிறப்பனவாகிய மற்றைய ஒலிகள் எழுகின்றன என்பதும், அகரவொலியின்றிப் பிற எழுத்தொலிகள் இல்லை என்பதும் புலனாகும் எனவே எழுத்துக்களுக்கெல்லாம் அடி நிலையாய் இருப்பது அகர வுயிரேயாகும். அதுபோல இறைவனே எப்பொருளின் இயக்கத்திற்கும் முதலாய் நிற்கின்றான்.

### அகர உயிரும் நிகரில் இறையும்

எழுத்துக்கள் உயிரெழுத்தும், மெய்யெழுத்தும் என இருவகைப்படும். அவ்விரு வகை எழுத்துக்களிலும் அகரவுயிர் கலந்திருக்கிறது.

உலகம் சித்தும் சடமும் என இருவகைப்படும். சித்து என்பது அறிவுடைய உயிர்களின் தொகுதியைக் குறிக்கும். சடம் என்பது அறிவற்ற பொருள்களின் தொகுதியைக் குறிக்கும். இவ்விரண்டும் சேர்ந்ததே உலகம். சித்தும் சடமும் ஆகிய இவ்விரண்டிலும் இறைவன் கலந்து உடனிருக்கின்றான்.

எழுத்துக்களின் இயக்கத்திற்கு அகர வுயிர் இன்றியமையாதது. அதுபோலச் சித்தும் சடமுமாகிய உலகத்தின் இயக்கத்திற்கு இறைவன் இன்றியமையாதவன். இறைவன் சித்தாகிய உயிர்களோடு உடனாய் நின்று

அவற்றின் அறிவை விளங்கச் செய்கின்றான் என்பது இச்செய்யுளில் கூறப்பட்டது.

## நாதன் நடம்

இனி, இறைவன் இயற்றும் நடனத்தின் இயல்பு யாது? என்ற வினாவுக்கு விடை கூறுகின்றார் ஆசிரியர். அவ் விடையைத் தெரிந்து கொள்வதற்கு முன், நாதன் நடனம் பற்றிய சில செய்திகளைத் தெரிந்து கொள்வோம்.

## இறைவனது அசைவு கூத்து எனப்படுதல்

எப்பொருளின் இயக்கத்திற்கும் அடிநிலையாய் இருப்பவன் இறைவன் என்பதனை முந்திய பகுதியால் அறிந்தோம். அவனன்றி ஓரணுவும் அசையாது என்ற பழமொழி இதனையே உணர்த்தி நிற்கிறது. அவன் அசையவில்லையாயின் எதுவும் அசையாது என்பது கருத்து. இதனையே உடன்பாட்டு வகையில், அனைத்தும் அசைய வேண்டி அவன் அசைகின்றான் என்று கூறலாம். அவனது அசைவையே ஆடல் என்றும், கூத்து என்றும் உயர்ந்தோர் குறிப்பிட்டனர்.

## இறைவனது செயல்கள் விளையாட்டு எனப்படுதல்

அனைத்தையும் அசைவிக்கும் அவனது செயலை விளையாட்டு என்று நூல்கள் கூறும். காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடி என்று திருவாசகத்தில் வருதல் காணலாம். விளையாட்டு என்பது எளிதிற் செய்யும் வலிமையைக் குறிப்பது. அண்ட கோடிகளையெல்லாம் அவன் தனது நினைப்பு மாத்திரத்தால் இயக்கி வருகிறான் என்றால் அவனது ஆற்றலை என்னென்பது! அச்செயல்களை அவன் அத்துணை எளிதிற் செய்தலின் அவன் செயல்களை விளையாட்டு என்று குறிப்பிடுவது மரபாயிற்று. விளையாட்டே கூத்து என்றும் நடனம் என்றும் சொல்லப்படுகிறது.

## சிவனது திருக்கூத்தே அனைத்து இயக்கத்திற்கும் காரணம்

அவனது திருக்கூத்தினாலேயே அனைத்துப் பொருள்களும் நிலைத்துத் தத்தம் இயல்பிற்கேற்பச் செயற்படுகின்றன. அவை இயங்குங்கால் அவனது கூத்தும் அவற்றோடு உடனாய் இயங்கி நிகழ்கிறது. இதனால் சிவனது திருக்கூத்தே உலகத்தின் செயற்பாடு எல்லாவற்றிற்கும் காரணம் என்பது விளங்கும்.

## திருக்கூத்து நிகழும் இரண்டு இடங்கள்

இறைவன் எங்கும் அருவாய் நின்று ஆடுகின்றான். எல்லா இடங்களும் அவன் நடம் புரியும் இடமேயாயினும் அவற்றுள் இரண்டு இடங்களைச் சிறந்தனவாக எடுத்துக் கூறுவர். ஒன்று உயிர்களின் அறிவும், மற்றொன்று தில்லைச் சிற்றம்பலமும் ஆகும்.

**தில்லை மூதூர் ஆடிய திருவடி**
**பல்லுயி ரெல்லாம் பயின்றன னாகி**
என்று திருவாசகம் இவ்விரண்டிடங்களையும் குறிப்பிடும்.

உயிர்களின் அறிவில் நின்று அவன் இடைவிடாது உணர்த்தி வருகின்றான். அச்செயல் அதிசூக்கும ஐந்தொழில் எனப்படும். அதனைப் பரநடனம் எனக் குறிப்பிடுவர். புருவ நடுவில் நிகழ்வதாகிய இந்நடனம் இல்லையேல் உயிர்களுக்கு அறிவு விளங்குதல் இல்லை.

ஒருநாமம், ஓருருவம், ஒன்றும் இல்லாத இறைவன் நம்மனோரும் எளிதிற் கண்டு உய்யும்படி தில்லையில் உருவும், பெயரும், தொழிலும் கொண்டு ஆடுகின்றான். உயிர்கட்குப் பிறப்பு, வீடு என்னும் இரு நிலைகளையும் தருதற்காக ஆடுகின்றான்.

## நாளும் நினைக்கவேண்டுவது நாதன் நடனம்

இறைவன் எண்ணற்ற உயிர்களிடத்து என்றும் உடனாய் நீங்காது நின்று அவைகளுக்கு வேண்டும் எல்லா நலங்களையும் எப்போதும் புரிந்து வருகிறான். அவன் ஆணவத்தில் அழுந்திக் கிடந்த உயிர்களை அக்கேவல நிலையிலிருந்து எடுத்துச் சகல நிலையிற் கொண்டுவந்த அருட்செயலையும், அச்சகல நிலையில் உயிர்கள் பல வகைப் பிறப்புக்களைக் கடந்து மனிதப் பிறப்பை அடையும்படி செய்கின்ற அவனது பேருதவியையும், உயிர்கள் உலகிற் பிறந்தும் இறந்தும் உழன்று படிப்படியாகப் பக்குவ முதிர்ச்சி பெற்ற காலத்தில் குருவாய் வந்து தத்துவங்களின் இயல்புகள் தன்னியல்பு ஆகிய எல்லாவற்றையும் விளங்கக் காட்டி அம்மெய்யுணர்வின் பயனாகப்பாசநீக்கம் வருவித்து அவ்வுயிர்களைத் தானாகச் செய்து தன்னொடு சேர்த்துக் கொண்டு பேரின்பம் அளித்து வரும் பெருங்கருணையையும் பலபடியாக எடுத்துக் கூறிப்போற்றுகின்றன நமது திருமுறைகளும் சாத்திரங்களும்.

இறைவன் இவ்வாறு செய்து வரும் எண்ணிறந்த அருட்செயல்கள் யாவும் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தில் அடங்குவனவாகும். அவ் வைந்தொழில்களையும் நாம் உணரும்படி காட்டி நிற்கும் திருக்கோலம் கூத்தப் பெருமான் திருவடிவமே.

ஒருவராலும் அறியப்படாத சிவ முதற்பொருள் தானே தனது கருணையினால் அனைவரும் எளிதாகத் தன்னைக் காணும்படி நடனவுருக்கொண்டு அம்பலத்தில் தோன்றி நிற்கின்ற தன்மையை வியந்து,

**ஆயும் நுண்பொரு ளாகியும் வெளியே**
**அம்பலத் துள்நின்று ஆடுவார்**
என்றார் சேக்கிழர் பெருமான். மேலும் அவர், கற்பனை கடந்த சோதியாகிய அது கருணையே உருவமாகி, அற்புதக் கோலம் நீடி, திருச்சிற்றம்பலத்துள் நின்று பொற்புடன் நடஞ் செய்கின்றது என்றும் போற்றினார்.

இந்நடனத்தை எண்ணிப் பார்க்குங்கால் அறிவுடையோர்க்கு உள்ளம் உருகாமல் இருக்குமோ? கைம்மாறு கருதாத கருணை காரணமாக இறைவன் இடையறாது நிகழ்த்தி வரும் இந்நடனத்தை ஒருபோதும் மறவாது நினைந்து அவனை உளம் உருகிப் போற்றுவதைத் தவிர உயிர்களாகிய நாம் அவனுக்குச் செய்யக்கூடியது வேறு ஒன்றும் இல்லை. அவனது நடனத்தை ஒருபோதும் மறவாது நினைவதையே கடமையாகக் கொள்ளுதல் வேண்டும் என்பதை,

**கொன்றையம் முடியினாய்**
**கூடல் ஆல வாயிலாய்**
**நின்றயங்கி ஆடலே**
**நினைப்பதே நியமமே**
என்று திருஞான சம்பந்தரும்,

**அனைத்து வேடமாம் அம்பலக் கூத்தனைத்**
**தினைத்தனைப் பொழுதும் மறந்து உய்வனோ**
என்று திருநாவுக்கரசரும் அருளியுள்ள திருவாக்குகளால் அறியலாம்.

## இறைவன் கொள்ளும் அருள்திருமேனி

இறைவன் கொள்ளுகின்ற உருவத்தைப் பற்றி நாம் அறிந்து கொள்ளுதல் வேண்டும். அது மாயையினால் ஆனதன்று. உயிர்களாகிய நாமெல்லாம் மலம் உடையவர் ஆதலின் மலங்களில் ஒன்றாகிய மாயை நமக்கு உடம்பாக வந்து பொருந்துகிறது. இறைவன் மலம் இல்லாதவன் ஆதலின் மாயை அவனுக்கு உருவமாய் அமைதல் இல்லை. தூயதாகிய அவனது அறிவே அவனுக்கு உருவமாய் அமையும்.

அறிவின் இயல்பாவது பிறர் நிலைக்கு இரங்குதல்; கருணை கொள்ளுதல், அருளுதல், இறைவனது அறிவு பெருங் கருணையாயும், பேரருளாயும் நிற்கும். அது பற்றியே அவனது அறிவை அருள் என்றும், கருணை என்றும் குறிப்பர் பெரியோர்.

இறைவன் தனது அறிவினால் கொள்ளுகிற உருவம் எல்லாம் அருள் திருமேனி எனப்படுகிறது. அவனது திருமேனி அருள். ஆதலினால் அத்திருமேனியிற் காணப்படும் ஆடை, அணிகலம், படைக்கலம் முதலியனவும் அருளேயாம்; அவன் காட்சி தந்து நிற்கின்ற இடமும் அருளேயாம். இறைவனது உடம்பு அங்கம் எனப்படும். திருவடி, திருக்கரம் முதலிய உறுப்புக்கள் பிரத்தியங்கம் எனப்படும். அங்கத்துடன் கூடியுள்ள சூலம், மழு, பாம்பு, அபய முத்திரை, நெருப்பு முதலியவை சாங்கம் எனப்படும். அங்கத்தின் சார்பிலிருக்கும் ஆடை, அணிகலம், மாலை. அமரும் இருக்கை முதலியவை உபாங்கம் எனப்படும். அங்கம், பிரத்தியங்கம், சாங்கம், உபாங்கம் ஆகிய இந்நான்கும் அருளேயாம்.

இறைவனது திருமேனி உருவம், அருவம், அருவுருவம் என மூன்று வகைப்படும். அத்திருமேனிகள் அருளேயாய் நிற்க, இறைவன் அத்திருமேனிகளில் நின்று ஆடுதலை மேற்கொண்டுள்ளான்.

## மந்திரத்தைத் திருமேனியாகக் கொள்ளுதல்

இனி, இறைவனுக்கு மந்திரம் சிறப்புத் திருமேனியாகச் சொல்லப்படுகின்றது. இதுபற்றிச் சிறிது சொல்ல வேண்டும். இறைவன் அனைத்து உலகங்களிலும் கலந்து அவையேயாய் நிற்கின்றான். உயிர் உடலெங்கும் கலந்து தான் சிறிதுந் தோன்றாமல் உடலேயாய் நிற்பது போன்றது இது. அவ்வாறு கலந்திருக்கும் உயிருக்கு உடம்பு வடிவமாய்

அமைகிறது. அதுபோல எல்லாவற்றிலும் கலந்திருக்கும் இறைவனுக்கு அவையனைத்துமே வடிவமாய் அமைகின்றன.

எனவே எல்லாப் பொருள்களுமே இறைவனுக்குத் திருமேனிகள்தாம் என்று சொல்லலாம். ஆயினும் அவற்றுள்ளும் மந்திரங்கள் அவனுக்குச் சிறப்புத் திருமேனியாய் நிற்கின்றன. எவ்வாறெனில், சொற்களும் சொற்றொடர்களும் ஆகிய மந்திரங்கள் சுத்த மாயையில் தோன்றியவை. இறைவன் சுத்த மாயையை இடமாகக் கொண்டு நின்றே அசுத்த மாயையின் காரியமாய் உள்ள பொருள்களையெல்லாம் இயக்கி நிற்பான் என்பது நாமறிந்தது. இம்முறையில் அவன் மந்திரங்களைத் தனக்கு நேரே இடமாகக் கொண்டு அவற்றின் வாயிலாகத் தவத்தோர்க்குப் புத்தி, முத்திகளாகிய பயன்களைத் தருவான். இறைவனுக்கு மந்திரங்கள் சிறந்த வாயில் ஆதலாலும், இறைவன் அவற்றைப் பற்றி அவையேயாய் நிற்பன் ஆதலாலும், அம்மந்திரங்கள் அவனுக்குச் சிறப்புத் திருமேனிகளாய்ச் சொல்லப்படுகின்றன. கல், மண், பொன் முதலிய பொருள்களும் இறைவன் அவற்றில் கலந்துள்ள கலப்பினால் அவனுக்கு வடிவமேயாயினும், மந்திர வடிவம் அவற்றினும் சிறந்தது என்பது உணர்தற்குரியது.

மந்திரங்களுள் தலையாயது ஐந்தெழுத்து மந்திரமாகும். அதுவே ஞானத்தைத் தருவது. கூத்தப்பெருமான் திருவைந்தெழுத்தைத் தனது திருவுருவமாகக் கொண்டு ஆடல் புரியும் அருட்பெருமையை ஆசிரியர் இப்பகுதியில் விளங்கக் காட்டியுள்ளார்.

### இறைவன் புரியும் ஆடலின் இயல்பைக் கூற வேண்டுதல்

**30. நற்றவத்தோர் தாம்காண நாதாந்தத்து அஞ்செழுத்தால்**

**உற்று உருவாய் நின்று ஆடல் உள்ளபடி பெற்றிடநான்**

**விண்ணார் பொழில்வெண்ணை மெய்கண்ட நாதனே!**

**தண்ணார் அருளாலே சாற்று**

### பதவுரை

**விண் ஆர் பொழில்** வானை அளாவி எழுந்த சோலைகள் சூழ்ந்த

**வெண்ணை** திருவெண்ணெய் நல்லூரில் எழுந்தருளியுள்ள

| | |
|---|---|
| **மெய்கண்ட நாதனே** | மெய்கண்ட தேவரே, |
| **நல் தவத்தோர்** | நல்ல தவத்தைச் செய்தவர்கள் |
| **காண** | காணும்படி |
| **நாத அந்தத்து** | நாதத்தின் முடிவில் |
| **அஞ்செழுத்தால்** | திருவைந்தெழுத்தால் |
| **உற்ற உருவாய்** | நின்று திருவுருக்கொண்டு |
| **ஆடல்** | முதல்வன் செய்யும் திருக்கூத்தின் இயல்பை |
| **உள்ளபடி நான் பெற்றிட** | உள்ளவாறு அறிந்து அடியேன் நன்மை எய்தும்படியாக |
| **தண்ணார் அருளால்** | குளிர்ந்த அருளால் |
| **சாற்று** | சொல்லியருள வேண்டும் |

## பொழிப்புரை

நல்ல தவம் செய்தவர் காணும்படி நாதத்தின் முடிவில் திருவைந்தெழுத்தால் திருவுருக் கொண்டு சிவபெருமான் திருக்கூத்தினை இயற்றுவன். திருவெண்ணெய்நல்லூரில் எழுந்தருளியுள்ள மெய்கண்ட நாதரே, அத் திருக்கூத்தின் இயல்பை அடியேன் உள்ளவாறு அறியும் வகையில் அதனை விளக்கியருள வேண்டும் என மாணவர் வேண்டுகிறார்.

## விளக்கம்

### நாதாந்த நடனம்

தத்துவங்களில் இறுதியாக, எல்லாவற்றிற்கும் மேலே உள்ளதாகச் சொல்லப்படுவது நாதம் ஆகும். அதனையும் கடந்தால்தான் முப்பத்தாறு தத்துவங்களையும் கடந்ததாகும். தத்துவங்களைக் கடத்தலாவது ஆன்மா அவற்றைத் தனக்கு வேறாகக் கண்டு நீங்குதல்.

நிலம் முதல் நாதம் ஈறாகிய தத்துவம் முப்பத்தாறனையும் கடந்த நிலையில் அவை நீங்கிய நிலையில் ஆன்மா தான் அவற்றின் வேறாய் இருத்தலை உணரும்.

ஆணவத்திற்கு மாற்றாகவே மாயையிலிருந்து தத்துவங்கள் இறைவனால் கூட்டப்பட்டன. ஆதலால் அவை நீங்கிய இடத்து ஆணவம் நிற்றல் இயல்பாகும். ஒளிக்கும் இருளுக்கும் ஒன்றே இடம். ஒன்று மேலிடின் ஒன்று ஒளிக்கும் என்று கூறியுள்ளபடி, பக்குவம் இல்லாத பொழுது சிவம் மறைந்திருக்க ஆணவ இருள் மேலிட்டிருந்தது. பக்குவம் வந்துற்ற இப்பொழுது ஆணவம் மேலிட மாட்டாமல் இருக்க, சிவமே மேலிடும். சிவம் மேலிட்டபோது ஆன்மா அதனைச் சார்ந்து, தான் வேறு தோன்றாது அதனோடு ஒன்றிவிடும் கதிரொளியில் விளக்கொளி போல உயிருணர்வு சிவத்தில் அடங்கி நிற்கும். அவ்விடத்தில் ஆன்மா பேரா இன்பப் பெருவெள்ளத்தில் அழுந்தும். அவ்வாறு நாதாந்தத்தில் ஆனந்த வாரிதியின் ஆன்மாவை அழுத்தும் குறிப்புடையது கூத்தப் பெருமான் செய்யும் திருக்கூத்து. அத்திருக்கூத்தின் இயல்பை விளக்கியருளும்படி மாணவர் வேண்டுகிறார்.

## திருநடனம் செய்யும் இடம்

**31. எட்டும் இரண்டும் உருவான லிங்கத்தே**

**நட்டம் புதல்வா நவிலக்கேள் சிட்டன்**

**சிவாயநம என்னும் திருஎழுத்து அஞ்சாலே**

**அவாயம் அற நின்று ஆடு வான்**

### பதவுரை

| | |
|---|---|
| **புதல்வா** | நன்மாணாக்கனே, |
| **எட்டும் இரண்டும்** | உருவான ய என்னும் எழுத்தால் குறிக்கப்படுகிற |
| **லிங்கத்தே** | உயிராகிய ஆதாரத்தில் |
| **நட்டம்** | சிவபிரான் செய்கின்ற திருக்கூத்தினை |
| **நவிலக் கேள்** | யாம் சொல்லக் கேள். |
| **சிட்டன்** | மேலோனாகிய சிவபிரான் |
| **சிவாயநம** | என்னும் சிவாயநம என்கிற |

**திருஎழுத்து அஞ்சால்** திருவைந்தெழுத்துக்களையே திருமேனியாகக் கொண்டு

**அவாயம் அற** உயிர்களின் பிறவித் துன்பம் நீங்கும் படியாக

**நின்று ஆடுவான்** ஆடல் புரிவான் என அறிவாயாக.

**பொழிப்புரை**

ஆசிரியர் திருக்கூத்தின் இயல்பைக் கூறத் தொடங்குகிறார். நன் மாணாக்கனே, ய என்னும் எழுத்தால் குறிக்கப்படுவது உயிர். அந்த உயிராகிய ஆதாரத்தில் சிவபிரான் செய்கின்ற திரு நடனத்தின் இயல்பைக் கூறுகின்றோம். கேள். அம் முதல்வன் திருவைந்தெழுத்தையே திருமேனியாகக் கொண்டு உயிர்களின் பிறவித் துன்பம் நீங்கும்படி நின்று ஆடுவான் என அறிவாயாக.

**விளக்கம்**

**இறைவன் ஆடும் இடம்**

இறைவன் எங்கும் நிறைந்தவன், உருவம் இல்லாதவன். அவன் நடனம் செய்கிறான் என்றால் அதற்கு ஓர் இடம் வேண்டும் அல்லவா? அவனுக்கு உருவம் வேண்டும் அல்லவா? அவன் ஆடல் புரிவதற்குக் கொள்ளும் இடம் எது? உருவம் எது? என்ற வினாக்களுக்கு இச்செய்யுளில் விடை கூறுகிறார் ஆசிரியர்.

எட்டும் இரண்டும் உருவான லிங்கத்தே என்றதனால் அவன் ஆடும் இடம் இன்னது என்பதைப் புலப்படுத்தினார்.

லிங்கம் என்பதற்கு அடையாளம் அல்லது குறி என்பது நேர் பொருள். இங்கு அச் சொல் ஆதாரம் அல்லது இடம் என்ற பொருளில் வந்தது.

எட்டும் இரண்டும் உருவான இடமே அவன் ஆடல் புரியும் இடமாகும். இவ்வாறு மறைபொருளாக வைத்து உணர்த்தினார் ஆசிரியர்.

எட்டும் இரண்டும் என்பது நம்நாட்டில் வழங்கி வரும் ஒரு பழைய வழக்கு.

**பட்டி மண்டபம் ஏற்றினை ஏற்றினை**

**எட்டினோ டிரண்டும் அறியேனையே**

என்று திருவாசகத்தில் வந்துள்ளது.

எட்டும் இரண்டும் என்பதற்குச் சைவ சித்தாந்தத்தில் சொல்லப்படும் பொருளைக் காண்போம். எட்டும் இரண்டும் கூடியது பத்து. பத்து என்னும் எண்ணைக் குறிக்கும் எழுத்து ய என்பது. திருவைந்தெழுத்தில் ய என்னும் எழுத்து உயிரைக் குறிக்கும். ஆகவே, எட்டும் இரண்டும் உருவான லிங்கத்தே என்பது, பத்தின் அறிகுறியான ய என்னும் எழுத்தால் குறிக்கப்படும் ஆன்மாவாகிய இடத்தில் எனப் பொருள்படுவதாயிற்று.

உடம்பெங்கும் உயிர் இருப்பினும் இரண்டு இடங்களை உயிர் சிறப்பாகப் பற்றி நிற்கும். அவ்விடங்களாவன இதயம், புருவநடு என்பன.

உயிர் சிறப்பாகப் பொருந்தி நிற்கும் இந்த இரண்டு இடங்களிலும் இறைவனது நடனம் நடைபெறுகிறது. உயிரின் அறிவு நிலைத்து நிற்கும் இதயத்திலும், விளக்கம் பெற்றுத் திகழும் புருவ நடுவிலும் அவ்வறிவை இடமாகக் கொண்டு, உயிரை நிலைப்பித்தும் அறிவித்தும் இறைவன் நடம் புரிகின்றான் என்பது ஈண்டு அறியத்தக்கது.

## ஆடுதற்குக் கொள்ளும் உருவம்

இறைவன் ஆடும் இடம் ஆன்ம அறிவு என்று பார்த்தோம். இனி, ஆடுதற்குக் கொள்ளும் உருவம் எது என்பாராய், சிவாயநம என்னும் திருவெழுத்து அஞ்சாலே என்கிறார் ஆசிரியர். எனவே திருவைந்தெழுத்தைத் திருமேனியாகக் கொண்டு இறைவன் நடனம் புரிகிறான் என்பது விளங்கும்.

ஆன்மாவின் அறிவு தொழிற்படுதற்கு இன்றியமையாத் துணையாய் இருப்பது நாதம் ஆகும். நாதத்தில் தோன்றுவன மந்திரங்கள். அம்மந்திரங்களை இறைவன் தனக்கு வடிவமாகக் கொள்வான். அம்மந்திரங்களுள் சிறந்தது திருவைந்தெழுத்தே யாகலின் அதனையே தனக்குத் திருமேனியாகக் கொண்டு சிவபிரான் ஆன்ம அறிவினிடத்து விளங்குகிறான்.

## சிட்டன்

சிட்டன் என்பதற்கு உயர்ந்தோன் என்பது பொருள். அஃது இங்குச் சிவபிரானைக் குறித்து நின்றது. திருவாசகத்தில்,

**சிட்டனே சிவலோகனே சிறு**
**நாயினும் கடையாய வெங்**
**கட்டனேனையும், ஆட்கொள்வான் வந்து**
**காட்டினாய் கழுக்குன்றிலே**

என்ற பாடலில் சிட்டன் என்ற சொல் சிவபெருமானைக் குறிப்பதாய் வந்துள்ளமை காணலாம்.

திருநாவுக்கரசர் அச்சொல்லை ஒரு பாடலில் நான்கு அடியிலும் அமைத்துப் பாடியுள்ளார்.

**சிட்டர் வானவர் சென்று வரங்கொளும்**
**சிட்டர் வாழ்தில்லைச் சிற்றம் பலத்துறை**
**சிட்டன் சேவடி கைதொழச் செல்லும் அச்**
**சிட்டர்பால் அணுகான் செறுகாலனே**

என்பது அப்பாடல். அச்சொல் முதலடியில் முனிவரையும், இரண்டாமடியில் தில்லை வாழ் அந்தணரையும், மூன்றாமடியில் நடராசப் பெருமானையும், நான்காமடியில் அடியாரையும் குறிப்பதாம்.

## அஞ்செழுத்து உரு

**32. ஆடும் படிகேள்நல் அம்பலத்தான் ஐயனே**

**நாடும் திருவடியிலே நகரம் கூடும்**

**மகரம் உதரம் வளர்தோள் சிகரம்**

**பகரும்முகம் வாமுடியப் பார்.**

## பதவுரை

**ஐயனே** நன்மாணாக்கனே,

**நல் அம்பலத்தான்** உயிர்களுக்குத் துன்பத்தை நீக்கி இன்பத்தை நல்கும் அம்பலவாணன்

**ஆடும் படி கேள்** திருக்கூத்து இயற்றும் முறையைக் கேள்.

**நாடும்** ஆன்பர்கள் விரும்பும்

**திருவடியில் நகரம்** திருவடி நகாரமாயிருக்கும்.

**உதரம்** திருவயிறு

**கூடும் மகரம்** பொருந்திய மகாரமாகும்.

**வளர் தோள்** உயர்ந்த திருத்தோள்

**சிகரம்** சிகாரமாகும்.

**பகரும் முகம் வா** வேதங்களையும் ஆகமங்களையும் அருளிய திருமுகம் வா ஆகும்.

**முடி ய** திரு முடி ய ஆகும்.

**பார்** இவ்வாறு பஞ்சாக்கரம் அவனுக்குத் திருமேனியாய் அமையும் முறையை உணர்வாயாக.

## பொழிப்புரை

நன் மாணாக்கனே, கூத்தப் பெருமான் ஆடும் முறையைக் கேள். அன்பர்கள் நாடும் திருவடி ந காரம் ஆகும். வயிறு ம காரம் ஆகும். தோள்கள் சி காரம் ஆகும். முகம் வா ஆகும். திருமுடி ய ஆகும்.

## விளக்கம்

### திருவைந்தெழுத்தால் அமைந்த திருமேனி

இறைவன் நடனம் புரிதற்கு இடம் ஆன்மா என்றும், அவனுக்குத் திருமேனி பஞ்சாக்கரம் என்றும் முன்னே கூறப்பட்டது.

ஆன்மாக்களைப் பெத்தான்மாக்கள் என்றும், முத்தான்மாக்கள் என்றும் இருவகைப்படுத்தலாம். பாசத்தில் உள்ளவை பெத்தான்மாக்கள். பாசத்தினின்றும் நீங்கியவை முத்தான்மாக்கள். அவ்விருவகை ஆன்மாக்களுக்கும் இறைவன் செய்பவை இரு வகையான ஐந்தொழில்களாகும். எனவே அவ்விருவகையான ஐந்தொழில்களை உணர்த்தும் இருவகை நடனங்களை இறைவன் புரிகின்றான் என்பது

விளங்கும். அதற்கேற்பப் பஞ்சாக்கரம் அவனுக்குத் திருமேனியாய் அமையும் பொழுது இருவகையாகவே அமையும். அந்த இருவகையினையும் இச்செய்யுளாலும், அடுத்து உள்ள செய்யுளாலும் உணர்த்துகிறார் ஆசிரியர்.

இச்செய்யுள் நகாரம் முதலாக அமையும் தூல பஞ்சாக்கர வடிவத்தை உணர்த்தியது. இவ்வாறு கண்டு வணங்குவார்க்கு உலகப் பயனே விளைவதாகும்.

### அஞ்செழுத்து உரு

**33. சேர்க்கும் துடிசிகரம் சிற்கனவா வீசுகரம்**

**ஆர்க்கும்யகரம் அபயகரம் பார்க்கில் இறைக்கு**

**அங்கி நகரம் அடிக்கீழ் முயலகனார்**

**தங்கும் மகரம்அது தான்.**

### பதவுரை

| | |
|---|---|
| **பார்க்கில்** | ஆராய்ந்தால் |
| **இறைக்கு** | கூத்தப் பெருமானுக்கு |
| **சேர்க்கும் துடி** | ஏந்திய உடுக்கையை உடைய திருக்கரம் |
| **சிகரம்** | சிகாரம் ஆகும். |
| **வீசு கரம்** | வீசிய திருக்கரம் |
| **சித் கன வா** | ஞான உருவான வா ஆகும் |
| **அபய கரம்** | அஞ்சற்க என்று காட்டும் திருக்கரம் |
| **ஆர்க்கும் யகரம்** | யகாரம் ஆகும் |
| **அங்கி** | நெருப்பு ஏந்திய திருக்கரம் |
| **நகரம்** | நகாரம் ஆகும். |
| **அடிக்கீழ் முயலகனார்** | முயலகனைக் கீழே அழுத்தும் திருவடி |

**தங்கும் மகரம்** மகாரம் ஆகும்.

## பொழிப்புரை

உடுக்கையை ஏந்திய திருக்கை சிகாரம். வீசிய திருக்கை ஞான உருவாகிய வா ஆகும். அஞ்சற்க என்று காட்டும் அபயத்திருக்கை யகாரம். நெருப்பு ஏந்திய திருக்கை நகாரம். முயலகனைக் கீழே அழுத்தும் திருவடி மகாரம் ஆகும்.

## விளக்கம்

கூத்தப் பிரானது திருவுருவத்தில் உடுக்கை, வீச்சு, அமைப்பு, நெருப்பு என்னும் இவைகளையுடைய நான்கு கைகளையும், ஊன்றிய திருவடியையும் முறையே சி, வா, ய, ந, ம என்னும் எழுத்துக்களாகக் கண்டு துதித்து வணங்குக என்பது கூறப்பட்டது.

இச்செய்யுள் சிகாரம். முதலாக அமையும் சூக்கும பஞ்சாக்கர வடிவத்தை விளக்கிற்று.

**34. ஓங்காரமே நல் திருவாசி உற்றுஅதனில்**

**நீங்கா எழுத்தே நிறைசுடராம் ஆங்காரம்**

**அற்றார் அறிவர் அணி அம்பலத்தான் ஆடல்இது**

**பெற்றார் பிறப்பு அற்றார் பின்**

## பதவுரை

**நல் திருவாசி** இறைவனது திருவுருவைச் சூழ்ந்திருக்கும் ஒளிவட்டமான திருவாசி

**ஓங்காரம்** ஓங்காரமாகும்.

**நிறை சுடர்** அத்திருவாசியில் அமைந்துள்ள நிறைந்த சுடர்கள்

**அதனில் உற்று** ஓங்காரத்தில் தோன்றி

**நீங்கா எழுத்து ஆம்** அதினின்று நீங்காமல் உள்ள முதல் எழுத்துக்கள் ஆகும்.

**அணி அம்பலத்தான்** அழகிய சிற்றம்பலம் உடையானது

**ஆடல் இது** ஆடலின் இவ்வியல்பை

**ஆங்காரம் அற்றார் அறிவர்** யான் எனது என்னும் செருக்கு நீங்கப் பெற்றவரே அறிவர்.

**பெற்றார்** இதனையறிந்து வழிபடும் பேறு பெற்றார்

**பின் பிறப்பு** இனிப் பிறப்பை

**அற்றார்** அறுத்துக் கொண்டவராவார்.

## பொழிப்புரை

ஓம் என்னும் பிரணவமே அவனைச் சூழ்ந்துள்ள திருவாசியாகும். அப்பிரணவத்தில் தோன்றிய அக்கரங்கள் ஐம்பத்தொன்றும் திருவாசியில் விளங்கும் சுடர்களாகும். முதல் ஒலியாகிய ஓங்காரமாம் திருவாசியுள், அவ்வோங்காரத்தின் உள்ளொளியாய் விளங்கி நிற்பவன் கூத்தப் பெருமான். அவனது கூத்தின் இயல்பை யான் எனது என்னும் செருக்கு அற்றவரே அறிவர். அவ்வாறு அறிந்து வழிபடும் பேறு பெற்றவர் பின் பிறவாத நிலையைப் பெற்றவர் ஆவர்.

## விளக்கம்

## ஓங்காரமும் இறைவன் திருவுருவும்

உலகம் பொருளுலகம் எனவும், சொல்லுலகம் எனவும் இரு வகையாய் அமைந்துள்ளது. பொருள் வடிவாய் உள்ளவை (புவனம், தத்துவம், கலை) பொருளுலகம் ஆகும். ஒலிவடிவாய் வழங்கும் பலவகை மொழிகள் சொல்லுலகம் ஆகும்.

சொல்லுலகம் எழுத்து, சொல், சொற்றொடர் என மூன்று நிலைமையை உடையது. எழுத்து வடமொழி பற்றி ஐம்பத்தொன்று எனக் கொள்ளப்படும். ஐம்பத்து மூன்று என்று கூறும் வழக்கும் உள்ளது. இவ்வெழுத்துக்களுள் அனைத்து மொழிகளின் எழுத்துக்களும் அடங்கும் என்னும் கருத்தினால் இவற்றை மாதிருகாக்கரங்கள் (தாய் எழுத்துக்கள்) என்று குறிப்பிடுவர்.

சொல்லுலகம் ஆகிய அனைத்து மொழிகளுக்கும் மூலமாய் இருப்பது நாதம் ஆகும். நாதம் ஓம் என்னும் குறியீட்டால் குறிக்கப்படும். அதனால், அது ஓங்காரம் எனப்படும்.

இன்னும், ஓங்காரம் ஐந்து கூறுகளை உடையதாகச் சொல்லப்படும். அவை அ, உ, ம், விந்து, நாதம் என்பன. இவற்றுள் முதலில் உள்ள மூன்றும் நம் செவியால் உணரப்படும் அகரம் முதலியன அல்ல. ஆயினும் அகரம் முதலியவற்றோடு ஒத்த தன்மை உடைமையால் அவையும் அகரம் முதலியனவாகவே ஒப்புமை பற்றிக் கூறப்படுகின்றன.

ஓங்காரத்தின் கூறுகளாகிய அகரம் முதலிய ஐந்தும் பஞ்சாக்கரம் என்று சொல்லப்படும். ஆயினும் அவை திருவைந்தெழுத்தாகிய பஞ்சாக்கரம் போன்றவை அல்ல. ஆதலால் இவை சூக்கும பஞ்சாக்கரம் என்றே குறிக்கப்படும்.

இறைவன் அகர, உகர, மகர, நாத, விந்துக்களாய் நின்று, அந்தக் கரணங்களை இயக்கிப் பொருளுணர்வைத் தருகின்றான் என்பது பற்றி,

**உய்ய என் உள்ளத்துள் ஓங்காரமாய் நின்ற**
**மெய்யா**

என்று அருளிச் செய்தார் மாணிக்கவாசகர்.

பொருளுலகம் அனைத்திற்கும் முதல்வன் ஆகிய கடவுளே சொல்லுலகத்திற்கும் முதல்வன் ஆதலின் ஓங்காரத்தால் குறிக்கப்படுபவன் அவனே என்று நூல்கள் கூறும். ஓங்காரமே அவனது திருவுருவைச் சூழ்ந்துள்ள ஒளிவட்டமாகிய திருவாசி என்பதும், அத்திருவாசியில் அமைந்துள்ள 51 அல்லது 53 என்னும் எண்ணிக்கையுள்ள சுடர்கள், மாதிருகாக்கரங்கள் என மேலே குறிப்பிட்ட முதல் எழுத்துக்கள் என்பதும் உண்மை விளக்கத்தால் நாமறிந்த செய்திகள்.

நாம் கோயிலுக்குச் செல்லுகிறோம். கோயில் எத்தனைப் பெரியதாக இருந்தாலும், மூலவர் இருக்கும் கருவறை சிறியதாகத்தான் இருக்கும். ஏன் இப்படி இருளடைந்த குகை போன்ற இடத்தில் மூலமூர்த்தியை வைத்திருக்கிறார்கள்? என்று சிலர் நினைக்கலாம். நம் முன்னோர்கள் தெரியாமல் அப்படிச் செய்யவில்லை. ஒரு கருத்தோடுதான் அவ்வாறு

அமைத்தார்கள். கோயிலிலுள்ள மூலஸ்தானம் நம் இதயத்தைப் போன்றது. இதயம் போன்ற சன்னல் இல்லாத இடத்தில் ஆண்டவனை வைத்தார்கள்.

கோயிலுக்குப் போய்க் கர்ப்பக் கிருகத்தில் இருக்கும் ஆண்டவன் முன் நின்று பார்த்தால் இருட்டில் தெரியாது. கூர்ந்து பார்த்தால்தான் தெரியும். பூசை செய்கிறவர் தீபாராதனை காட்டும் பொழுது மிக விளக்கமாகத் தெரியும். தீபாராதனை காட்டும் போது தீபத்தால் ஓங்கார எழுத்தை எழுதுவது போலக் கையைச் சுற்றிக் காட்டுவார். இந்த ஓங்கார ஒளி வட்டத்திற்குள் நாம் இறைவனது உருவத்தைக் காண வேண்டும். அப்படிக் காணுகிற திருவுருவை மனத்தில் நிலை நிறுத்தப் பழகுதல் வேண்டும்.

**அம்பலத்தான் ஆடலை அறிந்து வழிபடும் பேறு பெற்றவர்** :

கூத்தப் பெருமானின் எடுத்த பொற்பாதத்தில் தம் அன்பை வைத்தவர் நிலத்தின் மேல் நெடுங்கிடையாய் விழுவர், பின்பு திருக்கூத்தினைக் காணவேண்டி எழுவர். தம்மையே தாம் மறந்து விடுவர். தற்பெருமை என்பது அவர்களுக்கு எங்கேயிருக்கும்? அஃது அறவே கெட்டொழியும்.

**கையும் தலைமிசை புனைஅஞ் சலியன;**
**கண்ணும் பொழி மழை ஒழியாதே**
**பெய்யும் தகையன; கரணங் களும்உடன்**
**உருகும் பரிவின; பேறெய்தும்**
**மெய்யும் தரை மிசை விழும்; முன்பெழு தரும்**
**மின் தாழ் சடையொடு நின்றாடும்**
**ஐயன் திருநடம் எதிர்கும் பிடும் அவர்**
**ஆர்வம் பெருகுதல் அளவின்றால்**
**(பெரியபுராணம்)**

திருக்கூத்தை அன்போடு தரிசிப்பவர் நிலை இது.

பிறவியறுதலை எண்ணாதவர் அதனைப் பற்றிச் சிறிதும் கவலை கொள்ளாதவர் திருக்கூத்தினைப் புறத்தே மட்டும் ஒருகாற் கண்டு ஒழிவர். பிறவியறுதலை வேண்டும் ஞானியர் அதனை எப்பொழுதும் உள்ளத்தே கண்டு கொண்டிருப்பர்.

## ஊன நடனம்

## தூல ஐந்தொழில்

இறைவன் செய்யும் ஐந்தொழில்களைப் பற்றி முன்னே விரிவாக அறிந்தோம் (செய்யுள் 8) படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய மூன்றும் உலகத்தின் மேல் நிகழ்வன என்றும், மறைத்தலும் அருளலும் ஆகிய இரண்டும் உயிரிடத்தில் நிகழ்வன என்றும் அறிந்தோம். அவை தூல ஐந்தொழில் எனப்படும். இது தவிர, சூக்கும ஐந்தொழில், அதிசூக்கும ஐந்தொழில் என இரண்டு சொல்லப் பெறும்.

## சூக்கும ஐந்தொழில்

நமக்கு உறக்கம் என்பது ஒடுக்க நிலையாகும். உறக்கத்திலும் இறைவனது செயல் நம்மிடத்தில் நிகழ்கிறது. உறங்கச் செல்லும் போது ஒரு சிக்கலை நினைத்துக் கொண்டு அதை எப்படித் தீர்ப்பது என்று கவலையோடு நம்மையறியாமல் கண்ணயர்ந்து தூங்கி விடுவோம். மறுநாள் விடிந்து கண்விழித்த போது அச்சிக்கலை இப்படித்தான் தீர்க்க வேண்டும் என்ற தெளிவு நமக்கு ஏற்பட்டு விடுகிறது. இத் தெளிவு எப்படி உண்டாயிற்று? இதற்கு நம்மால் விளக்கம் சொல்ல முடியாவிடினும் உறக்க நிலையில் இறைவன் நுட்பமாக நமக்குச் செய்த உதவியே அது எனலாம். இவ்வாறு இறைவன் செய்வது சூக்கும ஐந்தொழில் எனப்படும்.

இனி, மற்றொரு ஒடுக்க நிலையும் உண்டு. முற்றழிப்புக் காலத்தில் இறைவன் எல்லாவற்றையும் ஒடுக்கித் தான் தனியனாய் நிற்கிற நிலை அது. அவ்வாறு ஒடுக்கி நிற்கும் முதல்வன் உலகத்தை மீளத் தோற்றுவித்தற் பொருட்டு அதற்கு ஆவனவற்றைச் செய்வான். அந்நிலையில் அவன் செய்வனவும் சூக்கும ஐந்தொழில் எனப்படும்.

அத்தொழில்கள் இப்படிப்பட்டவை எனத் தனித் தனியாக வகுத்துக் காட்டுதல் அரிதாகும்.

## அதிசூக்கும ஐந்தொழில்

இனி, அதிசூக்கும ஐந்தொழிலை நோக்குவோம். உயிரானது புருவ நடுவில் நின்று, கருவிகளோடு கூடிப் பொருள்களை அறிந்து வருவதாகிய விழிப்பு நிலையில் இறைவன் உயிர்க்குயிராய் உள்நின்று இடைவிடாது உணர்த்தி

வருகிறான். அவ்வாறு உணர்த்தவில்லையாயின் உயிர்க்கு அறிவு நிகழாது. இறைவன் உயிர்க்கு உணர்த்தும் முறைமையே அதி சூக்கும ஐந்தொழில் எனப்படுகிறது. இத்தொழில்களையும் தனித்தனியாக விளங்கிக் கொள்ளுதல் அரிதாகும்.

## ஊன நடனம் பெயர் விளக்கம்

தூலம், சூக்குமம், அதிசூக்குமம் ஆகிய இம் மூவகை ஐந்தொழில்களும் ஊன நடனம் என ஒன்றாய் வைத்துச் சொல்லப்படும். இத்தொழில்களால் உயிர்க்கு உண்டாவது உலக நுகர்ச்சியும், சிற்றறிவும் ஆகும். இவற்றால் உயிர் உலக வாழ்விற் கட்டுண்டு நிற்கிறது. இது பற்றியே இறைவனது செயல் ஊன நடனம் எனப்பட்டது.

ஞான நடனம் என மற்றொன்று இருத்தலால், ஊன நடனமாகிய இதில் உள்ள ஊனம் என்பது ஞானம் இல்லாமையைக் குறித்தது. ஊன நடனத்தை உணர்த்துவது இச்செய்யுள்.

**35. தோற்றம் துடிஅதனில் தோயும் திதிஅமைப்பில்**

**சாற்றியிடும் அங்கியிலே சங்காரம் ஊற்றமா**

**ஊன்று மலர்ப்பதத்தில் உற்றதிரோதம் முத்தி**

**நான்ற மலர்ப்பதத்தே நாடு**

### பதவுரை

| | |
|---|---|
| **துடி அதனில்** | உடுக்கையை இயக்கும் திருக்கையில் |
| **தோற்றம்** | படைத்தல் தொழிலையும், |
| **அமைப்பில்** | அமைத்த திருக்கையில் |
| **தோயும் திதி** | ஆன்மாப் பொருந்தும் காத்தல் தொழிலையும், |
| **சாற்றியிடும்** | சொல்லப்பட்ட |
| **அங்கியில்** | நெருப்பு ஏந்திய திருக்கையில் |
| **சங்காரம்** | அழித்தல் தொழிலையும் |

**ஊற்றமா** உறுதியாக

**ஊன்று** முயலகன் மீது ஊன்றிய

**மலர்ப் பதத்தில்** மலர் போன்ற திருவடியில்

**உற்ற** பொருந்திய

**திரோதம்** மறைத்தல் தொழிலையும்

**நான்ற** தூக்கிய

**மலர்ப் பதத்தே** மலர் போன்ற திருவடியில்

**முத்தி** பிறவியினின்றும் எடுத்துப் பேரின்பத்தில் வைப்பதாகிய அருளுதல் தொழிலையும்,

**நாடு** கண்டுகொள்

## பொழிப்புரை

உடுக்கையால் ஒலியை உண்டாக்குதல் படைத்தல் தொழிலையும், அபயத் திருக்கரம் காத்தல் தொழிலையும், நெருப்பை ஏந்தியிருத்தல் அழித்தல் தொழிலையும், உறுதியாக முயலகன் மேல் ஒரு காலை ஊன்றியிருத்தல் மறைத்தல் தொழிலையும், மற்றொரு காலை உயரத் தூக்கியிருத்தல் அருளல் தொழிலையும் உணர்த்தும். இவ்வாறாகக் கூத்தப் பெருமானது திருவுருவில் தோன்றும் குறிப்பை அறிந்து கொள்.

## விளக்கம்

### இறைவனது நடனத்தில் ஐந்தொழில்களும் விளங்குதல் :

சிவபெருமானது நடனம் ஐந்தொழிற்கும் தானே முதல்வன் என்பதை உணர்த்தும். அந் நடனத்தில் ஐந்தொழிலும் விளங்குவதை இச் செய்யுள் அழகிய முறையில் விளக்குகின்றது.

எண்ணிறந்த உயிர்களுக்கு அவ்வவற்றிற்கு ஏற்ற உடம்பைக் கொடுத்து உலகத்தில் இயங்கச் செய்வதே படைத்தல். தமருகத்தை அசைத்து நாதத்தை உண்டாக்கும் கை உலகத்தைத் தோற்றுவித்தலைக் குறிக்கும்.

இங்ஙனம் படைத்தது மட்டுமின்றி அவைகளைக் காக்கவும் செய்கின்றான். தாயின் வயிற்றில் உள்ள மகவுக்கு அவளறியாதபடி உணவு ஊட்டிக் காக்கின்ற இறைவனது கருணையை என்னென்பது! கூத்தப் பெருமானது வடிவத்தில் அபயம் தரும் கை காத்தலைக் குறிக்கும்.

இவ்வாறு காத்தலைப் புரிகின்ற இறைவன் அவைகளை அழித்தும் விடுகின்றானே. அழித்தல் என்பது அச்சமும் வருத்தமும் தரும் செயல் அல்லவா? அதனைச் செய்வது எதற்கு? என்று வினவலாம்.

உண்மையில் அழித்தல் என்பது உயிர்களின் நன்மையின் பொருட்டே செய்யப்படுகிறது என்பதை உணர்தல் வேண்டும். உடம்போடு கூடிய உயிர்கள் அவ்வுடம்பினால் வரும் அளவற்ற துன்பங்களை அனுபவித்துப் பிறப்பு இறப்புக்களில் அகப்பட்டுச் சுழன்று பெரிதும் இளைப்பினை அடையும். அவ்விளைப்பு நீங்குதற் பொருட்டே உயிர்களை உடம்பினின்றும் பிரித்துச் சிறிது காலம் ஓய்வு கொள்ளும்படி செய்கின்றான். எனவே அழித்தல் என்பதும் உயிர்களின் நன்மை கருதியே செய்யப்படுவதாகும். இறைவனது நடனக் கோலத்தில் தீ யேந்திய கை அழித்தலைக் காட்டும்.

இனி, மறைத்தல் என்பது இறைவன் உயிர்களுக்குத் தன்னைக் காட்டாது உலகத்தையே காட்டி உலக போகத்தை நுகரச் செய்தல். உயிர் தன்னையறியும் பக்குவத்தை வருவித்தற் பொருட்டே இது செய்யப்படுகிறது. திருக்கூத்தில் முயலகனை மிதித்துள்ள திருவடி மறைத்தலைத் தெரிவிக்கும்.

அருளல் என்பது பாசங்களையெல்லாம் நீக்கி உயிர்களுக்குப் பேரின்பத்தை வழங்குதல். கூத்தப்பிரானது தூக்கிய திருவடி, பிறவியினின்றும் எடுத்துத் தன் திருவடி நிழலில் வைத்து அருளுதலை உணர்த்துவதாகும்.

## இனி, ஞான நடனம்

முதல்வன் உயிர்கட்குப் பிறப்பு, வீடு என்னும் இரு நிலைகளையும் தருதற்காக ஆடுகின்றான். அவற்றுள் பிறப்பைத் தருவது ஊன நடனம் ஆயிற்று. வீட்டைத் தருவது ஞான நடனம் ஆகும்.

ஊன நடனத்தின் பயனாக உயிர் உண்மையை உணரும். தத்துவங்கள் அனைத்தையும் தான் அல்ல என்று கண்டு கழித்துத் தன்னை அவற்றிற்கு வேறான சித்துப் பொருளாக உணரும்; பின்பு, தான் சித்தப் பொருளாயினும் தானே அறியும் சூக்கும சித்து அன்று, அறிவித்தால் அறியும் தூல சித்து எனத் தனது உண்மையை உணரும். அதனால், தானே அறிந்தும் உயிர்களுக்கு அறிவித்தும் நிற்கும் சூக்கும சித்து தலைவனாகிய சிவன் என அறியும். இவ்வறிவு நூலறிவாய் அபர ஞானமாய் நில்லாது, அதனை அனுபவமாக பர ஞானமாகப் பெறும். இதுவே பக்குவம் முதிர்ந்த நிலையாகும். தன்னையும் தலைவனையும் உணர்ந்த நிலையாகும்.

தலைவனை உணர்ந்தவர் அவனே தமது வாழ் முதல் எனக் கொள்வர். தம் வழியில் நில்லாது அவன் வழியில் நிற்பர். முதல்வன் அவரை மும்மலம் நீக்கி அருள் நிலையில் வைத்துப் பேரின்பத்தை நுகரச் செய்வன் இவ்வுதவியும் ஐவகைத் தொழில்களாக வைத்துச் கூறப்படும். இது ஞான நடனம் எனப் பெயர் பெறுகிறது. இதனை உணர்த்துகிறது இச்செய்யுள்.

**36. மாயை தனைஉதறி வல்வினையைச் சுட்டுமலம்**

**சாய அமுக்கிஅருள் தான் எடுத்து நேயத்தால்**

**ஆனந்த வாரிதியில் ஆன்மாவைத் தான்அழுத்தல்**

**தான்எந்தை யார்பரதம் தான்**

**பதவுரை**

**மாயை தனை உதறி** (பக்குவ ஆன்மாவின் உணர்விலிருந்து) மாயா மலத்தை நீங்கச் செய்து,

**வல்வினையைச் சுட்டு** அவ்வுயிரைத் தொடரும் வலிய கன்ம மலத்தைச் சுட்டெரித்து,

**மலம்** மூல மலமாகிய ஆணவ மலத்தை

**சாய** அதன் ஆற்றல் கெடும்படி

**அமுக்கி** மெலிவித்து அடக்கி,

**அருள்தான் எடுத்து** பிறப்பு இறப்புக்களில் சுழன்று வந்த அந்நிலையினின்றும் எடுத்து அருள் நிலையில் வைத்து

**நேயத்தால்** பெருங்கருணையினால்

**ஆனந்த வாரிதியில்** பேரின்பக் கடலில்

**ஆன்மாவை** அவ்வுயிரை

**அழுத்தல் தான்** அழுந்தும்படி செய்தலே

**எந்தையார்** எம் தந்தையாகிய சிவபெருமான்

**பரதம்தான்** இயற்றும் திருக்கூத்து ஆகும்.

**பொழிப்புரை**

துடியை அசைத்தல் பக்குவம் எய்திய உயிரின் உணர்விலிருந்து மாயையை உதறி விலக்குவதாகும். நெருப்பை ஏந்தியுள்ள கை அவ்வுயிரைத் தொடரும் வலிய வினையைச் சுடுவதாயிருக்கும். ஊன்றிய திருவடி ஆணவ மலத்தை வலிகெட்டு நிற்கச் செய்வதாகும். எடுத்த திருவடி பிறப்பு இறப்புக்களில் சுழன்று வந்த அவ்வுயிரை அந்நிலைகளினின்றும் உயர்த்தி அருள் நிலையில் வைப்பதாகும். எடுத்த அத்திருவடியின் வளைவும், அதனைக் காட்டி நிற்கும் வீசிய கையும், யான் எனது என்னும் செருக்கு அற அடங்கி நில் என்னும் பொருள்பட அமைத்த திருக்கையும் உயிரைப் பேரின்பத்தில் அழுத்தும் குறிப்பு உடையவை ஆகும்.

**விளக்கம்**

**திருக்கூத்தினைத் தரிசிக்கும் முறை**

சிவனது திருக்கூத்தினைக் காணுங்கால், அதில் உதறிய கையை மாயையை உதறும் கையாகக் காணுதல் வேண்டும். வீசி அணைத்த கையை வருக என்று அழைத்து அருள் வழங்கும் கையாகக் காணுதல் வேண்டும். அமைத்த கையை இனிதிருக்க எனத் தேற்றம் தரும் கையாகக் காணுதல் வேண்டும். தீ ஏந்திய கையை வினைகள் கெடந்திருவருள் வழி நிற்கச் செய்யும் கையாகக் காணுதல் வேண்டும். ஊன்றிய திருவடியை

மலத்தை மிதித்து நிற்கும் திருவடியாகக் காணுதல் வேண்டும். திருக்கூத்தினை உண்மையில் தரிசிக்கும் முறைஇதுவாகும்.

**இனி, ஆனந்த நடனம்**

இவ்வுலகில் பக்குவ ஆன்மாக்களுக்குச் சீவன் முத்தி நிலையில் பேரானந்தத்தை இடையறாது தருகின்ற கூத்து இதுவாகும்.

**37. மோனந்த மாமுனிவர் மும்மலத்தை மோசித்துத்**

**தான் அந்த மானிடத்தே தங்கியிடும் ஆனந்தம்**

**மொண்டுஅருந்தி நின்றுஆடல் காணும்அருள் மூர்த்தியாக்**

**கொண்டதிரு அம்பலத்தான் கூத்து**

**பதவுரை**

**மோன அந்தம்** மோனம் ஆகிய முடிநிலையில் நிற்கும்

**மா முனிவர்** உயர்ந்த ஞானிகள்

**மும் மலத்தை** மும் மல வாசனையை

**மோசித்து** அறவே நீக்கி,

**தான்** யான் என்னும் செருக்கு

**அந்தம் ஆன இடத்து** அழிந்து முடிந்து போன நிலையில்

**தங்கியிடும்** விளங்கித் தோன்றுகிற

ஆனந்தம் சிவானந்தம் ஆகிய அமுதத்தை

**மொண்டு அருந்த** கண்களால் மொண்டு அருந்துதற் பொருட்டு

**நின்று ஆடல்** திருச்சிற்றம்பலத்துள் காட்சிப் புலனாகும்படி நின்று ஆடுதலே,

**காணும் அருள் மூர்த்தியாக் கொண்ட** தன் திருவருளையே காணும் வடிவமாகக் கொண்டு விளங்கும்

**திரு அம்பலத்தான் கூத்து** நடராசப் பெருமான் இயற்றும் திருக்கூத்தாகும்.

## பொழிப்புரை

மோனம் ஆகிய முடிநிலையில் நிற்கும் சிறந்த முனிவர்கள் மும் மல வாதனையை முற்றிலும் நீக்கி, தற்போதம் அற்ற நிலையில் விளங்கித் தோன்றும் பேரின்பமாகிய அமுதத்தைத் கண்களாலும் மொண்டு அருந்தும் படியாக இறைவன் வெளியே திருச்சிற்றம்பலத்துள் புலப்பட நின்று ஆடுகிறான்.

## விளக்கம்

புளியை நாவில் இட்டுச் சுவையா விடினும் அதனைப் பார்த்த போதே பார்த்தவர்களுக்கு நாவில் நீர் ஊறும். அதுபோலக் கூத்தப் பெருமானது ஆனந்தக் கூத்தினைக் கண்டவர்க்கு உள்ளத்தில் பேரின்பம் ஊற்றெடுக்கும்.

## பக்குவம் இல்லாதார் நிலை

நாமும் அக் கூத்தினைக் காணத்தானே செய்கிறோம். நமக்கு அத்தகைய இன்பம் தோன்றவில்லையே. அது ஏன்? என வினவலாம். இதற்குப் பின்வருமாறு விடை கூறலாம். பருவம் வாயாத சிறுபெண் ஓர் ஆடவனைக் காணுங்கால் அக்காட்சி அவளுக்கு இன்பத்தைச் செய்யாது. அதே பெண் பருவமுற்றுக் காதலிற் கவிழ்ந்த போது, தன் தலைவனை அவன் நோக்காத நேரத்தில் தான் நோக்கித் தன்னுள் இன்புறுகிறாள். அக்காட்சி அவளுக்கு மகிழ்ச்சியைச் செய்கிறது. பருவம் அமையாத சிறு பெண்ணின் நிலையில் நாம் இருக்கிறோம். இறையின்பத்திற்கு உரிய தகுதியும், அதன் மேல் வேட்கையும் இன்றி இருக்கிறோம். இறையின் பத்திற்கு உரியர் அல்லார்க்குப் பொன்னம்பலக் காட்சி எவ்வாறு இன்பம் செய்யும்?

## ஆளுடைய பிள்ளையாரது அனுபவ நிலை

ஆளுடைய பிள்ளையார் மெய்ஞ்ஞானமேயான திருவம் பலத்தினையும், ஆனந்த நடத்தினையும் கண்டு கும்பிட்டுக் களித்தார்; கண்களினின்றும் ஆனந்தக் கண்ணீர் பொழிந்தார். ஆனந்த நடனமாகிய திருவமுதைக் கண்களால் உண்டருளினார்.

**உணர்வின் நேர்பெற வரும்சிவ போகத்தை**
**ஒழிவின்றி உருவின் கண்**

**அணையும் ஐம்பொறியளவினும் எளிவர அருளினை**

எனப் போற்றினார். ஆளுடைய பிள்ளையாரது இந்த அனுபவ நிலையை இங்கே பொருந்த வைத்து நோக்க வேண்டும்.

## தொழுவார் பெறும் பயன்

**38. பரைஇடமா நின்றுமிகு பஞ்சாக் கரத்தால்**

**உரைஉணர்வுக்கு எட்டா ஒருவன் வரைமகள்தான்**

**காணும் படியே கருணை உருக் கொண்டு ஆடல்**

**பேணும் அவர்க்கு உண்டோ பிறப்பு**

## பதவுரை

**உரை உணர்வுக்கு** வாக்கிற்கும் மனத்திற்கும்

**எட்டா** அகப்படாத

**ஒருவன்** ஒப்பற்ற முதல்வன்

**மிகு** மந்திரங்கள் எல்லாவற்றினும் மேலானதாகிய

**பஞ்சாக்கரத்தால்** திருவைந்தெழுத்தால்

**கருணையுருக் கொண்டு** அருள்திருமேனி தாங்கி

**பரை இடமா நின்று** அவ்வருளே தனக்கு அரங்காகக் கொண்டு

**வரைமகள் தான்** அவ்வருளாகிய உமையம்மை

**காணும்படி** காணுமாறு

**ஆடல்** நின்று ஆடும் திருக்கூத்தை

**பேணுமவர்க்கு** விரும்பித் தொழுவார்க்கு

**பிறப்பு உண்டோ** பிறவி ஏற்படுமோ?

## பொழிப்புரை

உரைக்கும் உணர்வுக்கும் எட்டாத ஒப்பற்ற முதல்வன் ஐந்தெழுத்தால் அருளுருக் கொண்டு, அருளே தனக்கு அரங்காகக் கொண்டு, அவ்வருளேயான உமையம்மை காணும்படி நின்று ஆடும் திருக்கூத்தை மேற்கூறிய முறையில் உணர்ந்து விரும்பித் தொழுவார்க்குப் பிறவியில்லை.

## விளக்கம்

### உண்மை அம்பலமும் உண்மைத் திருமேனியும்

பெருமான் நடனம் புரிதற்கு இடம் ஆன்மா என்றும், அவனுக்குத் திருமேனியாய் அமைவது ஐந்தெழுத்து மந்திரம் என்றும் மேலே பார்த்தோம். இவ்வாறு சொல்லப்படினும், உண்மையில் அவனுக்குத் திருமேனியாவது அவனது அருளேயாகும். அவனுக்கு இடமாவதும் அருளேயாகும். இச்செய்யுளில், பரை இடமா நின்று எனவும், கருணை உருக் கொண்டு எனவும் வந்துள்ள தொடர்களில் இக்கருத்துக் கூறப்பட்டுள்ளமை காணலாம்.

ஞாயிற்றை நமக்குப் புலப்படுத்துவது அதன் ஒளியேயாகும். அவ்வொளி, ஞாயிற்றின் உருவாகவும் குணமாகவும் உள்ளது. அதுபோல இறைவனும் அருளொளியை உடையவன். அவ்வருளொளியே அவனுக்கு உருவாகவும் குணமாகவும் அமைகிறது.

ஞாயிறு உலகத்தோடு தொடர்பு கொள்வது தன் ஒளி மூலமாகவே யாம். அதுபோல இறைவன் உலகத்தோடும் உயிர்களோடும் கொண்டுள்ள தொடர்பு அவனது சத்தியாகிய அருள் வழியாகவேயாம்.

இப்பகுதியின் தலைப்பாகிய நாதன் நடம் என்பதன் கீழ்த் தரப்பட்டுள்ள முன்னுரையில் இறைவனுக்கு இடம், திருமேனி முதலிய எல்லாமாவது அவனது திருவருளேயாம் என்பதை விளக்கினோம்.

ஆகவே, இறைவனுக்குத் திருவருளே உண்மை அம்பலமும் (இடமும்), உண்மைத் திருமேனியும் ஆகும் என்பது நன்கு உளங்கொள்ளுதற்குரியது. ஆன்மாவும் பஞ்சாக்கரமும் அவனுக்கு உபசார அம்பலமும் உபசாரத் திருமேனியும் ஆவன.

**கற்பனை கடந்த சோதி**
**கருணையே உருவ மாகி**
என்ற சேக்கிழார் திருமொழியில் கூத்தப் பெருமானது உண்மைத் திருமேனியும்,

**அருமறைச் சிரத்தின் மேலாம்**
**சிற்பர வியோமம்**
என்ற அவரது திருவாக்கில் உண்மைத் திருவம்பலமும் கூறப்பட்டுள்ளமை காணலாம். சிற்பர வியோமம் என்ற தொடர் ஞானமேயான அருள்வெளி என்ற பொருளைத் தருவதாகும். சித்ஞானமாகிய அருள்; வியோமம் வெளி.

## இறைவனது திருக்கூத்தினைக் கண்டு தொழுவார் பெறும் பயன்

யாவராலும் காணுதற்கரிய பெருநிலை உடையது சிவம். அப் பரம்பொருள் தானே தனது கருணை காரணமாக அனைவரும் காணும்படி அம்பலத்தில் தோன்றிப் பொற்புடன் நடஞ் செய்கின்றது. அதனைக் காண்பதனால் நாம் அடையும் பயன் என்ன? என வினவுவார்க்கு விடையாக, ஆடல் பேணுமவர்க்கு உண்டோ பிறப்பு என்றார் மனவாசகங் கடந்தார்.

பிறவி இன்ன காலத்தில் தொடங்கியது என்றும், இன்ன காலத்தில் முடியும் என்றும் சொல்ல இயலாத நிலையை உடையது. வினையால் பிறவியும் பிறவியால் வினையும் இடைவிடாது தொடர்ச்சியாய் முடிவின்றி வந்து கொண்டிருக்கின்றன. இப் பிறவிச் சுழற்சியிற் பட்டுத் துன்புறுகின்ற உயிர் அதினின்றும் நீங்கி நிலைத்து நின்று இன்புறும் நிலை கூத்தப் பெருமானது திருநடனத்தைக் காண்பதனால் கிடைப்பதாகும். அஃது எவ்வாறு என்பதைக் காண்போம்.

பிறவிக்குக் காரணம் அஞ்ஞானம். அஞ்ஞானம் என்பது இறைவனை அறியாதிருத்தலே. எனவே, இறைவனை அறிந்து கொள்ளுதல் தான் ஞானம் என்பதும், அந்த ஞானத்தால் பிறவி அறும் என்பதும் விளங்கும்.

இறைவனது திருநடனம் ஐந்தொழில்களைக் குறிப்பதாகும். ஐந்தொழில்களை இறைவன் இயற்றுதல் உயிர்களின் பிறவித் தொடர்ச்சியை அறுத்தற் பொருட்டேயாகும்.

உயிர்கள் அளவில்லாமல் இருத்தலின், அவைகளின் பொருட்டுச் செய்யப்படுகின்ற ஐந்தொழில்களுக்கும் தோற்றமும் இல்லை. முடிவும்

இல்லை. எனவே உயிர்களின் பொருட்டு இறைவன் ஐந்தொழில் நடனத்தை இடையறாது புரிந்து நிற்கின்றான்.

இந்நடனம் இறைவனது ஐந்தொழிலை உணர்த்தி, அவனை உணரும் ஞானத்தைத் தருவதாகும். இந்நடனத்தின் பொருளை உணர்ந்து விரும்பித் தொழுவார்க்கு ஞானம் உண்டாகி, அதனால் பிறவி அறும், அழிவிலா ஆனந்தம் விளையும். அது பற்றியே, கருணை உருக்கொண்டு ஆடல் பேணுமவர்க்கு உண்டோ பிறப்பு என்றார் ஆசிரியர்.

## ஆடல் காணும் அம்மை

உமையம்மை காணும்படி நின்று சிவபெருமான் திருக்கூத்து இயற்றுகிறான் என்பதை வரைமகள் தான் காணும்படி என்று இந்நூலும், இவ்வாறே பிற நூல்களும் கூறிச் செல்லும். அதன் பொருள்தான் என்ன? சிவன் செய்யும் கூத்தினை உமை காணுதலாவது, சிவனது செயலை உயிர்கட்குச் சேர்ப்பித்தல் என்று பொருள் கூறுவர். இதனை மேலும் விரித்துக் கூறினால்தான் பொருள் இனிது விளங்கும்.

நாம் செய்யும் செயல்களுக்கு, நமக்கு வாய்த்துள்ள உடல், கருவி முதலியவை உடனின்று உதவுகின்றன. நாம் ஓரிடத்திற்குச் செல்ல வேண்டும் என்றால், நம் உடம்பானது இயங்கி அச்செயலை நிறைவேற்றுகிறது. நாம் ஒருவருக்கு ஒரு பொருளை எடுத்துக் கொடுக்க வேண்டும் என்றால் நம் கைகள் இயங்கி அச் செயலை முற்றுவிக்கின்றன. உடம்பும் கருவிகளும் இவ்வாறு உதவினாலும் அச் செயல்கள் நம் செயல்களே. கொடுத்தலையும், எடுத்தலையும் செய்தவர் நாம். அதற்குக் கருவிகள் உடனின்று உதவின. அதுபோல, இறைவன் செய்யும் செயல்களுக்கு அவனது சத்தியே தனு, கரணம் முதலிய எல்லாமாய் நின்று செயல்களை முற்றுவிக்கும்.

நங்கையினால் நாம் அனைத்தையும் செய்கிறோம். அதுபோல, நங்கையினால் இறைவன் அனைத்தையும் செய்கிறான். முதலில் உள்ள நங்கை என்பது நம் கை எனப்பிரிந்து பொருள்தரும். பின்னுள்ள நங்கை என்பது பெண் எனப் பொருள்பட்டு இறைவனது சத்தியைக் குறிக்கும். இதனால், இறைவனே செயலைச் செய்பவனாக, சத்தி அதனை

முற்றுவிக்கும் துணையாக உள்ளமை விளங்கும். எத்திறம் நின்றான் ஈசன் அத்திறம் அவளும் நிற்பள் என்பது அறியத்தகும்.

ஞானத்தை உணர்த்தி வீடு அளித்தல் இறைவனது செயல். அச் செயலைச் சத்தியே உயிர்களிடத்தில் உடனாய் நின்று செய்கிறது. முன்னர் அது திரோதான சத்தி என்ற பெயரும் நிலையும் கொள்கிறது. மலங்களைச் செயற்படுத்தி அவற்றின் வழியில் நின்று உயிர்களைச் செலுத்துகிறது. பிறப்பு இறப்புக்களையும் இன்பத் துன்பங்களையும் மாறி மாறிக் கொடுக்கிறது.

திரோதான சத்தி எல்லாவுயிர்களிடத்திலும் ஒரே வகையாகச் செயற்படுவதில்லை. ஒவ்வொரு உயிரும் பக்குவ நிலையில் வேறுபாடு உடையது. ஆதலால், அந்தந்த உயிரின் நிலைக்கு ஏற்ப வெவ்வேறு வகையில் அவற்றைச் செலுத்தி அவற்றின் அறியாமையைச் சிறிது சிறிதாக நீக்கி அறிவைப் படிமுறையில் வளர்த்து வருகிறது. குமர குருபர சுவாமிகள் இதற்கு ஓர் அருமையான எடுத்துக் காட்டுத் தருகிறார்.

கைக்குழந்தை நோய்வாய்ப்படுகிறது. அந்நோய்க்குரிய மருந்தை நேரே கொடுத்தால் மென்மையான அக்குழந்தையின் பசுங்குடல் அம்மருந்தின் வேகத்தைத் தாங்காது. அதனை உணர்ந்த தாய் அம்மருந்தைத் தான் உண்டு பால் வழியாக அம்மருந்தின் பயனைக் குழந்தை பெறும்படி செய்கிறாள்.

**பாலுண் குழவி பசுங்குடர் பொறாதென**

**நோயுண் மருந்து தாய்உண் டாங்கு (சிதம்பர மும்மணிக் கோவை, செ.2)**

திரோதான சத்தியாகிய தாய் இதுபோன்ற செயலைத் தான் செய்கிறாள். அறியாமைதான் உயிர்களிடமுள்ள நோய். மெய்யறிவுதான் அதற்குரிய மருந்து. அம் மெய்யறிவை ஒரே காலத்தில் ஒருங்கே அளித்தால் உயிர் அதனை ஏற்றுக் கொள்ள இயலாது. உயிரின் பக்குவக் குறைபாடே அதற்குக் காரணம். ஆதலால் உலக நுகர்ச்சியாகிய பால் வழியாக மெய்யுணர்வைச் சிறிது சிறிதாகப் புகட்டி, அதன் அறியாமையைப் போக்கி, உண்மையைப் படி முறையில் உணரும்படி செய்கிறாள்.

எனவே, கூத்தப் பெருமானின் பக்கலில் நின்று ஆடல் காணும் அம்மை சிவகாமவல்லி திருக்கூத்தை முற்றக் கண்டு அதன் பயனாகிய

ஞானத்தைப் பல்லுயிர்களுக்கும் அவற்றின் பக்குவ நிலைகளுக்கு ஏற்றவாறு ஊட்டி, அவற்றின் பாசப் பற்றை அறுத்து, உணர்வைவளர்த்து வரும் தாய் ஆவாள் என்பது உளங் கொள்ளுதற்குரியது.

## சாதனம்

## திருவைந்தெழுத்து

## மந்திரங்களுள் தலையாயது

மந்திரம் என்பதற்கு நினைப்பவரைக் காப்பது என்பது பொருள். நினைப்பவரைக் காப்பது இறைவனது திருவருளேயன்றி வேறொன்று அன்று ஆதலால் உண்மையில் மந்திரமாய் இருப்பது திருவருளே. ஆயினும் அது சொற்களையும் சொற்றொடர்களையும் தனக்கு இடமாகக் கொண்டு அவற்றின் வாயிலாகவே புத்தி, முத்தி ஆகிய பயன்களைத் தருதலால், அச்சொற்களும் சொற்றொடர்களும் உபசார முறையில் மந்திரங்கள் எனப்படுகின்றன.

மந்திரங்களுள் தலையாயது திருவைந்தெழுத்து ஆகும். அது ஞானத்தைத் தரும் மறைமொழியாகும். வடமொழியில் அது பஞ்சாக்கரம் எனப்படும்.

முந்திய பகுதியில் திருவைந்தெழுத்து சிவனது உருவமாய் உள்ள நிலையை அறிந்தோம். இப்பகுதியில் திருவைந் தெழுத்தின் பொருள் நிலையையும், அதனை ஓதும் முறையையும் உணர்த்துகிறார் ஆசிரியர்.

### திருமுறைகளில்

நகாரம் முதலாக அமைவது தூல பஞ்சாக்கரம் எனப்படும். திருமுறைகளில் நமச்சிவாய என்னும் இத்தூல பஞ்சாக்கரமே மிகுதியாக எடுத்தோதப்பட்டுள்ளது. நமச்சிவாய என்று இடையில் மெய்யெழுத்தை மிகுத்துச் சொன்னாலும் மெய்யெழுத்து எண்ணப்படாமல் எழுத்து ஐந்து என்றே கொள்ளப்படும். இனி, சிகாரம் முதலாக அமைவது சூக்கும பஞ்சாக்கரம் எனப்படும். திருமுறைகளில் சிவாயநம என்னும் இச் சூக்கும பஞ்சாக்கரம் சிறுபான்மையாகச் சில இடங்களில் எடுத்தோதப்பட்டுள்ளது. நாலாந் திருமுறையில் ஈன்றாளுமாய் என்னும் திருப்பதிகத்தில்

**சித்தம் ஒருக்கிச் சிவாயநம என்று இருக்கினல்லால்**

**அத்தன் அருள்பெற லாமோ, அறிவிலாப் பேதை நெஞ்சே**

எனவும்,

**திருவாய் பொலியச் சிவாயநம என்று நீறணிந்தேன்**

**தருவாய் சிவகதி நீ பாதிரிப் புலியூர் அரனே**

எனவும், எட்டாம் திருமுறையில் திரு ஏசறவு என்னும் பகுதியில்

**நானேயோ தவம் செய்தேன் சிவாயநம எனப் பெற்றேன்** எனவும் வரும் இடங்களைச் சுட்டலாம்.

## திருவைந்தெழுத்தின் பொருள் நிலை

திருவைந்தெழுத்து மந்திரத்தை சிகாரம் முதலாகக் கொண்டு நோக்கினால் அம்மந்திரம் மூன்று கூறாய் நிற்பது புலனாகும்.

சிவா என்பது முதற்கூறு.

ய என்பது இரண்டாம் கூறு

நம என்பது மூன்றாம் கூறு

சிவா என்பது பதியையும், ய என்பது பசுவையும், நம என்பது பாசத்தையும் குறிக்கும். முதற் கூறில் உள்ள சிகாரம் சிவனையும் வா என்பது அவனது அருட்சத்தியையும் குறிக்கும். மூன்றாம் கூறில் உள்ள மகாரம் ஆணவத்தையும், நகாரம் திரோதான சத்தியையும் குறிக்கும். மாயை கன்மங்கள் திரோதான சத்திக்குக் கருவியாய் அதன் வழிபட்டு நிற்றலின் அதனுள் அடங்கும். நடுவில் உள்ள ய ஆகிய உயிர் இருபக்கமும் சென்று பாசத்தோடும் பதியோடும் நிற்கும் தன்மையுடையது.

யகாரம் ஆகிய உயிர் பின்னுள்ள மகாரம் ஆகிய ஆணவ மலத்துட்பட்டு அறியாமையில் அழுந்தியும், நகாரம் ஆகிய இறைவனது திரோதான சத்தியால் செலுத்தப்பட்டு மாயை கன்மங்களைப் பொருந்தி உலக நுகர்ச்சியில் அழுந்தியும் வரும். எனவே, நம ஆகிய ஈரெழுத்துக்களும் முறையே சகல நிலையையும் கேவல நிலையையும் குறிக்கின்றன என்பது புலனாகும். உயிர் நம வில் அழுந்தியிருக்கும் நிலையே கட்டு நிலையாகும்.

ய ஆகிய உயிருக்கு முன்னுள்ள சி, வா என்பவை தந்தையும் தாயுமாய் உள்ள சிவமும், அதனைப் பிரியாத திருவருளும் உயிருணர்வில் உடன் கலந்திருப்பதை உணர்த்தும். உயிர் தனக்கு முன்னாக உள்ள அம்மையப்பரைத் தன் அறிவின்கண் காண முற்படாமல், உலகத்தை மட்டுமே அறிந்து அனுபவித்து வருகிறது. உயிர் நம வை விடுத்து, வா ஆகிய திருவருளைச் சார்ந்து நிற்பதே சுத்த நிலையாகும். திருவருள் உயிரைச் சிவத்திடம் சேர்ப்பிக்கும். உயிர் சிவத்தில் அழுந்தி நிற்பதே இன்புறு நிலையாகும்.

## பஞ்சாக்கரத்தின் வகைகள்

தூல பஞ்சாக்கரம், சூக்கும பஞ்சாக்கரம் என்பவற்றின் பெயர்க் காரணத்தைப் பின்வருமாறு சொல்லலாம். திருவைந்தெழுத்தை நகாரம் முதலாகச் சொல்லுங்கால் அது ஒரு தொடர் மொழியாய் நின்று சிவனுக்கு வணக்கம் என்னும் ஒரு பொதுப்பொருளையே தந்து நிற்றலால் தூல பஞ்சாக்கரம் எனப்படுகிறது. சிகாரம் முதலாகச் சொல்லுமிடத்து ஒவ்வொர் எழுத்தும் ஒவ்வொரு நுண் பொருளைக் குறித்து, உயிர் பாசங்களின் நீங்கித் திருவருள் வழியாகச் சிவத்தை அடைதல் வேண்டும் என்னும் சிறப்புப் பொருளைத் தந்து நிற்றலால் அது சூக்கும பஞ்சாக்கரம் எனப்படுகிறது.

தூல பஞ்சாக்கரம் சமய தீக்கையிலும், சூக்கும பஞ்சாக்கரம் விசேட தீக்கையிலும் உபதேசிக்கப்படும் விசேட தீக்கை பெறுவோர் உலகியல் பற்று ஓரளவேனும் நீங்கியவராய் இருத்தல் வேண்டும். இதனால் சரியையில் நிற்போர் திருவைந்தெழுத்தை நகாரம் முதலாக உச்சரித்தல் வேண்டும் என்பதும், கிரியையிலும் யோகத்திலும் நிற்போர் சிகாரம் முதலாக உச்சரித்தல் வேண்டும் என்பதும் விளங்கும்.

இனி, உலகப்பற்று அற்று ஞானத்தில் வேட்கை கொண்டு ஞானநெறியிற் செல்லும் பக்குவர்க்கு உரியது முத்தி பஞ்சாக்கரம். நகாரம் மகாரம் ஆகிய பாச எழுத்துக்கள் நீங்க நிற்கும் சிவாய என்னும் மூன்றெழுத்தே முத்தி பஞ்சாக்கரம் எனப்படும். அதிசூக்கும பஞ்சாக்கரம் என்றும் கூறப்படும். ஞானாசிரியர் நிருவாண தீக்கை செய்து ஐந்தெழுத்தை இங்குக் கூறியவாறு மூன்றெழுத்தாக வைத்து உபதேசிப்பார். அவ்வுபதேசத்தைப் பெற்ற பக்குவ ஆன்மா அம்மூன்றெழுத்தை மட்டுமே மந்திரமாகக் கொண்டு, அதன் பொருளில் தன் அறிவை இடைவிடாது நிறுத்தி

அப்பொருளை உணர்ந்து உணர்ந்து நிற்கும். அதனால் வினை நீங்கும். வினை நீங்கவே திருவருள் இனிது விளங்கும். திருவைந்தெழுத்தைப் பற்றி இது காறும் கூறிய விளக்கத்தைக் கருத்திற் கொண்டு இனிச் செய்யுட்களை நோக்குவோம்.

**அஞ்செழுத்தைப் பற்றிய ஐயம்**

**39. நாதாந்த நாடகத்தை நன்றா அருள்செய்தீர்**

**ஓதீர் எழுத்து அஞ்சும் உள்ளபடி தீதுஅறவே**

**அஞ்சு எழுத்துஈது ஆகில் அழியும் எழுத்து ஆய்விடுமோ**

**தஞ்ச அருள்குருவே சாற்று.**

**பதவுரை**

**தஞ்ச** அடியேனுக்குப் புகலிடமாக உள்ள

**அருட்குருவே** அருள் உருவாகிய குருமுதல்வரே,

**நாத அந்த** நாதம் முடிவாக உள்ள முப்பத்தாறு தத்துவங்களையும் கடந்த

**நாடகத்தை** திருக்கூத்தின் இயல்பை

**நன்றா** யான் தெளியும் படி

**அருள்செய்தீர்** உணர்த்தினீர்.

**தீது அறவே** (இனி) மலவாதனை கெடும்படி

**எழுத்து அஞ்சும்** திருவைந்தெழுத்தின் பொருள் நிலையை

**உள்ளபடி** உள்ளவாறு

**ஓதீர்** உணர்த்தியருள வேண்டும்.

**ஈது அஞ்செழுத்து ஆகில்** இறைவனது திருப்பெயராகிய இஃது ஐந்து எழுத்து எனப்படுமாயின்

**அழியும் எழுத்தாய் விடுமோ** மற்ற எழுத்துக்கள் போல இவையும் அழியும் தன்மை உடையன ஆகுமோ?

**சாற்று** கூறியருள்வீராக.

## பொழிப்புரை

அடியேனுக்குப் புகலிடமாக உள்ள அருட்குருவே, அம்பலவாணர் ஆடும் திருக்கூத்தின் இயல்பை யான் தெளியும்படி உணர்த்தியருளினீர். இனி, திருவைந்தெழுத்தின் பொருள் நிலையை உள்ளவாறு உணர்த்தியருள வேண்டும். இறைவனது திருப் பெயர் எனப்படும் ஐந்தெழுத்து ஏனைய எழுத்துக்கள் போல அழியும் தன்மை உடையன ஆகுமோ? இவ் ஐயத்தை நீக்கியருள வேண்டும் என்று மாணவர் வேண்டுகிறார்.

## அழியா எழுத்து

**40. உற்ற குறிஅழியும் ஓதுங்கால் பாடைகளில்**

**சற்றும் பொருள்தான் சலியாது மற்றுஅது கேள்**

**ஈசன்அருள் ஆவி எழில்ஆர் திரோதமலம்**

**ஆசுஇல் எழுத்து அஞ்சின் அடைவு ஆம்**

## பதவுரை

**ஓதுங்கால்** ஆராய்ந்து சொல்லுமிடத்து

**பாடைகளில்** மொழிகளில்

**உற்ற** பொருளுக்கு அமைந்த

**குறி** பெயராகிய குறி

**அழியும்** அழிந்து போகும். பொருள்களும் அங்ஙனமே.

(ஆனால் சிவனது பெயராகிய அஞ்செழுத்து அழியா இயல்பினது. அவ்வாறே)

**பொருள்தான்** அஞ்செழுத்தால் உணர்த்தப்படும் பொருளும்

**சற்றும்** சிறிதும்

**சலியாது** அழிவதில்லை

**மற்று அது கேள்** அவ்வஞ்செழுத்தின் பொருள் நிலையைக் கேட்பாயாக.

**ஈசன்** சிவனும்

**அருள்** திருவருளும்

**ஆவி** உயிரும்

**எழிலார் திரோதம்** எழுச்சியுள்ள மறைத்தற் சத்தியும்

**மலம்** மூல மலமும்

**ஆசு இல்** குற்றமில்லாத

**எழுத்து அஞ்சின்** திருவைந்தெழுத்தின்

**அடைவு ஆம்** பொருள்களாம்.

## பொழிப்புரை

பெயர்கள் யாவும் எழுத்துக்களால் ஆனவை. எழுத்துக்கள் தோற்றமும் இறுதியும் உடையன. ஆகவே அனைத்துப் பெயர்களும் தோன்றி அழிவன ஆகின்றன. ஆனால் சிவ நாமமாகிய ஐந்து எழுத்துக்கள் ஏனைய எழுத்துக்கள் போல் ஆவன அல்ல. அவை அழியா இயல்பின. அவற்றால் குறிக்கப்படும் பொருள்கள் சிவனும், திருவருளும், உயிரும், திரோதான சத்தியும், மலமும் ஆகும்.

## விளக்கம்

திருவைந்தெழுத்தைச் சிகாரம் முதலாக வைத்து இப்பொருள்களைக் கண்டு கொள்க.

## நிற்கும் முறை, ஓதும் முறை

**41. சிவனருள் ஆவி திரோதம்மலம் ஐந்தும்**

**அவன் எழுத்து அஞ்சின் அடைவாம் இவன்நின்று**

**நம்முதலா ஓதில் அருள் நாடாது நாடும் அருள்**

**சிம்முதலா ஓதுநீ சென்று**

### பதவுரை

**சிவன் அருள் ஆவி** திரோதம் மலம் ஐந்தும் மேற்கூறியபடி சிவன், திருவருள், உயிர், மறைத்தற் சத்தி, மூல மலம் ஆகிய ஐந்தும்

**அவன் எழுத்து** அஞ்சின் அச்சிவனது பெருநிலையை நினைப்பிக்கும் ஐந்தெழுத்தின்

**அடைவு ஆம்** பொருளாகும்

**இவன்** சாதகன்

**நின்று** உலகியலில் நின்று

**ந முதலா ஓதில்** நகாரத்தை முதலாக வைத்து ஓதும் முறையை மேற்கொண்டால்

**அருள் நாடாது** அவனது உணர்வில் திருவருள் வெளிப்படாது.

**(ஆதலால்)**

**நீ** திருவருளைத் தலைப்பட விரும்புகின்ற நீ

**சென்று** உலகியலின் நீங்கிச் சென்று, வீட்டு நெறியில் உன் உணர்வை முழுதும் ஈடுபடுத்தி நின்று

**சி முதலா ஓது** சிகாரத்தை முதலாக வைத்து ஓதுவாயாக.

**அருள் நாடும்** அப்போது திருவருள் பாசமாம் பற்றை அறுத்து உன் உணர்வில் வெளிப்பட்டுத் தோன்றும்

## பொழிப்புரை

மேற்கூறியபடி திருவைந்தெழுத்தில் ஒவ்வோர் எழுத்திற்கு ஒவ்வொரு பொருள் அமையும். திருவருளைப் பெற விரும்புவோன் உலகியலில் நின்று நகாரத்தை முதலில் வைத்து ஓதினால் திருவருள் வெளிப்படாது. உலகியலிலிருந்து நீங்கி, வீட்டு நெறியில் அறிவை நெறிப்படுத்தி நின்று, சிகாரத்தை முதலில் வைத்து ஓதினால் திருவருள் உன் உணர்வில் வெளிப்பட்டுத் தோன்றும். ஆகலின் நீ அவ்வாறு நின்று, அவ்வாறு ஓதுக.

## விளக்கம்

நகாரம் முதலாக வைத்து ஓதுவார்க்கு உலகப் பயன் கிடைக்கும். உலகப் பயனில் நாட்டமின்றிப் பிறவி நீக்கத்தை வேண்டுவோர் சிகாரம் முதலாக ஓதுதல் வேண்டும் என்பது இங்கு உணர்த்தப்பட்டது.

## பயன்

**42. அண்ணல் முதலா அழகுஆர் எழுத்துஐந்தும்**

**எண்ணில் இராப்பகல் அற்றஇன்பத்தே நண்ணி**

**அருளானது சிவத்தே ஆக்கும் அணுவை**

**இருளானது தீர இன்று**

## பதவுரை

**அழகு ஆர்** மெய்யுணர்ந்தோர் விரும்பும் தன்மை உடைய

**எழுந்து ஐந்தும்** திருவெழுத்து ஐந்தையும்

**அண்ணல் முதலா** அண்ணலாகிய சிவ பெருமானைக் குறிக்கும் சிகாரம் முதலாக வைத்து

**எண்ணில்** எண்ணி வந்தால்

**அருளானது** அந்நிலையில் வெளிப்பட்டுத் தோன்றும் திருவருள்

**அணுவை** உயிரை

| | |
|---|---|
| **இராப் பகல் அற்ற** | கேவலமும் சகலமும் நீங்கிய |
| **இன்பத்தே** | இன்ப ஒளி தோன்றும் அருள் நிலையில் |
| **நண்ணி** | நண்ணவைத்து, |
| **இன்று** | அப்பொழுது |
| **இருளானது** | ஆணவ மலத்தின் வாசனை |
| **தீர** | பற்றறக் கழிய, |
| **சிவத்தே** | முடிநிலையாகிய சிவானந்தத்தை |
| **ஆக்கும்** | நுகரச் செய்யும். |

## பொழிப்புரை

திருவெழுத்து ஐந்தையும் அண்ணலாகிய சிவனைக் குறிக்கும் சிகாரம் முதலாக வைத்து இடையறாது எண்ணி வந்தால், திருவருள் வெளிப்பட்டு உயிரைக் கேவலமும் சகலமும் நீங்கிய அருள் நிலையில் சேர்க்கும்; எல்லையற்ற சிவானந்தத்தை நுகரச் செய்யும்; அந்நிலையில் இருளான ஆணவ மலம் பற்றறக் கழியும்.

## விளக்கம்

### இராப்பகல் அற்ற இடம்

அறியாமையைக் கேவலம் என்றும், அறிவுநிலையைச் சகலம் என்றும் நூல்கள் குறிப்பிடும். மேலும், அறியாமையாகிய கேவலத்தை இரவு என்று குறியீட்டினாலும், அறிவு நிலையாகிய சகலத்தைப் பகல் என்ற குறியீட்டினாலும் உணர்த்தும். புறவுலகில் இரவும் பகலும் மாறி மாறி வருவதைப் போல உயிருணர்வில் கேவலமும் சகலமும் ஆகிய அறியாமையும் அறிவும் ஆகிய இரவும் பகலும் மாறி மாறி வருகின்றன.

உயிருக்கு அமைந்த சார்புகள் இரண்டு. ஒன்று, அசத்தாகிய கருவி கரணங்களின் சார்பு. மற்றொன்று, சத்தாகிய திருவருட் சார்பு. அசத்தாகிய ஐம்பொறி முதலிய கருவிகளின் சார்பு இடையில் வந்தது. ஆகவே அஃது உயிருக்குச் செயற்கையான சார்பாகும். திருவருட் சார்பே என்றும் உள்ள இயற்கையான சார்பாகும்.

செயற்கையாகிய கருவிகளின் சார்பு நீங்கினால் அப்பொழுதே உயிர் திருவருட் சார்பைப் பெற்றுவிடும். மனம் முதலிய கருவிகள் நம்மோடு எப்போதும் உடனாகவே நிற்கின்றனவே; அவற்றை விட்டு நீங்குவது எப்படி? என வினவலாம்.

இங்கே, நீங்குதல் என்றால் அறிவால் நீங்குதல் ஆகும். அஃதாவது, கருவி கரணங்கள் நமக்கு வேறானவை எனத் தெளிய உணர்ந்து, அவற்றினிடத்துப் பற்றுச் செய்யாது, அவற்றின் வசப்படாது நிற்றலாகும்.

இங்கு ஓர் ஐயம் எழலாம். ஐம்பொறி, மனம் முதலிய கருவிகள் நீங்கினால் உயிர் யாதொன்றையும் அறியமாட்டாது கேவலமாகிய அறியாமையை அல்லவா தலைப்படும்? கருவிகள் நீங்க நீங்க உயிர் உறக்கம் பேருறக்கம் முதலிய நிலைகளை அடைவது இதைத்தானே காட்டுகிறது. அங்ஙனமாக, உயிர் கருவிகளை நீங்கினால் திருவருட் சார்பைப் பெறும் என்று கூறுவது எவ்வாறு பொருந்தும்? என்பதே அவ் ஐயம்.

ஓர் உண்மையைத் தெரிந்து கொண்டால் இவ்ஐயம் நீங்கிவிடும். கருவிகள் சோர்வுற்றுச் செயற்படாமல் மடங்கித் தாமாகவே நீங்கும் பொழுதுதான் உயிருக்கு அறியாமை உண்டாகும். அவ்வாறின்றிக் கருவிகள் நன்கு செயற்படும் பொழுது, அவை நாமல்ல; நமக்கு வேறானவை என்று கண்டு நீங்கினால், அவற்றின் வசப்படாது நின்றால் உயிர் திருவருளைச் சேர்ந்து விடும்.

இங்ஙனம் கருவிகளையும், அவற்றால் வரும் புலன் உணர்வுகளையும் நீங்கி உயிர் திருவருளைச் சேர்ந்து நிற்றலையே இரவு பகல் அற்ற இடத்தில் இருப்பதாக நூல்கள் கூறும். திருவருட் சார்பு இரவு பகலற்ற இடமாதல் எப்படி என்பதை நோக்குவோம்.

உயிர் திருவருள் ஒளியில் நிற்கும் பொழுது அறியாமையாகிய கேவலம் எப்படித் தலைகாட்டும்? ஆகவே அஃது இரவு என்பது நீங்கிய இடம் ஆகிறது. அதுகாலை கருவிகள் செயற்பட்டுச் சிற்றறிவைத் தருமாயினும் திருவருளால் வியாபக அறிவு விளங்கிய பிற்பாடு அச்சிற்றறிவு என்ன பயனைச் செய்யும்? எல்லாவற்றையும் விளங்கக் காட்டும் சூரியவொளி வந்த பின்னர் எரிகின்ற விளக்கின் சுடர் போன்றது அச் சிற்றறிவு எனலாம். உயிர் பேரறிவாகிய திருவருள் ஒளியில் நிற்கும் பொழுது சிற்றறிவாகிய

சகலம் எப்படித் தலைகாட்டும்? ஆகவே அது பகல் என்பது நீங்கிய இடமாகிறது.

இவ்வாறு திருவருள் ஞானத்தால் உயிர்க்கு அறியாமையும், சிற்றறிவும் நீங்கி விடுதலால் திருவருட் சார்பு இரவு பகலற்ற இடம் எனக் கூறப்படுகிறது. இதனையே இச்செய்யுள் இராப் பகலற்ற இன்பத்தே எனக் குறிப்பிடுகிறது.

## இருள் நீக்கமும் இன்பத் தோற்றமும்

மேற்கூறியவாறு, உலக வாழ்வில் உள்ள போதே திருவருளில் அழுந்தி நிற்கும் நிலை துரிய அருள்நிலை எனப்படும். இந்நிலை முதல்வனது அருளைச் சேர்ந்த நிலையே தவிர, முதல்வனைச் சேர்ந்த நிலையாகாது. இதற்கு ஓர் உவமை கூறுவோம்.

கண் விளக்கொளியோடு கூடி அதனால் தன்னிடத்துள்ள இருள் நீங்கப் பெறுகிறது. அந்நிலையில் கண் விளக்கொளியைக் கண்டதேயன்றி விளக்கொளிக்கு முதலாய் உள்ள விளக்கைக் கண்டது ஆகாது. கண் முதலிற் கண்ட விளக்கொளி வழியாகப் பின்னர் விளக்கை நோக்கிக் காணும் போதே அது விளக்கைக் கண்ட காட்சியாகிறது. அதுபோல, உயிர் திருவருளோடு கூடிய நிலையில் அது திருவருளைக் கண்ட காட்சியே தவிரத் திருவருளுக்கு முதலாகிய சிவத்தைக் கண்ட காட்சியாகாது. உயிர் முதலிற் கண்ட திருவருள் வழியாகப் பின்னர் சிவத்தை நோக்கிக் காணும் போதே அது சிவத்தைக் கண்ட காட்சியாகிறது.

கண் விளக்கொளியைச் சேர்ந்து அதனால் தன்னிடத்துள்ள இருளை நீக்கிக் கொள்வது போல உயிர் திருவருளைச் சேர்ந்து தன்னிடத்துள்ள ஆணவ மலமாகிய இருள் நீங்கப் பெறுகிறது. இதனையே, இருளானது தீர இன்று என்று குறிப்பிட்டது இவ்வுண்மை விளக்கச் செய்யுள்.

மேற்கூறிய கண் உவமையில், கண் பெறும் ஒளிவிளக்கமும், இருள் நீக்கமும் உடன் நிகழ்ச்சியாய் ஒருங்கு நிகழ்கின்றன. ஆயின் அவற்றோடு விளக்கினது காட்சியும் உடன் நிகழவில்லை என்பது அறியற்பாலது. அதுபோல, உயிரிடத்து அருள் விளக்கமும் ஆணவ மலமாகிய இருள் நீக்கமும் உடன் நிகழுமேயன்றிப் பேரின்பமாகிய ஆனந்த விளக்கம் உண்டாகாது. ஆனந்த விளக்கம் அருளின் வழியே அவ்வருளுக்கு

முதலாய் உள்ள சிவத்தை அணைதலினாலேயே உண்டாகும். முன்னர் நிகழும் அருள் விளக்கத்தில் தோன்றுவது சுகப் பிரபை எனப்படும் இன்பத் தோற்றமே யன்றிப் பரம சுகம் எனப்படும் பேரின்பம் அன்று.

இச்செய்யுளில், இராப் பகலற்ற இன்பத்தே நண்ணி என்ற வரியில் இன்பம் என்று குறிக்கப் பெறுவது இன்பத் தோற்றத்தை எனவும், அடுத்த அடியில் சிவத்தே ஆக்கும் என்றது பின்னர் விளையும் சிவானந்தமாகிய பேரின்பத்தை எனவும் கொள்ளுதல் வேண்டும்.

உயிர் திருவருளைச் சேர்தலினால் இருள் நீக்கமும் இன்பத் தோற்றமும் உண்டாகும் என்பதும், முடிவாகச் சிவத்தை அணைதலினால் பேரின்பத்தை நுகரும் என்பதும் இச் செய்யுளில் உணர்த்தப் பெற்றன.

## முத்தி பஞ்சாக்கரம்

**43. ஆதி மலம் இரண்டும் ஆதியா ஓதினால்**

**சேதியா மும்மலமும் தீர்வுஆகா போதம்**

**மதிப்புஅரிதாம் இன்பத்தே வாழலாம் மாறி**

**விதிப்படி ஓதுஅஞ்சு எழுத்துமே**

### பதவுரை

| | |
|---|---|
| **ஆதி** | திரோதான சத்தியைக் குறிக்கும் நகாரமும் |
| **மலம்** | மலத்தைக் குறிக்கும் மகாரமும் ஆகிய |
| **இரண்டும்** | இரண்டு எழுத்துக்களையும் |
| **ஆதியா** | முதலில் வைத்து |
| **ஓதினால்** | உச்சரித்தால் |
| **சேதியா** | எளிதில் அறுந்தெறிய முடியாத |
| **மும்மலமும்** | மும்மலங்களும் |
| **தீர்வு ஆகா** | அதனால் நீங்க மாட்டா. |

**(ஆதலால்)**

**அஞ்செழுத்துமே** திருவைந்தெழுத்தை

**மாறி** சிகாரம் முதலாக மாற்றி

**விதிப்படி** பாசத்தை விட்டுப் பதியிலே சேர்தலாகிய அப்பொருளைத் தரும் முறையிலே முத்தி பஞ்சாக்கரமாகக் கொண்டு

**ஓது** நீ உச்சரிப்பாயாக.

**(அங்ஙனம் உச்சரித்தால்)**

**போதம்** சீவ போதம் எனப்படும் சுட்டறிவினால்

**மதிப்பரிதாம்** அளந்தறிதற்கு அரியதாகிய

**இன்பத்தே** பேரின்ப வீட்டில்

**வாழலாம்** நிலைத்து வாழும் பெருவாழ்வைப் பெறலாம்.

## பொழிப்புரை

ஆதி எனப்படும் திரோதான சத்தியைக் குறிக்கும் நகாரமும், மலத்தைக் குறிக்கும் மகாரமும் ஆகிய இரண்டு எழுத்துக்களையும் முதலில் வைத்து ஓதினால், மும்மலங்களும் அவற்றால் உண்டாகும் துன்பங்களும் நீங்க மாட்டா; ஆதலால் சிகாரம் முதலாக மாற்றி முத்தி பஞ்சாக்கரமாகக் கொண்டு விதிப்படி உச்சரிப்பாயாக. எண்ணரிய பேரின்ப வீட்டில் நீ வாழலாம்.

## விளக்கம்

திருவைந்தெழுத்தில் நகார, மகாரங்கள் ஆகிய பாச எழுத்துக்கள் முன்நிற்க ஓதிவரின் பாச நிலை நீங்காது.

முற்பட்டு நிற்பதே தலைமைப் பொருளாகும். அதன்பின் நிற்பது அடிமைப் பொருளாகும். அம்முறையில் பாசங்களே முற்பட்டு நிற்க, உயிர் அவற்றின் பின் நின்றால் உயிர் பாசங்களுக்கு அடிமைப்பட்டதாய் அவற்றினின்றும் மீள இயலாது. ஆதலால் பாசங்களின் வழிப்பட்ட இந்நிலை மாற வேண்டும். அது பற்றியே மாறி விதிப்படி ஓது அஞ்செழுத்துமே என்றார் நம் ஆசிரியர்.

சிகாரத்தை முதலாகக் கொண்டு ஓதிவரின், சிவமும் அருளும் முன் நிற்க, உயிர் அவற்றின் பின் நிற்பதாய் அமையும். இங்ஙனம் சிவமும் அருளும் தலைமைப் பொருளாய் முன் நிற்க, உயிர் அவற்றிற்கு அடிமைப்பட்டு அவற்றின் வழி நின்று பாசங்கள் நீங்கப் பெறும். இதனையே இச்செய்யுள் வலியுறுத்துகின்றது.

உறுதியும் தெளிவும் உண்டாதற் பொருட்டு முன்னே கூறியதை மீண்டும் கூறியுள்ளார்.

இங்கே ஓதுதலாவது, அறிவால் கணித்தல், அறிவால் கணித்தல் என்றால் என்ன? உச்சரித்தலே இல்லாமல், மந்திரம் கருத்தளவாய் நிற்க, அதனால் நினைப்பிக்கப்படும் பொருளில் தன் அறிவை இடைவிடாது நிறுத்துதலே கணித்தல் எனப்படும்.

## திருவைந்தெழுத்தின் சிறப்பு

**44. அஞ்செழுத்தே ஆகமமும் அண்ணல் அருமறையும்**

**அஞ்செழுத்தே ஆதிபுராணம் அனைத்தும் அஞ்சு எழுத்தே**

**ஆனந்த தாண்டவமும் ஆறாறுக்கு அப்பாலாம்**

**மோனந்த மாமுத்தி யும்**

### பதவுரை

**அண்ணல்** (உயிர்கள் உய்தற் பொருட்டு) இறைவன் அருளிச் செய்த

**ஆகமமும்** சிறப்பு நூலாகிய சிவாகமங்களும்

**அருமறையும்** பொது நூலாகிய வேதங்களும்

**அஞ்செழுத்தே** திருவைந்தெழுத்தின் பொருளையே விளக்குவன.

**ஆதிபுராணம்** அனைத்தும் தலையாய புராணங்கள் எல்லாமும்

**அஞ்செழுத்தே** திருவைந்தெழுத்தின் விளக்கமேயாகும்.

**ஆனந்த தாண்டவமும்** (இன்புறுநிலையைத் தலைப்பட்டவர் பொருட்டு) கூத்தப் பெருமான் இயற்றும் ஆனந்த நடனத்தை நினைப்பிப்பதும்

| | |
|---|---|
| **அஞ்செழுத்தே** | திருவைந்தெழுத்தேயாகும். |
| **ஆறாறுக்கு** | முப்பத்தாறு தத்துவங்களுக்கும் |
| **அப்பால் ஆம்** | அப்பாற்பட்டதாய் |
| **மோனந்த** | மோனநிலையைத் தலைப்பட்டு எய்தும் |
| **மாமுத்தியும்** | பரமுத்தி நிலையை அடைவிப்பதும் |
| **(அஞ்செழுத்தே)** | திருவைந்தெழுத்தேயாகும். |

## பொழிப்புரை

சிவபெருமான் அருளிச் செய்த சிறப்பு நூலாகிய ஆகமங்களும், பொது நூலாகிய வேதங்களும் ஆகியவை திருவைந்தெழுத்தின் பொருளை விளக்குவனவேயாகும். தலையாய புராணங்கள் அனைத்தும் திருவைந்தெழுத்தின் விளக்கமேயாகும். கூத்தப் பெருமானின் ஆனந்த நடனமும் திருவைந்தெழுத்தின் உட்பொருளைத் தெரிவிப்பதேயாகும். முப்பத்தாறு தத்துவங்களாகிய படிகளைக் கடந்து எய்தும் பரமுத்தி நிலையை அடைவிப்பதும் திருவைந்தெழுத்தேயாகும்.

## பயன்

## தானால் (முத்தி நிலை)

இனி, தானால் ஆகிய முத்தி நிலையை விளக்கப் புகுகின்றார் ஆசிரியர்.

### பாசச் சார்பும் சிவச் சார்பும்

உயிருக்குத் தனித்த இருப்பு என்பது எக்காலத்திலும் இல்லை. உயிர் எந்நிலையிலும் ஏதேனும் ஒன்றைச் சார்ந்தே நிற்கும். திருவைந்தெழுத்தில் அமைந்துள்ளவாறு, பிறப்பு நிலையில் அது பாசப் பொருள்களைச் சார்ந்து நிற்கிறது. பாசமாகிய சார்பு நீங்குமானால் அது சிவமாகிய சார்பைப் பெற்றுவிடும். ஊசலில் ஆடுகின்றவன் கயிறு அறுந்த அக்கணமே தரையில் விழுகிறான். தரை அவனைத் தாய் போலத் தாங்கிக் கொள்கிறது. அதுபோலப் பாசப்பற்று அறுமாயின் உயிருக்கு இறைவனையன்றி வேறு சார்பு இல்லை; புகல் இல்லை.

பாசத்தோடு கூடியிருந்தபோது உலகப் பொருள்களையே அறிந்து உலகப் பொருள்களையே இச்சித்து உலகப் பொருள்களையே அனுபவித்து வந்த உயிர், பாசச் சார்பு நீங்கி இறைவனைச் சார்ந்த இந்நிலையில் இறைவனைத் தவிர வேறொரு பொருளை அறிதலும் இல்லை. விரும்புதலும் இல்லை, அனுபவித்தலும் இல்லை, அது இறைவனையே அறிந்து இச்சித்து அனுபவித்து நிற்கும்.

### முத்தி நிலையில் உயிர் தனித்த பொருளாய்க் காணப்படாமை

இறைவனை அனுபவிக்கும் நிலையில் உயிர் தான் என வேறு நில்லாது தனித்த ஒரு முதலாய்க் காணப்படாது இறைவனது நிறைவினுள் அடங்கிச் சிறிதும் புலப்படாது நிற்கும்; தன்னையே தான் மறந்து இறையனுபவத்தில் அழுந்தி நிற்கும்.

**தன்னை மறந்தாள் தன் நாமம் கெட்டாள்**
**தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே**

எனத் தலைவியொருத்தியின் தன்மையைக் கூறி இறையனுபத்தின் நிலையை விளங்க வைத்தார் நாவுக்கரசர்.

பாசச் சார்பு நீங்கி இறைவனைச் சார்ந்து இறையின்பத்தை அனுபவிக்கின்ற முத்திக் காலத்தில் உயிர் தன்னையிழந்து தான் சிறிதும் தோன்றாதிருக்க, சிவம் ஒன்றுமே விளங்கி நிற்கும். இதனை ஓர் எடுத்துக்காட்டினால் விளக்கலாம்.

உப்பானது நீரில் கலந்தபோது அந்நீரோடு ஒன்றாய் நிற்கும். உப்புக் கண்ணுக்குப் புலனாகாது. நீராகிய ஒரு பொருளே உள்ளதுபோலத் தோன்றும். அதுபோல உயிர் சிவத்தில் அழுந்தி வேறு காணப்படாது நிற்கச் சிவம் ஒன்றுமே உள்ளதுபோலத் தோன்றும்.

**சிவத்தோடு ஒன்றி நின்று அனுபவித்தல்**

முத்தி நிலையில் உயிரும் சிவமும் உள்ளன ஆயின் பிரித்தறியவாராது ஒன்றாய் உள்ளன. உயிர் சிவனது திருவருள் வியாபகத்துள் அடங்கித் தனித்த ஒரு முதலாய்க் காணப்படாது நிற்றலே உயிர் சிவத்தோடு ஒன்றாதல் அல்லது இரண்டறக் கலத்தல் ஆகும். உயிரானது சிவத்தோடு ஒன்றாகி இல்லாமற் போய்விடவில்லை. உயிர் சிவத்தோடு ஒன்றி நின்று அதனையே இடையறாது உணர்ந்து அனுபவிக்கின்றது.

அவ்வாறு ஒன்றி நிற்பது எது போலும் என்று காட்டுதற்குப் பல உவமைகளை எடுத்துக்கூறுகிறார் ஆசிரியர். அவற்றை இனிக் காண்போம்.

**சிவத்தில் அத்துவிதமாய் இயைந்து நிற்றற்கு உவமைகள்**

45. **முத்தி தனைஅடைந்தோர் முந்துபழம் போதுஅங்கி**

**வித்தகமாம் வீணை இவையிற்றின் ஒத்த**

**இரதம்மணம் வெம்மை எழில்நாதம் போல**

**விரவுவர்என்று ஓதும் விதி**

**பதவுரை**

**முத்திதனை அடைந்தோர்** தன்னிடத்துப் பாசம் இல்லை யாக, தானும் சிவனுமேயாய் வேறற நிற்கின்ற பரமுத்தி நிலையை அடைந்தோர்

**முந்து பழம்** முதிர்ந்த பழம்

**போது** மலர்

| | |
|---|---|
| **அங்கி** | நெருப்பு |
| **வித்தகமாம் வீணை** | சிறந்த வீணை |
| **இவையிற்றின்** | ஆகிய இவற்றில் |
| **ஒத்த** | முறையே அடங்கிப் பிரிப்பின்றி இயைந்திருக்கும் |
| **இரதம்** | சுவையும் |
| **மணம்** | மணமும் |
| **வெம்மை** | சூடும் |
| **எழில் நாதம்** | இன்னிசையும் |
| **போல** | போல |
| **விரவுவர்** | சிவத்தில் இயைந்து அறிவடங்கிப் பிரிப்பின்றி நிற்பர். |
| **என்று** | என |
| **விதி** | முதல்வன் விதித்த நூல்கள் |
| **ஓதும்** | கூறும். |

**பொழிப்புரை**

பேரின்ப முத்தியை அடைந்த பெருமக்கள் பழத்திற் சுவைபோலவும், பூவில் மணம் போலவும், நெருப்பில் வெம்மை போலவும், வீணையில் இன்னிசை போலவும் சிவ முதற் பொருளோடு ஒன்றிப் பிரியாது இயைந்து நிற்பர். இவ்வாறு சிவாகமங்கள் கூறும்.

**விளக்கம்**

இரு பொருள்கள் பிரிப்பின்றி ஒற்றுமைப்பட்டு எவ்விடத்தும் உடனாய் நிற்பதாகிய இயைபு அத்துவிதம் (அத்வைதம்) எனப்படும். ஆன்மாவும் சிவமும் நிற்கின்ற முறைமை இதுவேயாகும்.

பாசத்தோடு கூடிய கட்டு நிலையிலும் ஆன்மா சிவத்தோடு இவ்வாறுதான் இயைந்து நிற்கிறது. ஆனால் இவ்வுண்மையை உணரவொட்டாதபடி ஆணவ மலம் ஆன்ம அறிவை மறைத்திருந்தது. ஆணவமே ஆன்மாவுக்கு நான் என்னும் உணர்வை உண்டாக்கி நான் ஒரு தனி முதல் என்று கருதும்படி செய்தது. அதனால் ஆன்மா தன்னை வேறான ஒரு பொருள் என்றே எண்ணி வந்தது. அவ்வாறு நம்பும்படி செய்தது ஆணவம். ஆணவம் செய்கிற வேலை இது!

பாசம் நீங்கிய முத்தி நிலையில்தான் ஆன்மா தனக்கும் இறைவனுக்கும் உள்ள அத்துவித உறவை உள்ளவாறு உணரும். நான் என்ற தற்போதத்தை விட்டு, எச்செயலையும் இறைவன் செயலாகக் கொண்டு அவனிடத்தில் அடங்கி நிற்கும். இவ்வாறு ஆன்மா அவனோடு ஒன்றிப் பிரியாதிருக்கும் முறைமையை உணர்த்துதற்கு வந்தனவே பழத்திற் சுவை முதலாகிய இவ்வுவமைகள்.

இவ்வுவமைகளை நோக்குகிற போது பின்வருமாறு ஓர் ஐயம் எழலாம். பழம் முதலியவை குணியாகிய பொருள்கள். சுவை முதலியவை அவற்றின் குணங்கள். இவ்வாறு குணியும் குணமுமாக உவமைகள் அமைந்திருப்பதனால், சிவம் குணியும் ஆன்மா அதன் குணமும் போலும் என்ற ஐயம் ஏற்படலாம். அவ்வாறு எண்ணி விடுதல் கூடாது. சிவமும் ஆன்மாவும் குணியும் குணமும் அல்ல. அவை தனித்தனிப் பொருள்கள்; வெவ்வேறு குணிகள். அவ்விரண்டும் தம்முட் பிரிப்பின்றி இயைந்து நிற்பன என்னும் அளவுக்கே இவ்வுவமைகளைக் கொள்ளுதல் வேண்டும்.

## மேலும் ஓர் உவமை

**46. தத்துவங்கள் எல்லாம் சகசமாய் ஆன்மாவில்**

**பெத்தத்தில் நிற்கின்ற பெற்றிபோல் முத்திதனில்**

**சித்தமலம் அற்றார் செறிந்திடுவர் என்றுமறை**

**சத்தியமா ஓதியிடும் தான்**

## பதவுரை

**பெத்தத்தில்** கட்டு நிலையில்

**தத்துவங்கள் எல்லாம்** ஆன்மாவுக்குக் கருவிகரணங்களாய் அமைந்த எல்லாத் தத்துவங்களும்

**ஆன்மாவில்** அவ்வான்மாவிடத்தில் (தாம் வேறு, ஆன்மா வேறு என்று பிரித்தறிய வாராமல், அவ்வான்மாவே என்னும்படி அதனோடு ஒற்றுமைப்பட்டு)

**சகசமாய்** இயல்பாய் இயைந்து

**நிற்கின்ற பெற்றி போல்** நிற்கின்ற தன்மை போல,

**முத்தி தனில்** பரமுத்தியில்

**சித்த மலம்** தமது அறிவைப் பற்றியிருந்த மும்மலங்களும்

**அற்றார்** அடியோடு நீங்கப்பெற்ற முத்தர் (தாம் வேறு, சிவம் வேறு என்று பிரித்தறிய வாராமல், சிவமே என்னும் படியாக)

**செறிந்திடுவர்** சிவத்திற் பொருந்தித் தாம் சிறிதும் தனித்துக் காணப்படுதல் இன்றி அதனிற் செறிந்து நிற்பர்

**என்று** என இவ்வாறு

**மறை** வேதாகமங்கள்

**சத்தியமா** உண்மையாக

**ஓதியிடும்** சொல்லும்

## பொழிப்புரை

கட்டு நிலையில் உயிருக்கு உதவும் கருவிகளாக வந்த தத்துவங்கள் எல்லாம் உயிருக்கு வேறாய் நில்லாமல், உயிரே என்னும்படி இயைந்து ஒற்றுமைப்பட்டு நிற்கின்றன. அதுபோல, முத்தி நிலையில் மலம் நீங்கிய ஆன்மாக்கள் சிவத்திற் பொருந்தித் தாம் வேறாய் நில்லாமல் சிவமே

எனும்படி அதனோடு ஒன்றி இயைந்திருப்பர். இவ்வாறு ஆகமங்கள் உறுதிபடக் கூறும்.

## விளக்கம்

## சிவமாதல்

உயிர் சிவமாதல் என்பதனை இங்கே விளங்கிக் கொள்ளுதல் வேண்டும். உயிர் படிகம் போன்றது. எதை எதைச் சார்கிறதோ அதன் அதன் தன்மையைப் பெற்று அதுவாகவே நிற்றல் இரண்டுக்கும் உண்டு. சார்ந்ததன் வண்ணமாம் இயல்புடைய படிகம் நீலமணியைச் சார்ந்தபோது அதன் நிறம் முழுவதையும் கவர்ந்து நீலமணியாகவே இருக்கும். பின் அந்நிலையினின்றும் நீங்கி மாணிக்க மணியைச் சார்ந்தால் அப்படிகம் மாணிக்க மணியாகவே நிற்கும். அதுபோல, சார்ந்ததன் வண்ணமாம் இயல்புடைய ஆன்மா பாசத்தோடு சேர்ந்து பாசமாய் நிற்கும். நமக்கு வேறாகிய உடம்போடு கூடி உடம்பாகவே நிற்கிறோம் அல்லவா? நமக்கு வேறாகிய கண். செவி முதலிய கருவிகளோடு கூடி அவையாகவே நிற்கிறோம் அல்லவா? கண் கண்டதை நான் கண்டேன் என்று தானே கூறுகிறோம். செவி கேட்டதை நான் கேட்டேன் என்று தானே கூறுகிறோம். நமக்கு வேறாகிய சொத்து சுகங்களோடு கூடி அவையே நாமாக நிற்கிறோம் அல்லவா? இதுதான் பாசமாய் நிற்றல். இவ்வாறு நின்ற நிலையினின்று நீங்கி உயிர் சிவத்தைச் சார்ந்த போது சிவத்தின் தன்மையைப் பெற்றுச் சிவமாகி நிற்கும்.

உயிர் சிவமாதல் என்றால் ஒரு பொருள் மற்றொரு பொருள்ஆதல் அன்று. நீலமணியைச் சார்ந்து நீலமணியாய் நின்ற படிகம் மாணிக்க மணியைச் சார்ந்து மாணிக்க மணியாய் நிற்பது போன்றதேயாகும்.

## முத்திக்கு உவமை

மெய்கண்ட தேவர் சிவஞானபோத நூலில் முத்தி நிலைக்குச் சகல நிலையை உவமை காட்டினார். சகல நிலையில் இறைவன் உயிரோடு ஒற்றுமைப்பட்டு உயிராகவே நின்றாற் போல, முத்தி நிலையில் உயிர் இறைவனோடு ஒற்றுமைப்பட்டு நிற்கும் என்றார்.

இவ்வாறு மெய்கண்டார் சகலநிலை பற்றி முத்திநிலையை விளக்க, அவரது மாணவராகிய மனவாசகங்கடந்தாரும் அவரை அடியொற்றிச் சகல நிலையை வைத்தே முத்தி நிலையை இங்கு விளக்குவாராயினர்.

மெய்கண்டார் விடை கூறும் முறையில் இந்நூலை மனவாசகங்கடந்தார் அமைத்துக் கொண்டார் என்பதை நாம் அறிவோம். ஆனால் மெய்கண்டார் கூறிய அதே உவமையை இங்கே அமைத்துக் கொள்ளவில்லை. சகல நிலையில் இறைவன் நிற்குமாறு பற்றிய அவ்வுவமை எளிதில் உணர வாராத ஒன்று. தெரிந்ததைக் கொண்டு தெரியாததை விளக்குதல் என்பது தானே இவ்வாசிரியர் மேற்கொண்ட முறை. ஆதலால் சகல நிலையிலேயே தெரிந்த வேறொன்றை உவமை காட்டி, அதனையும் மெய்கண்டார் வாக்காகவே அமைத்து, முத்தி நிலையை விளங்க வைக்கிறார்.

சகல நிலையில் தத்துவங்கள் நமக்கு ஐம்பொறிகள் முதலிய கருவிகளாக அமைந்துள்ளன. கருவிகள் நமக்குத் தெரிந்தவை. அவையும் நாமும் வேறு வேறு பொருள்கள். அவை நம்மோடு இயைந்து நிற்கின்றன. நாமாகவே நிற்கின்றன. அப்படியே முத்தி நிலையில் ஆன்மாவும் சிவத்தோடு இயைந்து சிவமாகவே நிற்கும். ஆயினும் பொருளால் சிவம் வேறு; ஆன்மா வேறுதான்.

## பின்னும் ஓர் உவமை

**47. ஆதவன்தன் சன்னிதியில் அம்புலியின் ஆர்சோதி**

**பேதம்அற நிற்கின்ற பெற்றிபோல் நாதாந்தத்து**

**அண்ணல் திருவடியில் ஆன்மா அணைந்துஇன்பக்**

**கண்ணில் அழுந்தியிடும் காண்**

## பதவுரை

**ஆதவன் தன் சன்னிதியில்** சூரிய வொளியின் முன்

**அம்புலியின் ஆர் சோதி** நிலவின் ஒளி

**பேதம் அற** வேறுபட்டுத் தனித்துக் காணப்படுதல் இன்றி

**நிற்கின்ற பெற்றி போல்** அச்சூரிய வொளியில் அடங்கி நிற்கின்ற தன்மை போல,

**நாத அந்தத்து** தத்துவங்களைக் கடந்த

**அண்ணல்** முதல்வனது திருவடி என்று

**திருவடியில்** சொல்லப்படும் திருவருள் ஞானத்தில்

**ஆன்மா அணைந்து** முத்தான்மா சேர்ந்து அடங்கி நின்று

**இன்பக் கண்ணில்** அவன் கொடுக்கும் இன்ப நுகர்ச்சியில் (மூழ்கி)

**அழுந்தியிடும்** தன் அறிவு முனைந்து தோன்றாது கிடக்கும்

**காண்** இதனை அறிவாயாக.

**பொழிப்புரை**

பொழுது விடிந்து சூரியன் புறப்பட்டவுடன் அதன் பேரொளி முன், வானத்திலுள்ள தேய்பிறையாகிய நிலவின் ஒளி அடங்கிப் போய் விடுகிறது. நிலவின் ஒளி இருந்தும் இல்லையாய் நிற்கிறது. அதுபோல முதல்வன் திருவடியை அணைந்த உயிர் வெள்ளமெனப் பெருகும் இறையின்பத்தில் மூழ்கித் தான் என வேறு நில்லாது, தான் சிறிதும் தோன்றாது, அடங்கி நின்று இன்புறும்.

**முத்தி நிலை உயிருக்கு இயற்கை**

**48. சென்றிவன்தான் ஒன்றில் சிவபூரணம் சிதையும்**

**அன்று அவன்தான் ஒன்றுமெனில் அன்னியமாம் இன்று இரண்டும்**

**அற்றநிலை ஏதுஎன்னில் ஆதித்தன் அந்தன்விழிக்**

**குற்றம் அற நின்றதுபோல் கொள்.**

## பதவுரை

**இவன்தான்** ஆன்மாதான்

**சென்று** சிவத்தைச் சென்று சேர்ந்து

**ஒன்றின்** அவனோடு ஒன்றும் எனக் கொண்டால்

**சிவ பூரணம்** (ஆன்மா சிவனுக்கு வெளியில் இருந்தது என்று ஆகி) சிவம் எங்கும் நிறைந்துள்ள பொருள் என்ற அடிப்படைக் கொள்கை

**சிதையும்** அடிபட்டுப் போகும்.

**அன்று** முத்தி நிலையில்

**அவன் தான்** சிவமே

**ஒன்றும் எனில்** ஆன்மாவிடம் வந்து பொருந்தும் எனக் கொண்டால்

**அன்னியமாம்** சிவம் ஆன்மாவிற்கு வேறாய் இருந்தது என்று ஆகும். (இவ்வாறு கொள்வது, சிவம் எந்நிலையிலும் உயிர்களோடு பிரிப்பின்றியே நிற்கும் என்னும் அடிப்படைக் கொள்கைக்கு முரணாகும்)

**இன்று இரண்டும் அற்ற நிலை** ஆன்மா சென்று பொருந்துதலும், சிவம் வந்து பொருந்துதலும் ஆகிய இவ்விரண்டும் அன்றி, ஆன்மா முத்தியை எய்தும் நிலை

**ஏது என்னில்** எது போன்றது என்றால்

**ஆதித்தன்** சூரிய வொளி

**அந்தன் விழி** குருடனது கண்ணில் உள்ள

**குற்றம்** படலம் ஆகிய குற்றம்

**அற** நீங்கியதும்

**நின்றது போல்** அக் கண்ணொளியோடு இயைந்து நின்றது போலும் என

**கொள்** கொள்வாயாக.

## பொழிப்புரை

உயிர் சென்று சிவனோடு ஒன்றும் எனில் எங்கும் நிறைந்துள்ள பூரணத்தன்மை சிவனுக்கு இல்லை என்று கொள்ள நேரும். அது கூடாது. இனிச் சிவனே சென்று உயிரோடு பொருந்துவான் எனில், சிவன் உயிருக்கு வேறாய் இருந்தான் என்று கொள்ள நேரும். அதுவும் கூடாது. இவனும் சென்று அவனை அடைதல் இல்லை. அவனும் வந்து இவனை அடைதல் இல்லை. மற்று இருவரும் இயைந்து நிற்கும் முறைமைதான் யாது எனில், குருடனது கண்ணின் குற்றமாகிய படலம் நீங்க, அக்கண்ணொளியும், சூரியவொளியும் தம்முள் இயைந்து நிற்றல் போன்றதே அவனும் இவனும் பிரிப்பின்றி நிற்கும் முறைமை.

## விளக்கம்

### ஆன்மா சிவனிடம் போய்ச் சேர்ந்தான் என்றல் பொருந்தாமை

ஆன்மாவும் சிவனும் பிரிப்பின்றிச் சேர்ந்திருக்கும் இந்நிலை ஒரு காலத்தில் ஏற்பட்ட உறவா? ஒரு காலத்தில் ஏற்பட்டது என்றால் ஆன்மா, சிவன் என்ற இருவரில் யார் யாரைப் போய்ச் சேர்ந்தனர்? ஆன்மா சிவனிடம் போய்ச் சேர்ந்தான் என்றால், அதிலே ஒரு குற்றம் உள்ளது. என்ன குற்றம் என்றால், ஆன்மா சென்று சிவனை அடைந்தான் என்றால் சிவனது நிறைவுக்குள் அவன் இல்லை என்றும், நிறைவுக்கு வெளியே இருந்தான் என்றும், அதனாலேயே சென்று அடைய வேண்டியதாயிற்று என்றும் ஆகும். இவ்வாறு கொள்வது எல்லாவற்றையும் தன்னுள் அடங்கக் கொண்டுள்ள சிவனது முழு நிறைவுத் துன்மைக்கு இழுக்காகும்.

### சிவன் ஆன்மாவிடம் வந்து சேர்ந்தான் என்றல் பொருந்தாமை

இனி, சிவன் ஆன்மாவிடம் வந்து பொருந்தினான் எனக் கொள்ளலாமோ? எனில், அதிலும் ஒரு குற்றம் உள்ளது. சிவன் அவ்வாறு வந்து பொருந்துவதற்கு முன்னே ஆன்மாவை விட்டு விலகி வேறாக இருந்தான் என்றும், ஆன்மாவுக்குச் சிவனது உதவி தேவைப்படாதிருந்தது என்றும் ஆகும். இவ்வாறு கொள்வது சிவன் எக்காலத்தும் எல்லாவற்றோடும் ஒன்றாயும் உடனாயும் இருந்து இயக்கி வருகிறான் என்னும் அடிப்படைக் கொள்கைக்கு இழுக்காகும்.

இவ்வாறு ஆன்மா சென்று பொருந்துதலும், சிவன் வந்து பொருந்துதலும் ஆகிய இவ்விரண்டும் ஏற்புடையன ஆகாவெனில், வேறு எப்படித்தான் கொள்வது என்ற வினா எழும். ஆசிரியர் இதற்குப் பின்வருமாறு விடையிறுக்கிறார்.

## முத்திநிலை புதிதாய் அடையப்படுவது அன்று

ஆன்மாவும் சிவனும் இயைந்திருக்கின்ற இந்நிலை ஒருகாலத்தில் புதிதாய் ஏற்பட்டதன்று. இவ்வுறவு காலங் கடந்த உறவு. முன்னைப் பழமைக்கும் முன்னைப் பழமையாய் இருக்கிற உறவு. என்றென்றும் உள்ளதாகிய உறவு. ஆதலால் ஆன்மா சிவனைச் சென்றடைகிறது என்ற பேச்சுக்கே இடமில்லை ஆனால் இறைவனை அடைந்தார் என்று சொல்லுகிற வழக்கு இருக்கிறதே. அடைதலாவது முன்பு இல்லாத ஒன்றைப் புதிதாகப் பெறுவதுதானே என்று ஐயுறலாம். இதனை ஓர் எடுத்துக்காட்டுக் கூறித் தெளிவிக்கலாம்.

பிறவிக்குருடன் ஒருவன், அவன் சூரியவொளியையே பார்த்தறியான். ஆனால் அவன் நாள்தோறும் சூரியவொளியிலேயேதான் இருக்கிறான். அவனது கண்ணிலும் சூரியவொளி பட்டுக்கொண்டு தான் இருக்கிறது. அவனது கண்ணில் உள்ள படலமாகிய குற்றம் அவ்வொளியை அவன் உணராதபடி தடுத்து நிற்கிறது. ஒருநாள் அவனது கண்ணுக்கு அறுவை சிகிச்சை நடக்கிறது. படலம் நீக்கப்படுகிறது. அவன் காணும் ஆற்றலைப் பெறுகிறான். அவனுக்குச் சூரியவொளி புதியதாகத் தோன்றுகிறது. ஆனால் உண்மையில் அவ்வொளி அவனுக்கு முன்னர் எப்போதும் இருந்தது தானே. அதுபோலச் சிவமும் உயிரோடு என்றுமே இருக்கிறது. பாசத்தின் மறைப்பினால் உயிர் அதனை உணராதிருக்கிறது. பாசம்நீங்கித் தன் உணர்வில் சிவத்தைக் காணும் போது அவ்வனுபவம் அதற்குப் புதியதாகத் தோன்றுகிறது. சிவமாகிய முதற்பொருளைத் தான் அடைந்ததாக உணர்கிறது. இதுபற்றியே இறைவனை அடைதல் என்ற வழக்கு உண்டாயிற்று.

இச்செய்யுளில், முத்திநிலை என்பது புதிதாய் வருவது அன்று; அஃது உயிருக்க இயற்கை என்ற அரிய உண்மையினை உணர்த்தியுள்ளார் ஆசிரியர்.

## முத்தியில் முப்பொருள் எவ்வாறு இருக்கும்?

**49. வாக்கு மனம்இறந்த வான்கருணை யாளன் உருத்**

**தாக்கறவே நிற்கும் தனிமுதல்வா நீக்காப்**

**பதியினைப்போல் நித்தம் பசுபாசம் என்றாய்**

**கதியிடத்து மூன்றினையும் காட்டு**.

### பதவுரை

**வாக்கு மனம் இறந்த** சொல்லுக்கும் மனத்திற்கும் எட்டாத நிலையினை யுடைய

**வான் கருணையாளன் உரு** சிவபெருமானின் வடிவமாக,

**தாக்கு அறவே நிற்கும்** உலகியலால் சிறிதும் தாக்கப்படாமல் நிற்கின்ற

**தனி முதல்வா** ஒப்பற்ற குரு முதல்வரே,

**நீக்கா** விட்டு நீங்காத

**பதியினைப் போல்** பதிப்பொருளாகிய இறைவனைப் போல

**பசுபாசம்** பசுக்களாகிய உயிர்களும், அவற்றைத் தடுத்து நிற்கும் பாசமாகிய தளையும்

**நித்தம் என்றாய்** என்றும் அழியாத நித்தப் பொருள்கள் என்று கூறினீர்.

**(அவ்வாறாயின்)**

**கதியிடத்து** முத்தி நிலையில்

**மூன்றினையும்** அம்முப்பொருள்களும் எவ்வாறு இருக்கும் என்பதை

**காட்டு** அடியேனுக்கு விளக்கியருள்க.

## பொழிப்புரை

உரை உணர்வுக்கு எட்டாத நிலையினை உடைய முதல்வனது வடிவமாக நிலவுலகில் எழுந்தருளியிருந்து உலகியலால் சிறிதும் தாக்கப்படாமல் நிற்கும் ஒப்பற்ற ஞானாசிரியப் பெருந்தகையே, விட்டு நீங்காத பதியினைப் போலப் பசுவும் பாசமும் என்றும் அழியாத நித்தப் பொருள்கள் என்று கூறினீர். அங்ஙனமானால், முத்தியிடத்து அம் மூன்று பொருள்களும் எவ்வாறு இருக்கும் என்பதை அடியேனுக்கு விளக்கியருள வேண்டும் என்று மாணவர் வேண்டுகிறார்.

## விளக்கம்

### தனது ஆசிரியரைச் சிவமாகவே காணுதல்

சிவஞானமாகிய ஒளியைப் பெறாமல், அஞ்ஞானமாகிய இருளில் துன்பப்படுகின்றன. அவ்வுயிர்களுக்குச் சிவஞானம் ஆகிய விளக்கம் எவ்வாறு கிடைக்கும்?

உயிர் தானே எதனையும் அறியமாட்டாது; வேறொரு துணை அறிவிக்கவே எதனையும் அறிவதாகும்; இத்தன்மைக் கல்வி கற்கும் முறையில் சிறப்பாகக் காணலாம். குருவில்லாமல் எக்கல்வியையும் தானே திருத்தமாகப் பெற இயலாது. சிலம்பம், வாட் பயிற்சி, வில் வித்தை போன்றவற்றைத் தக்க ஆசிரியரிடமிருந்தே பெற வேண்டியுள்ளது. இத்தகைய உலகியற் கல்வியையே குருவில்லாமல் அறிய முடியாத போது, உணர்தற்கரிய சிவஞானத்தை ஆசாரியரின் துணையில்லாமல் எங்ஙனம் பெற இயலும்? எனவே சிவஞானம் ஆசாரியர் மூலமாகவே கிடைப்பதாகும்.

இனி, ஏனைய கலைகளைத் தருதற்கு உரிய ஆசிரியராக யாரும் அமையலாம். ஆனால் சிவஞானத்தைத் தரும் ஆசிரியராக அமைபவன் இறைவன் ஒருவனே யாவன்.

ஞானத்தைத் தரும் ஆசிரியராக இறைவனே ஏன் வரவேண்டும்? அதனை உபதேசிப்பதற்கு ஏனையோரால் முடியாதா? என்ற ஓர் ஐயம் எழலாம்.

உடம்பில் ஒரு நோய் வந்தால் உரிய காலத்தில் மருந்து கொடுத்து அதைக் குணப்படுத்துகிறோம். அதுபோல, உயிரில் உள்ள நோய் அஞ்ஞானம். ஞானந்தான் அதனைப் போக்கும் மருந்து. அஞ்ஞானமாகிய நோயின் நிலையை அறிந்து உரிய காலத்தில் ஞானமாகிய மருந்தைக் கொடுத்தல் வேண்டும். ஞானம் ஆகிய மருந்தைக் கொடுப்பதற்கு உரிய காலம் என்பது எது?

உயிரைப் பற்றியுள்ள ஆணவ மலத்தின் சத்தி மெலிவுற்ற நிலை மலபரிபாகம் எனப்படும். அவ்வாறு மூல மலம் பரிபாகம் உற்ற காலமே ஞானத்தை உணர்த்துதற்கு உரிய காலமாகும். மல பரிபாகம் வாராத போது ஞானத்தை உணர்த்தினால் ஒரு பயனும் விளையாது. ஆகவே உயிரில் மல பரிபாகம் எப்பொழுது வரும் என்று பார்த்துக் கொண்டேயிருந்து வந்தவுடனே ஞானத்தைத் தருதல் வேண்டும்.

உயிரில் நிகழும் மல பரிபாகத்தை யார் அறியமுடியும்? உயிர்க்குயிராய் உள்ளிருக்கும் இறைவன் ஒருவனே அதனை அறிய முடியுமே தவிர ஏனையோர்க்கு அது கூடாது. அது கருதியே, இறைவனே பருவம் பார்த்துக் குருவாகி வந்து ஞானத்தை அருளுவான் என்று கூறப்படுகிறது.

இறைவன் ஒருவனே ஞானாசிரியன் ஆவான் எனின் மெய்கண்டார் முதலிய பலரையும் ஞானாசிரியர்கள் என்று கூறுவது எவ்வாறு பொருந்தும்? என வினவலாம். ஆம். அவர்களெல்லாம் உண்மையில் ஞானாசிரியர்களே. ஏனெனில், அவர்கள் சிவத்தைச் சார்ந்து சிவமேயானவர்கள். அவர்களுக்கும் சிவனுக்கும் வேறுபாடு இல்லை. சிவமாம் தன்மையை யடைந்த இத்தகைய பெரியோர்களை இறைவன் தனது திருமேனியாகக் கொண்டு அவர்கள் வாயிலாக ஞானத்தை அருளுகிறான். அவர்கள் உலகில் நம்மைப் போல வாழ்ந்தாலும் அவர்களை நாம் சிவமாகவே காணுதல் வேண்டுமேயன்றி நம்மில் ஒருவராக எண்ணுதல் சிறிதும் ஆகாது.

அருணந்தி சிவாசாரியார் தமக்கு இறைவன் ஆசாரியனாய் வந்து ஞானத்தை அருளிய முறையைக் கூறும் போது, விடம் உண்ட கண்டனாகிய பெருமான் தனது நீல கண்டத்தையும் நெற்றிக் கண்ணையும் மறைத்தருளி, திருவெண்ணெய் நல்லூரில் இருக்கும் மெய்கண்டதேவ நாயனாராக வந்து, ஞானத்தை அருளிப் பிறவிக் கடலினின்றும் எடுத்துத்

தனது திருவடியாகிய கரையில் சேர்த்தருளினான் என்று இருபா இருபஃது என்னும் நூலில் கூறியுள்ளார்.

இதே முறையிலே, மெய்கண்ட தேவரின் மற்றொரு மாணவராகிய மனவாசகங் கடந்தாரும், உரை உணர்வுக்கு எட்டாத நிலையினை உடைய இறைவனே மெய் கண்ட தேவரெனக் குரு முதல்வராய் எழுந்தருளியிருந்தார் என்ற கருத்தினை இச் செய்யுளின் முன் இரண்டடிகளில் அமைத்துப் போற்றியுள்ள பான்மையை இங்கே காண்கிறோம்.

## பதியினைப் போல் நித்தம் பசு பாசம்

பதி பசு பாசம் ஆகிய மூன்றும் நித்தமானவை என்பது சைவ சித்தாந்தத்தின் அடிப்படை நிலையாகும். காலம், இடம் என்ற வரம்புக்கு உட்பட்ட பொருளுக்கெல்லாம் தோற்றம் உண்டு. அழிவும் உண்டு. ஆதலால் அந்த வரம்புகளுக்கு உட்படாத, எல்லையற்ற பொருளே நித்தப் பொருளாக இருக்க முடியும். அப்பொருள் எங்கும் நிறைந்ததாக இருக்கும். காலம் கடந்ததாக இருக்கும். கால வரம்பற்ற இட வரம்பற்ற அப்பொருளை வியாபகப் பொருள் என்பர். இதனால் வியாபகப் பொருளெல்லாம் நித்தமாக இருக்கும் என்று துணியலாம். பதியாகிய கடவுளும், பசுவாகிய உயிர்களும், பாசமாகிய தளையும் வியாபகமாயும் நித்தமாயும் உள்ளவை என்று சைவ சித்தாந்தம் கூறுகிறது.

எல்லையுடைய சிறுபொருள்களுக்குத்தான் இடம் பெயர்ந்து செல்லுதல் இயலும். வியாபகப் பொருளுக்கு இடப்பெயர்ச்சி என்பது இருக்க முடியாது. ஆணவ மலமாகிய பாசம் வியாபகப் பொருள். அஃது ஆன்மாவிடத்தில் சம நிறைவாகக் கலந்து விரவியிருக்கிறது. வியாபகப் பொருளாகிய அதற்கு இடம் பெயர்ந்து செல்லுதல் ஆகிய நீக்கம் சொல்ல வராது. அதனால் அது என்றும் ஆன்மாவிடத்தில் நீங்காதிருக்கும் என்றால் முத்தி நிலையிலும் உண்டு என்று ஆகும். முத்தியிலும் ஆணவம் உண்டு என்றால் அந்நிலை எப்படி விடுபட்ட நிலையாகும்? ஆனால் நூல்களெல்லாம் முத்தியில் ஆணவ மலம் நீங்கும் என்று அறுதியிட்டுக் கூறுகின்றனவே இதனை எவ்வாறு விளங்கிக் கொள்வது?

இன்னும், நூல்களில் உயிர் சிவமாகிறது என்று கூறப்பட்டுள்ளதே. அவ்வாறாயின். முத்தியில் உயிர் என்பது இல்லாமற் போகுமோ? உயிர் நித்தம் என்பதற்கு மாறான முடிவாக அல்லவா இது உள்ளது?

இப்படியாக முத்திநிலை பற்றி எழும் பற்பல ஐயங்களையும் கருத்திற் கொண்டே மாணவர் நீங்காப் பதியினை போல் நித்தம் பசு பாசம் என்றாய், கதியிடத்து மூன்றினையும் காட்டு எனக் கேட்கிறார். இதற்கு ஆசிரியர் அருளிய விடையை அடுத்த செய்யுளில் காணவிருக்கிறோம்.

## முத்தியில் முப்பொருள் உள்ள நிலைமை

50. **முத்தி தனில் மூன்று முதலும் மொழியக் கேள்;**

**சுத்த அனு போகத்தைத் துய்த்தல் அணு; மெத்தவே**

**இன்பம் கொடுத்தல் இறை; இத்தை விளை வித்தல் மலம்;**

**அன்புடனே கண்டு கொள் அப் பா.**

### பதவுரை

**அப்பா** நன் மாணாக்கனே,

**முத்திதனில்** பரமுத்தி நிலையில்

**மூன்று முதலும்** முப்பொருளும் அழிவின்றி நிற்கும் முறைமையை

**மொழியக் கேள்** யாம் கூறுகின்றோம் கேட்பாயாக.

**சுத்த அனுபோகத்தை** தூய பேரின்பமாகிய போகத்தை

**துய்த்தல்** நுகர்ந்து கொண்டிருப்பது.

**அணு** ஆன்மா.

**மெத்தவே** மிகவும்

**இன்பம் கொடுத்தல்** அவ்வின்ப நுகர்ச்சியை இடையீட்டின்றிக் கொடுத்து வருவது.

**இறை** சிவமாகிய முதற் பொருள்.

**இத்தை** இதை (இவ்வின்பத்தை)

**விளைவித்தல்** முத்தான்மா நுகர்வதற்கு, தான் மறைத்தலைச் செய்யாது மடங்கி நிற்றல் மூலமாக ஏதுவாய் நிற்பது

**மலம்** ஆணவ மலம்.

**அன்புடனே** இவ்வுண்மையைத் தலையாய பிரமாண நூல்களின் கூற்றுக்களில் அன்பு வைத்து

**கண்டு கொள்** நீ உணர்ந்து கொள்.

## பொழிப்புரை

நன்மாணாக்கனே, பரமுத்தியில் முப்பொருள்களும் உள்ள முறைமையைக் கூறுகிறோம். கேள். தூய பேரின்பத்தை நுகர்ந்து கொண்டிருப்பது உயிர். அவ்வின்பத்தை இடையீடின்றிக் கொடுத்துக் கொண்டிருப்பவன் இறைவன். அப்பேரின்பத்தை விளைவித்து நிற்பது மலம். இவ்வுண்மையை உணர்ந்து கொள்.

## விளக்கம்

### முத்தியிலும் உயிர் தனியொரு முதல்

உயிர் பேரின்பத்தை அனுபவிக்கிறது என்பதன் மூலம் உயிர் முத்திக் காலத்திலும் நிலையாக உள்ள பொருள் என்பது புலனாகிறது. உயிர் சிவமாகிறது என்றால், உயிர் முற்றிலும் அழிந்து சிவத்தோடு சேர்ந்து விடுகிறது என்பது கருத்தன்று. அதன் கருத்து வேறு. அதனைச் சற்று முன்னே 46ஆம் செய்யுளின் உரையில் விளக்கியிருக்கிறோம். ஆகவே முத்தியிலும் உயிர் தனியொரு முதலாக உள்ளது என்பதை அறிதல் வேண்டும்.

### உயிரை அணு என்று குறிப்பிட்ட காரணம்

அணு என்பது கட்டு நிலையில் நிற்கும் உயிரைக் குறிக்க வழங்கும் பெயராகும். ஆணவ மலத்தின் மறைப்பால் உயிரினது விரிந்த அறிவு சுருங்கிய அறிவாகிச் சிறுமைப்பட்டு நிற்றலின் அச்சிறுமை கருதி உயிர் அணு எனப்பட்டது. அச்சிற்றறிவு நீங்கி விரிந்த அறிவினைப் பெற்றுவிட்ட

இம்முத்திக் காலத்திலும் உயிரை அணு என்று ஆசிரியர் குறிப்பிடுவது ஏன்? என்று எண்ணலாம்.

ஒரு கருத்துப் பற்றியே ஆசிரியர் இவ்விடத்தில் உயிரை அணு என்றார். வெள்ளமெனப் பெருகும் இறையின்பத்தில் மூழ்கி உயிரானது சிறிதும் புலனாகாது நிற்கும் என்பதைக் குறிக்கவே உயிரை அணு என்றார். புலனாகாத தன்மை அணுவுக்கும் உண்டு. பேரின்ப நுகர்ச்சியைத் தலைப்பட்ட உயிருக்கும் உண்டு. அவ்வொற்றுமை கருதியே உயிரை அணு என்றார்.

## முத்தியில் ஆணவ மலத்தின் நிலை

இனி, முத்தியில் ஆணவ மலத்தின் நிலை என்ன? இத்தை விளைவித்தல் என்பதன் மூலம் மலமும் முத்திக் காலத்தில் நித்தமாக இருக்கிறது என்பது தெரிகிறது. அது எவ்வாறு இருக்கும் என்பதை நோக்குவோம்.

உயிரிடத்தில் திருவருள் ஒளி மேலிடுதலால் ஆணவ இருள் அதன் கீழ்ப்பட்டு அடங்கி விடுகிறது. மந்திரத்தால் நெருப்பின் ஆற்றலைக் கட்டுப்படுத்த வல்லவர் நெருப்பின் நடுவில் நின்றாலும் அஃது அவரைச் சுடுதல் இல்லை. அப்பொழுது நெருப்பினது சுடும் சத்தி எங்கே போயிற்று? அச் சத்தி எங்கும் போய் விடவில்லை. இல்லாமற் கெட்டொழிய வில்லை. இருந்தும் இல்லாததாய் அவரிடத்தில் செல்ல மாட்டாமல் மடங்கி நிற்கிறது. அது போல முத்திக் காலத்தில் ஆணவ மலம் இருந்தும் அதன் மறைப்பு சிவமே எனும்படி ஒன்றாய் நிற்கும் உயிரிடத்துச் செல்ல மாட்டாமையால், அது தன் சத்தி மடங்கி இல்லாதது போல் நிற்கும். நடராச வடிவத்தில் முயலகனைத் திருவடிக்கீழ் அழுத்தி வைத்திருப்பதிலிருந்து முத்தியில் ஆணவ மலம் அடக்கப்பட்டுள்ளதேயன்றி இல்லாமற் போகவில்லை என்று தெளியலாம். இவ்வாறு மல சத்தி மடங்கி நிற்றலையே மலம் கெடுதல் என்றும், மலம் நீங்குதல் என்றும் நூல்கள் கூறும்.

பெத்தத்தில் இறையின்பம் உயிரிடத்து விளையவொட்டாது தடுத்து நின்ற ஆணவ மலம் முத்தியில் அங்ஙனம் செய்ய மாட்டாமல் இருக்கும். இங்ஙனம் மலம் தான் மடங்கி நிற்றலால் இறையின்பம் உயிரிடத்தே

விளைவதற்கு இவ்வகையில் காரணமாயிற்று. இதனைக் கருதியே இத்தை விளைவித்தல் மலம் எனக் குறிப்பிட்டார் ஆசிரியர்.

இதுவரை கூறியவற்றால், முத்தியில் ஆணவ மலம் உண்டு; ஆயினும் அதனால் உண்டாகும் பந்தம் இல்லை என்பது புலனாகும். இந்நிலையை விடுபட்ட நிலை என்று கூறலாம் தானே.

## முத்திக்கு வழி

**51. அப்பாஇம் முத்திக்கு அழியாத காரணந்தான்**

**செப்பாய் அருளாலே; செப்பக் கேள் ஒப்பில்**

**குரு லிங்க வேடம் எனக் கூறில் இவை கொண்டார்**

**கரு வொன்றி நில்லார்கள் காண்.**

### பதவுரை

**அப்பா** ஐயனே,

**இம் முத்திக்கு** இப்படிப்பட்ட முத்தியை அடைவதற்கு

**அழியாத காரணந்தான்** நிலையான வாயில்தான் யாது என்பதை

**அருளாலே** தயை கூர்ந்து

**செப்பாய்** கூறியருள்க (என்று மாணாக்கர் வேண்ட, ஆசிரியர் பின்வருமாறு கூறுகிறார்)

**செப்பக் கேள்** யாம் கூறுவதைக் கேள்

**ஒப்பு இல்** ஒப்பில்லாத

**குரு லிங்க வேடம் என** குரு லிங்க சங்கம வழிபாடே வீட்டிற்கு வாயில் என்று

**கூறில்** ஆகமங்கள் கூறுமானால்

**இவை கொண்டார்** இம் மூன்று இடங்களிலும் இறைவனைத் தெளியக் கண்டு வழிபடுதலை மேற்கொண்டவர்

**கரு ஒன்றி நில்லார்கள்** கருவிற் பொருந்தி மீண்டும் பிறவார். (வீடு பெறுவர்)

**காண்** இதனை உணர்வாயாக.

## பொழிப்புரை

ஐயனே, இம் முத்தியை அடைதற்கு உரிய வழியைக் கூறியருள்க என வேண்டுகிறார் மாணவர். ஆசிரியர் கூறுகிறார்: குரு, இலிங்கம், சங்கமம் என்னும் இம் மூன்றுமே இறைவன் விளங்கித் தோன்றும் இடங்கள் என்று ஆகமங்கள் கூறும். இவ்விடங்களில் முதல்வனைத் தெளியக் கண்டு வழிபடுதலை மேற்கொண்டவர் கருவிற் பொருந்தி மீளப் பிறவார்.

## விளக்கம்

குரு வழிபாடும், இலிங்க வழிபாடும், அடியார் வழிபாடும் ஆகிய இவையே முத்திக்கு வழியாகும் என்பது கூறப்பட்டது.

**தாபர சங்க மங்கள்**
**எனும் இரண்டு உருவில் நின்று**
**மாபரன் பூசை கொண்டு**
**மன்னுயிர்க்கு அருளை வைப்பன்**

என்று சிவஞான சித்தியார் கூறுகிறது. தாபரம்பெயராது நிற்பன. திருக்கோயிலிலுள்ள சிவலிங்கம் முதலிய திருவுருப் படிமங்கள் தாபரம் எனப்படும். சங்கமம் உலாவுவன; அடியார்கள். மேற்கூறிய செய்யுளில் குருவையும் சங்கமம் என்பதனுள் அடக்கி இறைவனது வடிவங்களைத் தாபரம்; சங்கமம் என இரண்டாகக் கூறியுள்ளமை காணலாம்.

## முத்தித் தலைவர்

இவ்வுலகில் இவ்வுடம்போடு கூடி வாழும்போதே சிவத்தை அணைந்து முத்தி நிலை வாய்க்கப் பெற்றவரைச் சீவன் முத்தர் என்பர். அவர் குரு முதலிய மூவரையும் வழிபட்டு வாழும் பத்தி நெறியில் உறைத்து நிற்பர் என்பதை உணர்த்துகிறார் ஆசிரியர்.

**52. கற்றா மனம்போல் கசிந்து கசிந் தேஉருகி**

**உற்றாசான் லிங்கம் உயர்வேடம் பற்றாக**

**முத்தித் தலைவர் முழுமலத்தை மோசிக்கும்**

**பத்திதனில் நின்றிடுவர் பார்.**

**பதவுரை**

**முத்தித் தலைவர்** சீவன் முத்தர்

**ஆசான்** தமக்குத் தெளிவினைத் தந்த குருவையும்

**லிங்கம்** திருக்கோயிலில் உள்ள திருமேனிகளையும்

**உயர் வேடம்** உயர்ந்த திருவேடம் பூண்ட மெய்யடியார்களையும்

**பற்றாக உற்று** தமக்குப் பற்றுக் கோடாகப் பொருந்தி

**கன்று ஆ** கன்றை ஈன்ற தாய்ப் பசு

**மனம் போல்** தன் கன்றை நோக்கி மனம் குழைந்து நிற்பதைப் போல

**கசிந்து கசிந்தே உருகி** குரு முதலிய மூவரையும் கண்ட போது மனம் மிகக் கசிந்து உருகி,

**முழு மலத்தை** மல வாதனையை

**மோசிக்கும்** போக்குகின்ற

**பத்திதனில்** பத்தி நெறியில்

**நின்றிடுவர்** ஊன்றி நிற்பர்.

**பார்** ஆதலால், குரு லிங்க சங்கம வழிபாடே முத்திக்கு சிறந்த சாதனம் என்பதை அறிவாயாக.

**பொழிப்புரை**

சீவன் முத்தராய் உள்ள தலைவர் தமக்குத் தெளிவினைத் தந்த குருவினையும், திருக்கோயிலில் உள்ள திருமேனியையும், உயர்ந்த திருவேடம் பூண்ட மெய்யடியார்களையும் கண்டபோது, அணிமையில்

கன்றை ஈன்ற தாய்ப்பசு தன் கன்றை நோக்கி எவ்வாறு குழைந்து நிற்குமோ அவ்வாறு மனம் கசிந்து உருகி நிற்பர். மல வாதனையைப் போக்க வல்ல பத்தி நெறியில் ஊன்றி நிற்பர். ஆதலால், குரு லிங்க சங்கம வழிபாடே முத்திக்குச் சிறந்த சாதனம் என்பதை அறிவாயாக.

## விளக்கம்

## குரு வழிபாடு

முப்பொருள்களின் இயல்பைத் தெளிய உணர்த்தி, கட்டினின்றும் ஆன்மாவை விடுவித்து, மெய்ப் பொருளாகிய சிவனிடத்து அன்பை உண்டாக்கி, அவனது திருவடியைப் பற்றிக் கொள்ளுமாறு செய்பவரே குரு ஆவார்.

அவர் நம்மைப் போலவேதான் காணப்படுகிறார். நம்மைப் போலவே உண்ணல், உடுத்தல் முதலியவற்றைச் செய்கிறார். அதுபற்றி, அவரை நம்மில் ஒருவராகக் கருதிவிடுதல் கூடாது. அவர் சிவமேயாவார். அஃது எவ்வாறு என்பதைக் காண்போம்.

உலகில் வாழ்கின்ற, மலம் நீங்கிய தூய அறிவாகிய ஆன்மா சுத்தான்மா எனப்படுவார். அவர் நான் என்னும் சீவபோதம் அறவே நீங்கியவர்; அருள் வழியே நிற்பவர். சிவன் தன் தன்மைகளை அவர்க்கு ஆக்குவான்; தன் செயல்களை அவர்க்கு ஆக்குவான்; அவரைத் தனது வியாபகத்துள் அடக்கித் தானாக்கி நிற்பான். இஃது, உலைத்தீ தன்னைச் சார்ந்த இரும்பைத் தானாக்கி விடுதல் போன்றது எனலாம். அத் தீ தனது தன்மையை இரும்புக்கு ஆக்குகிறது. தனது செயலை இரும்புக்கு ஆக்குகிறது. அந்நிலையில் இரும்பு ஒளிவீசுகிறது என்றால், அஃது இரும்பின் தன்மையோ? நெருப்பின் தன்மையோ? அந்நிலையில் இரும்பு சுட்டெரிக்கிறது என்றால் அச்செயல் இரும்பின் செயலோ? நெருப்பின் செயலோ? நெருப்புத்தான் அவ்வாறு செய்கிறது என்பதில் சிறிதும் ஐயமில்லை.

நெருப்பு இரும்பைத் தன்னுள் அடக்கி அதனைத் தானாக்குமாறு போலச் சிவனும் சுத்தான்மாவைத் தானாக்கி நிற்பான். அவ்வாறு செய்வித்து அச் சுத்தான்மாவை ஆசாரியராக உலகத்திற்கு வழங்கி, அவர் இடமாக நின்று ஞானத்தை உணர்த்துவான்.

மேற்கூறிய உவமையில், ஒளி வீசுவது இரும்பாகாது அதனைத் தானாக்கிய நெருப்பேயாதல் போல, இங்கு ஞானத்தை உணர்த்தும் செயலும் சுத்தான்மாவின் செயலாகாது அவரைத் தானாக்கி நின்ற சிவனது செயலேயாதல் உணரத்தக்கது. இதுபற்றியே, ஞானத்தைத் தரும் ஆசான் மூர்த்தி சிவமே என்று சொல்லப்படுகிறது.

இறைவனே குருவாய் வருவான் என்பதை நமது சாத்திரங்களும் தோத்திரங்களும் பலபடியாக எடுத்துக் கூறுகின்றன. பரம்பொருள் ஒருநாமம் ஒருருவம் ஒன்றும் இல்லாதது. அதனால் அப்பொருளை யாரும் அறிதல் இயலாததாகிறது. அப்படிப்பட்ட அரிய பொருள் அனைவரும் கண்டும் உரையாடியும் மகிழும் வண்ணம் ஆசாரியனாய் எழுந்தருளி வந்தது என்ற கருத்துப்பட,

**அகளமாய் யாரும் அறிவரிது அப்பொருள்**
**சகளமாய் வந்தது**

என்று திருவுந்தியார் கூறும். அகளம் உருவம் இல்லாதது. சகளம் உருவம் உடையது.

ஆராலும் காண்டற் கரியான் எமக்கெளிய பேராளன் (திருவம்மானை) என்றும் சொற்களில் மணிவாசகர் உருவமற்ற இறைவன் தம் பொருட்டு ஆசாரியனாக உருவந்தாங்கி வந்தளிவந்த தன்மையை வியந்து குறிப்பிட்டுள்ளார்.

ஐம்புல வேடர் சுழலிற் பட்டுத் தன்னையும் அறியாது, தலைவனையும் அறியாது துயருறும் தொல்லுயிரை அவ்வேடரிடத்தினின்றும் மீட்டுத் தனது பேரின்பத்தை அளித்தற் பொருட்டே இறைவன் ஆசிரியத் திருமேனி தாங்கி வருகிறான் என்று சிவஞான போதம் முதலிய சாத்திர நூல்கள் கூறும்.

பழகிய ஒரு விலங்கைக் கொண்டு பல விலங்குகளைப் பிடிப்பது போலப் பக்குவப்பட்ட ஆன்மாக்களை ஆட்கொள்ளும் பொருட்டு இறைவன் ஆசாரிய மூர்த்தியாய் வருவான். இவ்வாறு இறைவன் ஆசிரியத் திருமேனி தாங்கி வருவதை மானிடச் சட்டை சாத்தி வருதல் என்பர். அவ்வாசிரியத் திருமேனியை, பார்வையென மாக்களை முன் பற்றிப் பிடித்தற்காம் போர்வை என்று திருவருட் பயன் கூறும்.

இதுகாறும் கூறியவற்றால், இறைவனே குருவாய் வருவான் என்பதன் பொருளும், குருவும் இறைவனும் வேறல்லர் என்பதும் இனிது விளங்கும்.

சீவன்முத்தி நிலையை எய்தினோர் தமக்கு உண்மை ஞானத்தை அருளிப் பிறவிக் கடலினின்றும் தம்மைக் கரையேற்றிய ஞானகுருவைச் சிவமே எனத் தெளிந்து வழிபட்டு வருவர்.

மெய்யுணர்வைப் பெற்றுவிட்ட பின்னரும், இவ்வுலகில் வாழும் வரையில், பாசமானது அலைகள் போல வந்து வந்து தாக்கக் கூடும். இவ்வாறான இடர்ப்பாடு தோன்றாதபடி சீவன்முத்தராய் உள்ளோர் தம்ஞான குருவின் அடிநிழலைப் பிரியாது உறைவர்; அவரை விடாது பற்றி நின்று வழிபட்டு வாழ்வர்.

## இலிங்க வழிபாடு

இலிங்கம் என்பது திருக்கோயிலினுள் இருக்கும் திருவுருவங்களைக் குறிக்கும். அத்திருமேனிகள், இறைவன் தன் அன்பர்க்கு அவ்வப்போது காட்டியருளிய திருவுருவங்களின் வடிவங்களேயாகும்.

பசுவின் பால் அதன் உடலிற் பரவியிருந்தாலும் அதனைக் கறந்து கொள்ளுதற்குரிய உறுப்பு அதன் மடியேயாகும். அதுபோல, எல்லாப் பொருள்களுமே இறைவன் பிரிவறக் கலந்து நிற்கும் இடங்கள் தாம் என்றாலும், திருக்கோயிலில் உள்ள திருவுருவங்களே அவன் விளங்கித் தோன்றும் இடங்கள் ஆகும்.

இலிங்கமாகிய திருமேனிகள் சிவ விளக்கம் உடையன என்பதை அறிந்தோம். புறத் தொழில் அளவில் வழிபட்டு வரும் சரியையாளருக்கு இறைவன் அத் திருமேனிகளில் வெளிப்படாது அங்கு மறைந்து நின்றே அருள்புரிவன். புறத் தொழில், அகத் தொழில் என்னும் இரண்டினாலும் வழிபாடு செய்வோர் கிரியையாளர். அவர்க்கு, விறகில் தீ கடைந்த பொழுதில் வெளிப்பட்டுத் தோன்றுவது போல மந்திரம் உள்ள பொழுது அத் திருவுருவில் இறைவன் விளங்கி நின்று அருளுவான்; கடையாத பொழுது விறகில் தீ வெளிப்படாதது போல மந்திரம் இல்லாத பொழுது அங்கு விளங்காது நிற்பான்.

இனி, ஞானியராகிய முத்தர் அனைத்துப் பொருளையும் சிவமாகக் காணும் தன்மை உடையவர். அவர் திருக்கோயிலில் உள்ள திருவுருவத்தையும் சிவமாகவே காண்பர். அவர்க்கு இறைவன், முதற்கன்றை ஈன்ற பசு தன் கன்றை நினைந்த அளவில் அதன் மடியில் பால் தானே விம்மி ஒழுகுவது போல, அத் திருவுருவில் தானே வெளிபட்டு அருள்புரிவன்.

இதற்குச் சான்றாகச் சுந்தரமூர்த்தி சுவாமிகளின் வாழ்க்கையில் நடந்த நிகழ்ச்சி ஒன்றைக் காண்போம்.

சுந்தரர் திருவொற்றியூரில் சங்கிலியாரை மணந்து மகிழ்ந்துறையும் காலத்தில் ஒரு நாள் திருவாரூரை மிக நினைந்து புறப்பட்டார். ஒற்றியூரின் எல்லையைக் கடந்த அப்பொழுதே அவருக்குக் கண்ணொளி மறைந்தது. சங்கிலியாருக்குத் தான் செய்து கொடுத்த வாக்குறுதி தவறிய காரணத்தால் இது நிகழ்ந்தது என்பதை உணர்ந்தார்.

உடன்வருவோர் வழிகாட்டத் தொடர்ந்து சென்று திருவெண்பாக்கம் என்ற ஊரை அடைந்தார். திருக்கோயிலுக்குச் சென்று இறைவனை வழிபட்டு, பெருமானே, உனக்கு நேரும் பழியை நினையாமல் நீ என் கண்ணை மறைத்து விட்டாய். இக் கோயிலுள்ளே நீ இருக்கின்றாயோ? என்று வினவினார். அதற்கு இறைவர், யாம் கோயிலினுள் இல்லாமல் இல்லை. இருக்கின்றோம். நீர் உம் வழியிற் செல்லும் என்று கூறி ஊன்றுகோல் ஒன்றைக் கொடுத்தருளினார்.

இவ்வாறு சுந்தரர் திருக்கோயிலில் உள்ள சிவலிங்கத் திருமேனியை வணங்கி,

**குழைவிரவு வடிகாதா! கோயில் உளாயே**

என்று வினவியபொழுது, இறைவர் அங்கே விளங்கி நின்று அவரைப் புறக்கணிப்பார்போல உளோம் போகீர் என விடையிறுத்த இந்நிகழ்ச்சியால், ஞானியர்க்கு இறைவன் திருவுருவங்களில் விளங்கியே நிற்பான் என்பது இனிது புலனாகும்.

சிவலிங்கம் முதலிய திருமேனிகளே அன்பு விளைதற்கு இடமாய் இறைவன் விளங்கித் தோன்றும் அருள்நிலைகள் ஆதலால், சீவன்

முத்தராய் உள்ளோர் தம் அன்பு செல்லும் இவ்விடங்களில் அவனை வழிபடுதற்கு உரியர்.

### சங்கம வழிபாடு

உயிர்களால் உணர வாராதவன் இறைவன். ஆயினும் உயிர்கள் அவனை உணர்ந்தாலன்றி உய்தி பெறுதல் இயலாது. ஆதலால் அவை தன்னை உணர்ந்து வழிபடுதற் பொருட்டு முதல்வன் தனது திருக்கோலமாகிய திருநீறு, தாழ்வடம், சடைமுடி, கல்லாடை முதலியவற்றைத் தன் அன்பர்க்குக் கொடுத்துள்ளான். அவ்வன்பர்கள் நான் என்னும் சீவபோதம் அறவே நீங்கியவர்கள். அவர் இறைவனையே மறவாது நினைத்தலால் இறைவன் அவரைத் தன்னுள் அடங்கியிருக்கச் செய்து, அவரைத் தானாக்கிக் கொள்கின்றான்; அவ்வன்பரிடத்துத் தயிரில் நெய்போல விளங்கி நிற்கின்றான். பாசத்தின் நீங்காத மற்றையோரிடத்துப் பாலில் நெய் போல அவன் விளங்காது நிற்பன்.

இத்தகைய மெய்யன்பரை வேற்றுமை சிறிதும் பாராட்டாது சிவமாகவே தெளிந்து வழிபடல் வேண்டும் என்பதைப் பின்வரும் திருத்தாண்டகச் செய்யுள் வலியுறுத்தும்.

**எவரேனும் தாமாக இவாடத் திட்ட**
**திருநீறும் சாதனமும் கண்டால் உள்கி**
**உவராதே அவரவரைக் கண்ட போதே**
**உகந்தடிமைத் திறம் நினைந்தங் குவந்து நோக்கி**
**இவர் தேவர் அவர் தேவர் என்று சொல்லி**
**இரண்டாட்டா தொழிந்து ஈசன் திறமே பேணிக்**
**கவராதே தொழுமடியார் நெஞ்சினுள்ளே**
**கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே. (6 : 61 : 3)**

### இதில் அமைந்த பொருள் வருமாறு

நெற்றியில் திருநீறு அணிந்து உருத்திராக்கம் பூண்டு வந்தவரைக் கண்டால், அவர் எவரேயாயினும், அஃதாவது எவ்வகைக் குற்றம் உடையவராயினும், அக்குற்றங்களை நினைந்து அவரை வெறுத்தல் செய்யாது, அவரைக் கண்டபோதே அவரது திருவேடத்தின் மேல் விருப்பம்

எழப்பெற்று, திருவேடம் காணக் கிடைத்ததே என்று மகிழ்ந்து அவரை விரும்பி நோக்கி, நாம் வழிபடுதற்கு உரியவர் இறைவன் அல்லவா? அத்திருவேடம் உடையாரும் நம்மால் வழிபடத்தக்கவர் தாமா? என்றெல்லாம் மனத்தை இருதலையாகச் செலுத்தாமல், இறைவனையும் அவரையும் ஒரே நிலையில் மனத்திற் கொண்டு, இறைவனை வழிபடுமிடத்துச் செய்யும் செயல்கள் அனைத்தையும் அடியவரிடத்தும் விரும்பிச் செய்து அவரைத் தொழுதல் வேண்டும். அப்படித் தொழுவார் நெஞ்சத்துள் சிவ பெருமானைக் காணலாம்.

மேற்காட்டிய பாடலில் உள்ள சில தொடர்களின் அமைப்பையும் பொருளையும் தெரிந்து கொண்டால் அப்பாடலை நன்கு விளங்கிக் கொண்டவராவோம்.

தொடக்கத்தில் உள்ள எவரேனும் தாமாக என்ற தொடரில் தாம் என்பது பொருள்தராத அசைச் சொல்.

எனவே அதை நீக்கி எவரேனுமாக எனக்கொண்டு, எவ்வகைக் குற்றம் உடையவராய் இருப்பினும் எனப் பொருள் கொள்ளப்பட்டது.

இவர் தேவர் அவர் தேவர் என்ற தொடரில் தேவர் என வந்த ஈரிடத்திலும் ஓகாரம் மறைந்திருக்கிறது. எனவே இவர் தேவரோ? அவர் தேவரோ? என அமைத்துக் கொள்ள வேண்டும். இவர் என்றது திருவேடம் உடையாரையும், அவர் என்றது இறைவனையும் குறித்தன. எனவே நம்மால் வழிபடுதற்கு உரியவர் இத்திருவேடம் உடையவரோ? அல்லது அவ்விறைவனோ? என்பது இத்தொடர் குறிக்கும் பொருளாகும்.

இரண்டு ஆட்டாது ஒழிந்து என்பதற்குச் சிவபிரானை வணங்குவதா? திருவேடமுடையாரை வணங்குவதா? என உள்ளத்தை இருதலையாக ஆராய விடாமல் என்பது பொருள்.

இறைவனிடத்துச் செய்யும் செயல்களையே இத்திரு வேடமுடையாரிடத்தும் செய்து அவரை வழிபடல் வேண்டும் என்ற கருத்து ஈசன் திறமே பேணி என்பதால் உணர்த்தப்பட்டது.

திருவேடம் உடையாரைச் சிவன் எனவே தெளிந்து அவரை வழிபடுதலில் ஒரு சிறிதும் பிறழாது இருத்தல் வேண்டும் என்பது இத்திருப்பாட்டில் பெரிதும் வலியுறுத்தப்பட்டுள்ளமை காணலாம்.

சீவன்முத்தர் முதல்வனது அருளைத் தலைப்பட்டு அதனோடு ஒன்றி, அவ்வருளால் முதல்வனை அறிந்து அவனிடத்து அழுந்தி நிற்கும் பேறு பெற்றவர். அந்நிலையை எய்திய பின்னரும் அவர்கள் திருக்கோயிலில் உள்ள திருவுருவங்களையும், திருவேடம் உடைய அடியார்களையும் வழிபட வேண்டுமோ? என்ற ஐயம் நமக்கு எழும்.

சீவன்முத்தர்க்கு உடம்பு உள்ள வரையில் உடம்பு முகந்து வந்த பிராரத்த வினையின் காரணமாக உலக நோக்கம் உண்டாகும்; நில்லாதவற்றை நிலையின என்றுணரும் மயக்கவுணர்வு வந்து கூடி மேம்படும். அம் மயக்கவுணர்வு நீங்கி மெய்யுணர்வு மேலோங்குதற்கு ஆலய வழிபாடும், மெய்யடியார்களை நாடி வழிபடுதலும் இன்றியமையாது வேண்டும்.

இது தொடர்பாக மற்றுமோர் ஐயம் எழலாம். பிராரத்தமும், அது காரணமாக வரும் மயக்கவுணர்வும் ஒழிதற்கு அஞ்செழுத்தை விதிப்படி உச்சரித்தலே போதும் ஆகலின், அதன் பொருட்டு வழிபாடு செய்தல் வேண்டும் என்பது எதற்கு? என ஐயுறலாம். அஞ்செழுத்து உச்சரிப்புச் சோர்வின்றி நிகழ்தலும் இவ்வழிபாடு உள்ள பொழுதேயாகும் என்பதைக் கருத்திற் கொண்டால் அவ்ஜயம் நீங்கிவிடும்.

இவ்விடத்தில், சேரமான் பெருமாள் நாயனார் பற்றிய ஒரு செய்தியைக் கூறுதல் பொருத்தமாகும். சேரமான் பெருமாள் முடி சூடிப் பட்டத்து யானை மீது முதல் உலா வரும்போது தோளில் உவர்மண் பொதியினைச் சுமந்து கொண்டு ஒரு வண்ணான் எதிரில் வந்தான். மழையினால் உவர்மண் கரைந்து அவன் உடலிற் படிந்து பெற்ற வெண்ணிறக் கோலத்தோடு முழுநீறு பூசிய முனிவர் போலத் தோன்றினான்.

சேரமான் பெருமாள் அவ்வுருவைச் சிவன் எனவே கண்டு யானையினின்றும் இறங்கி அவனைக் கைகூப்பித் தொழுதார். அரசர் பெருமான் தன்னைத் தொழுவதைக் கண்டு அஞ்சிய அவ்வண்ணான் தேவரீர் அடியேனை யார் எனக் கருதியது? அடியேன் அடி வண்ணன் என்றான்.

சேரர் பெருமான் நிலையாத அரச வாழ்க்கையைப் பெரிதாக எண்ணும் மயக்கவுணர்வு சிறிதும் இல்லாமல், திருவேடமே மெய்ப்பொருள் என்று உணர்ந்த அம்மெய்யுணர்வு நிலையில் நின்று பின்வருமாறு கூறினார்.

திருநீற்று வாரவேடம் நினைப்பித்தீர். அடியேன் அடிச் சேரன். வருந்தாது ஏகும் என்று கூறி அவனைப் பிரிந்தார்.

உலகம் எப்படிப்பட்டவரையும் தன் வழியில் இழுத்துக் கீழ்நெறியிற் செலுத்திவிடும். ஆதலால் அதற்கு இடங்கொடாமல் சீவன்முத்தர் மெய்யன்பர்களை வழிபட்டு அவர்கள் நடுவே எப்போதும் இருத்தல் வேண்டும். அம்மெய்யன்பர்களை சிவஞானத்தை நன்கு தெளியச் செய்து, மும்மலங்களாகிய படுகுழியினின்றும் கரையேற்றி, முதல்வன் திருவடியில் சேர்ந்து நிற்கச் செய்வர். அத்தகைய அன்பர் கூட்டத்தை அடைந்திருத்தலே சீவன்முத்தர் தாம் எய்த விரும்பும் பயனை எய்துதற்கு வழியாகும்.

## சாதகரும் சீவன் முத்தரும்

சரியை கிரியை முதலிய சாதனங்களில் நிற்போரும் குருலிங்க சங்கம வழிபாட்டினைச் செய்கிறார்கள். சாதனத்தில் நின்று பெறக் கூடிய சாத்தியமாகிய ஞானத்தைப் பெற்றுவிட்ட சீவன்முத்தர்களும் குரு லிங்க சங்கம வழிபாட்டினைச் செய்கிறார்கள் என்றால் இவ்விருவருக்கும் வேறுபாடுதான் என்ன? என்று கேட்கலாம்.

ஓர் எடுத்துக்காட்டின் மூலம் இதனை விளக்குவோம். மாணாக்கர்கள் நாள்தோறும் பாடம் படிக்கிறார்கள். மெய் வருத்தம் பாராமல், பசி நோக்காமல், கண் துஞ்சாமல் படிக்கிறார்கள். அவர்களைப் போலவே, பாடம் நடத்துகிற ஆசிரியரும் நாள்தோறும் படிக்கிறார். குறிப்பெடுக்கிறார். ஆனால் இவ்விருவர் படிப்புக்கும் வேறுபாடு உண்டு அல்லவா? மாணாக்கர்கள் அறிவை ஈட்டுவதற்காக முயன்று உழைத்துப் படிக்கிறார்கள். ஆசிரியரோ முன்னரே கற்று வைத்த பொருளை நினைவு படுத்திக் கொள்வதற்காகப் படிக்கிறார். இவர் உழைத்துப் படிக்கவேண்டியதில்லை. சற்றே புத்தகத்தைப் புரட்டினால் போதும். எனவே இவ்விருவர் படிப்புக்கும் பெரிதும் வேறுபாடு உள்ளது என்பது புலனாகும்.

இதே போலத்தான் சரியை முதலிய சாதனங்களில் நிற்போர் சிவஞானத்தைப் பெறுவதற்காகக் குரு லிங்க சங்கம வழிபாட்டை மேற்கொள்கிறார்கள். சீவன்முத்தரோ தாம் முன்னரே பெற்றுள்ள சிவஞானத்தை நிலைநிறுத்திக் கொள்வதற்காக அவ்வழிபாட்டினை மேற்கொள்கிறார்கள்.

எனவே, சாதகரும் சீவன் முத்தரும் செய்யும் வழிபாடு தோற்றத்தில் ஒன்று போலக் காணப்படினும் பெரிதும் வேறுபட்டு நிற்கும் என்பது அறியற்பாலது.

## பத்திதனில் நின்றிடுவர்

வாழ்க்கையில் அடையவேண்டிய மேலான பேறு சிவத்தைப் பெறுதலே. உயிர்களுக்கு அதனினும் சிறந்த பேறு வேறொன்றுமில்லை.

சிவமோ ஆராலும் காண்டற்கரிய பொருள். அதனை எவ்வாறு அடைவது?

அன்பே அவனை அடைதற்கு வழி என்று சாத்திரங்களும் தோத்திரங்களும் ஒருமுகமாகக் கூறுகின்றன. அவனை அடைவதற்குத் தடையாய் இருப்பது நான் என்னும் தற்போதம் ஆகும். நான் என்று உயிர் தன்னைத் தனித்து நிற்கும் பொருளாக எண்ணுகின்ற வரையில் அது இறைவனோடு ஒன்ற முடியாது. உப்பானது நீரோடு கலந்து ஒன்றுபட வேண்டுமானால் உப்பினது கட்டித்தன்மை கெட வேண்டும். அதுபோல உயிர் இறைவனோடு ஒன்றுபட வேண்டுமானால் நான் என்ற தற்போதம் கெடவேண்டும். உள்ளம் உருகில் உடனாவார் என்ற ஞானசம்பந்தர் திருவாக்கு (2 :111: 3) இக்கருத்தை உட்கொண்டு எழுந்ததாகும். இதில் உள்ளம் என்பது நான் என்னும் தற்போதத்தைக் குறிக்கும். உருகுதலாவது, அத் தற்போதம் கெட நிற்றல். எனவே, உள்ளம் உருகுதல் என்பது யான் எனது என்னும் செருக்கு நீங்கிய நிலையை உணர்த்துகிறது.

தற்போதம் நீங்கிய பொழுது உயிர்க்குயிராய் என்றும் உடனிருப்பவனாகிய இறைவன் அவ்வுயிரைத் தனது பெருநிறைவினுள் அடக்கிக் கொண்டு தானாகிநிற்பன். கட்டித் தன்மை நீங்கிய உப்பை நீரானது தன்னுள் அடக்கித் தானாய் நிற்றல் போன்றது இது.

**யானாகிய என்னை விழுங்கி வெறும்**
**தானாய் நிலை நின்றது தற்பரமே**

என்ற கந்தரனுபூதி வரிகள் இவ்வனுபவத்தையே உணர்த்தி நிற்கின்றன.

மேற்கூறியவற்றால், அன்பே இறைவனை அடைவிப்பது என்பதும், அன்பினால் உள்ளம் உருகப் பெறாதவர் அவனை அடைதல் இயலாது என்பதும் விளங்கும். இதனை,

**நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே**
**புக்கு நிற்கும் பொன்னார் சடைப் புண்ணியன்**
**பொக்கம் மிக்கவர் பூவும் நீரும் கண்டு**
**நக்கு நிற்பன் அவர்தம்மை நாணியே**

என்னும் அப்பர் பெருமான் திருவாக்கு நன்கு வலியுறுத்தி நிற்றல் காணலாம்.

**யாவராயினும் அன்பரன்றி**
**அறியொணா மலர்ச் சோதியான் (சென்னிப்பத்து, 1)**

என்று மணிவாசகரும் கூறியுள்ளார்.

**ஆரேனும் அன்பு செயின் அங்கே தலைப்படுங்காண்**
**ஆரேனும் காணா அரன்**

என்று திருக்களிற்றுப் படியார் என்னும் சாத்திர நூல் கூறும்.

இறைவனிடத்துச் செலுத்தும் அன்பிலே இருநிலைகள் உண்டு. இறைவனை வழிபட்டால் இது கிடைக்கும் என்று ஒரு பயன் கருதி அன்பு செலுத்துவது முதல் நிலை. இது காமிய பக்தி எனப்படும். இவ்வாறு பயன் கருதி நிகழ்ந்த அன்பு சிறிது சிறிதாக மாறிப் பின் பயன் கருதாத அன்பாய் நிகழும். இது நிட்காமிய பக்தி எனப்படும். இதுவே இறைவன் மீது கொண்ட முதிர்ந்த அன்பாகும். உண்மையன்பாகும்.

இம் மெய்யன்பு கைவரப் பெற்றவர் வேறொன்றையும் விரும்பாது இறைவனை, கனியினும் கட்டிபட்ட கரும்பினும் பனிமலர்க்குழற் பாவை நல்லாரினும் தனிமுடி கவித்து ஆளும் அரசினும் இனியவனாக உணர்ந்து, அவனையே மேலும் மேலும் விரும்புவர்; இறைவன் எமது துன்பத்தைக் களையாதவனாயினும் ஆகுக. எம்மீது இரக்கம் கொள்ளாதவனாயினும் ஆகுக. எக்காரணத்தாலும் அவனிடத்துக் கொண்ட எம் அன்பு நீங்குவதில்லை என இறைவனையே நினைந்திருப்பர். உலகையெல்லாம் ஒரு குடைக்கீழ் ஆளும் முடியரசர் செல்வத்தினும் மூன்று மடங்கு உயர்ந்தது, சிவனுக்குத் தொண்டு செய்து ஓடேந்தி இரந்து உண்பது என மதித்து அவனுக்குத் தொண்டு செய்வர். அவன் தமக்குச் செய்த செய்து கொண்டிருக்கின்ற உபகாரத்தை நினைந்து நினைந்து மனங்கசிந்து உருகிக் கண்ணீர் பெருகி நிற்பர்.

இத்தகைய அன்பு நெறியில் நின்று, சீவன் முத்தராய் உள்ளோர் திருக்கோயில் வழிபாட்டிலும், சிவனடியார் வழிபாட்டிலும், ஆசாரிய பக்தியிலும் உறைத்து நிற்பர் ஆதலால், மாணவனே, நீயும் அவ்வழிபாட்டினைச் செய்து உய்தியடைவாயாக என்று ஆசிரியர் இப்பாடல் வழியாக அறிவுறுத்துகிறார்.

**மாணவரின் நன்றியுரை**

**53. வாழ்ந்தேன் அருட்கடலே வற்றாப் பவக்கடலில்**

**வீழ்ந்தே அலையாமல் மேதினியில் சூழ்ந்துவிடா**

**வெண்ணைச் சுவேதவன மெய்கண்ட நாதனே**

**உண்மைத் தவப்பயனே உற்று.**

**பதவுரை**

**சூழ்ந்து** மெய்யன்பர்கள் எப்பொழுதும் சூழ்ந்து கொண்டு

**விடா** நீங்காமல் உள்ள,

**வெண்ணைச் சுவேதவன** திருவெண்ணெய் நல்லூரை வாழிடமாகக் கொண்ட, சுவேதவனப் பெருமாள் என்னும் பிள்ளைத் திருநாமம் உடைய,

**மெய்கண்ட நாதனே** மெய்கண்டநாதரே,

**அருட்கடலே** கருணைக் கடலாக உள்ளவரே,

**உண்மைத் தவப்பயன்** அடியேன் முன்முன் பிறவிகளிற் செய்த உண்மையான தவத்தின் பயன்

**உற்று** இப்பொழுது வந்து கைகூடியதனால்

(உம்மைப் புகலாக அடைந்து சிவஞான உபதேசம் பெற்றேன். அதனால்)

**மேதினியில்** உலகில்

**வற்றா** சிறிதும் குறையாமல் இடையீன்றித் தொடர்ந்து வருகின்ற

**பவக் கடலில்** பிறவியாகிய கடலில்

**வீழ்ந்து** அலையாமல் வீழ்ந்து வருந்தாமல்

**வாழ்ந்தேன்** நிலைத்த சிவானந்த வாழ்வைப் பெற்றேன்.

## பொழிப்புரை

சைவ சித்தாந்த ஞானத்தை நல்கித் தன்னை ஆட்கொண்ட அருட் குரவராகிய மெய்கண்ட தேவரின் திருவடித் தாமரைகளைத் தொழுதிறைஞ்சித் தனது நன்றியறி தலைப் பின்வருமாறு புலப்படுத்துகிறார் மாணவர்.

கண்ணுதலையும் கறைமிடற்றையும் மறைத்தருளி மண்ணிடையே வந்து திருவெண்ணெய்நல்லூரில் எழுந்தருளியிருக்கும் மெய்கண்ட நாதரே! சுவேதவனப் பெருமாள் என்னும் பிள்ளைத் திருப்பெயரை உடையவரே! அருட்கடலே! அடியேன் முற் பிறவிகளிற் செய்த உண்மைத் தவத்தின் பயனால் உமக்கு ஆட்பட்டேன்; வற்றாத பிறவிக் கடலில் வீழ்ந்து தடுமாறாமல் உண்மை வாழ்வைத் தலைப்பட்டேன். (இதற்கு எளியேன் செய்யும் கைம்மாறும் உண்டோ? அடியேன் நின் அடைக்கலம். வாழிய நின் மலரடிகள்!)

## திருச்சிற்றம்பலம்